THE HON. SRI R. VENKATARAMAN : We have one *de luxe* bus, Sir.

*Cycle Manufacturing and Assembly Unit in Udayarpalayam taluk*

MR. SPEAKER : The hon. Member Sri K. R. Viswanathan is not in his seat. Question No. 856-B and the answer will be printed in the proceedings.

* 856-B *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to start a Cycle Manufacturing and Assembly Unit in Udayarpalayam taluk, Tiruchirappalli district;

(*b*) if not, in which other places such units are proposed to be started;

(*c*) the reasons for choosing those places; and

(*d*) whether any initiative and efforts are necessary from private sector for starting such a factory?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No, Sir.

(*b*) Vellore and Tanjore;

(*c*) The Unit at Vellore is to be set up as an adjunct to the General Purposes Engineering Workshop utilizing the facilities available in that workshop for electroplating work. These places have been chosen as part of the programme for even distribution of industries in various parts of the State and in view of the industrial backwardness of the districts.

(*d*) Yes, Sir. The private sector should possess the requisite background and aptitude to start a Cycle Assembly Unit. The prior approval of the Government of India is also necessary. It is only with a view to encourage the establishment of ancillary units for the manufacture of cycle parts by the private sector these departmental units have been sanctioned.

MR. SPEAKER : Questions are over.

**[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

II.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1959–60—*cont.*

DEMAND XXI—CO-OPERATION.

* THE HON. SRI R. VENKATARAMAN : Sir, on the recommendation of the Governor, I move—

'That the Government be granted a sum not exceeding Rs. 1,86,49,100 under Demand XXI—Co-operation.'

கனம் சபாநாயகர் அவர்களே, ஓரிரண்டு வார்த்தைகள் இப்பொழுது சொல்லி இந்த மானியக்கோரிக்கையை நான் பிரேரேபிக்கிறேன்.

கடந்த ஆண்டு—1958–59-ம் வருஷத்தில் என்னென்ன செய்யப்பட்டிருக்கிறது என்பதையெல்லாம் அச்சிட்டு கனம் அங்கத்தினர்களுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. குறிப்பாக 7-வது பக்கத்தில் இருக்கின்ற சில புள்ளி

17th March 1959] [Sri R. Venkataraman]

விவரங்களை மாத்திரம் நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். 1958–59-ல் 80 சத விகிதம் உள்ள கிராமங்களில் கூட்டுறவு இயக்கம் பரவவேண்டு மென்று திட்டம் வகுத்திருந்தோம். ஆனால் ஜனவரி மாதம் 31-ந் தேதிக்குள்ளாகவே 84.1 சதவிகிதம் கிராமங்களுக்கு கூட்டுறவு இயக்கம் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. ஜனத்தொகை அளவில் 40 சதவிகிதம் ஜனங் களைக் கூட்டுறவு இயக்கத்தில் சேர்க்கவேண்டுமென்பது நம்முடைய திட்டம். ஆனால் ஜனவரி 31-ம் தேதி வரை 34 சத விகிதம் ஜனத்தொகை அளவுக்குத்தான் கூட்டுறவு இயக்கம் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. கடன் கொடுக்கிற தொகைகூட சென்ற வருஷத்திய பட்ஜட்டின் போது 13½ கோடி ரூபாய் இந்தக் கூட்டுறவு இயக்கத்தின் மூலமாகக் கொடுப்பதாக ஏற்பாடு செய்திருந்தோம். அந்த முறையில் ஜனவரி 31-ந் தேதிக்குள்ளாக 13 கோடி 30 லட்சம் ரூபாய் கடன் உதவி செய்தாகிவிட்டது. பெரிய "Agricultural Banks—Large-sized societies" என்று. சொல்லுகிற சொசைடிகள் 60 நிறுவுவதாகத் திட்டம். ஜனவரி 31-ம் தேதி வரை 56 நிறுவப்பட்டாகிவிட்டது. மேலும் 4 சொசைடிகள் ஜூலை மாதம் 31-ம் தேதிக்குள் நிறுவப்பட்டாகிவிடும். அதற்கான ஏற்பாடு செய்தாகிவிட்டது.

சிறு சொஸைடிகளைப் பொறுத்தவரையில் நமக்கு இவ்வளவுதான் வைக்கவேண்டுமென்று ஐந்தாண்டுத் திட்டத்தில் எவ்விதமான வரை யறையும் கிடையாது. நாம் 200 சொஸைடிகளை வைக்கலாம் என்று கடந்த வருஷ பட்ஜெட்டின்போது சொன்னேன். அதற்குமேலாக 1959-ம்ஸு ஜனவரி மாதம் 31-ந் தேதிக்குள் 262 சிறு வில்லேஜ் சொஸைடிகளை ஆரம்பித்திருக்கிறோம்.

அதுபோல நில அடமான பாங்குகள் 5 வைப்பதாகத் திட்டமிட்டிருந் தோம். அதில் 4 வைத்தாகிவிட்டது. இன்னும் ஒன்று வைப்பதற்கும் ஏற்பாடு செய்துகொண்டிருக்கிறோம். விளைபொருள்கள் எல்லாவற்றையும் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்காக மார்க்கெட்டிங் சொஸைடி—அபெக்ஸ்-சொஸைடி—ஒன்று வைக்க திட்டமிட்டிருந்தோம். அப்படியே ஒன்று வைத்தாகிவிட்டது. பிரைமரி மார்க்கெட்டிங் சொஸைடி 6 வைப்ப தற்கு திட்டமிட்டிருந்தோம். அவற்றில் 4 வைத்தாகிவிட்டது. கோடவுன்ஸ் களை எடுத்துக்கொண்டால் சென்ற 1958–59-ம் ஆண்டிலே 60 கட்டு வதற்குத் திட்டமிட்டிருந்தோம். இதுவரையில் 26 கட்டி முடித்தாகிவிட்டது. மற்றதில் இப்போது தரை மட்டம், கூரை மட்டம் என்ற அளவில் வேலை நடந்து கொண்டிருக்கிறது.

இன்னும் நம்முடைய விவசாயத்தை கூட்டுறவு மூலம் அமைக்கவேண்டு மென்ற கொள்கை அடிப்படையில் 15 கூட்டுறவு விவசாயப் பண்ணைகள் வைப்பதாக ஏற்பாடு செய்தோம். அவற்றுள் 14 கூட்டுறவு விவசாயப் பண்ணைகளை 1959-ம்ஸு ஜனவரி மாதம் 31-ந் தேதிக்குள் ஏற்படுத்தி விட்டோம்.

இப்படிப் பல விவரங்களைப் பார்க்கிறபோது கடந்த ஆண்டிலே நம் அரசாங் கம் திட்டமிட்டதற்கு மேலாகப் பலதுறைகளிலும் இந்தக் கூட்டுறவு இயக்கம் முன்னேறி வந்திருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அடுத்த ஆண்டில் கூட இன்னும் என்னென்ன அதிகமாகச் செய்யவேண்டுமென்று இப்போது வரவு செலவுக் கணக்கில் ஏற்பாடு செய்திருக்கிறோம். உதாரண மாக 1960-ம் வருஷத்தில்—இன்றைக்கு 84.1 சத விகிதம் கிராமங்களுக் குத்தான் கூட்டுறவு விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னேன், இந்த ராஜ்யத்திலுள்ள எல்லா கிராமங்களுக்கும் கூட்டுறவு சொஸைட்டிகளை விஸ்தரித்துவிடவேண்டும் என்கிற திட்டத்தை வைத்திருக்கிறோம். அப்படியே இன்றைக்கு மொத்த ஜனத்தொகையில் 34 சத விகிதம் மக்களுக்குத்தான் இதன் பயன் கிடைக்கிறது. வரும் வருஷத்தில் 45 சத விகிதம் மக்கள் இந்தக் கூட்டுறவு இயக்கத்தின் கீழ் வரவேண்டும் என்கிற திட்டத்தையும் வைத்திருக்கிறோம். இந்த சொஸைடிகளின் மூலமாகக் கடந்த ஆண்டில் 13.50 கோடி ரூபாய் உதவி செய்வதாகத் திட்டம் போட்டோம். இந்த

[Sri R. Venkataraman] [17th March 1959

ஆண்டில் 16 கோடி ரூபாய் கொடுக்கவேண்டுமென்ற திட்டத்தை வைத்திருக்கிறோம். இன்னும் 4 புது அடமான பாங்குகள் ஏற்படுத்த வேண்டுமென்பது இன்றைக்கு நம்முடைய நோக்கம்.

புல் பிஞன்ஸ் ஸ்கீம் இப்போது 8 ஜில்லாக்களில் அமுல் நடத்தப்பட்டு வருகிறது. இதை ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒவ்வொரு ப்ளாக்கிலும் ஏற்படுத்தவேண்டுமென்ற நோக்கத்தை வைத்திருக்கிறோம்.

அடுத்தபடியாக கூட்டுறவு விவசாயத்தை எடுத்துக்கொள்ளுவோமானால் வருகிற வருஷத்தில் 21 கூட்டுறவு விவசாயப் பண்ணை வைக்கவேண்டுமென்ற திட்டத்தை வகுத்திருக்கிறோம். பால் சப்ளை முதலியவற்றைப் பற்றி இன்னும் 1959–60-ம் வருஷத்தில் 35 சொஸைடிகள் ஏற்படுத்த வேண்டும் என்றும் இன்னும் பால் உற்பத்தி ஐம்பத்தெட்டாயிரத்து எண்ணூற்று நாற்பது மெட்ராஸ் மெஷர் உற்பத்தி செய்ய வேண்டுமென்ற திட்டம் இருக்கிறது.

வீடு கட்டும் திட்டத்தை எடுத்துக் கொண்டால் 1959-60-ம் வருஷத்தில் இண்டஸ்டிரியல் கோவாப்ரேடிவ் ஹவுஸிங் ஸ்கீமின் கீழ் இரண்டு புது சொஸைடிகளும், 3 டெனமெண்டுகளும் கட்டுவதாக ஏற்பாடு செய்திருக்கிறோம். இதைத்தவிர லோ இன்கம் க்ரூப் திட்டப்படி 320 வீடுகள் அடுத்த வருஷத்தில் கட்ட வேண்டுமென்று யோசனை இருக்கிறது. சென்னை ராஜ்ய நிதியிலிருந்து கடந்த வருஷத்தில் 17 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருந்தோம். அது போதவில்லையென்று நடைமுறை வருஷத்திலேயே இன்னும் 3 லட்சம் ரூபாய் அதிகம் ஒதுக்கினோம். ஆக சென்ற ஆண்டில் 20 லட்சம் ரூபாய் ஆயிற்று. இப்போது 1959–60-ம் வருஷத்திற்கு 30 லட்சம் என்று ஒதுக்கி வைத்திருக்கிறோம்.

இன்னும் கூட்டுறவு முறையில் சிறு தொழில்கள் செய்வதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. சர்க்கார் நடத்துகிற சிறு தொழில்கள் எல்லாவற்றையும் நாளடைவில் கூட்டுறவு சங்கங்களாக மாற்றி அதில் தொழில்வேலை செய்கின்றவர்களுக்கு ஒதுக்கவேண்டுமென்ற நோக்கம் இருந்து வருகிறது. சென்னை ராஜ்யத்தைப் பொறுத்த அளவில் கூட்டுறவு இயக்கம் சிறந்த முறையில் நடைபெற்று வருகிறது என்று அகில இந்திய ரீதியிலேயே ஏற்றுக்கொள்கிறார்கள்., ஆனால் புதிதாக அமைக்க இருக்கிற சமுதாயத்திற்கு ஒத்தபடி கூட்டுறவு இயக்கத்தைச் சிறந்த முறையில் நடத்தவேண்டுமென்று நமது ராஜ்யத்தில் எவ்வளவு அதிகமாக கூட்டுறவு பண்ணைகளை ஆரம்பிக்கிறோமோ, எவ்வளவு அதிகமாக கூட்டுறவு கைத்தொழில்களை ஆரம்பிக்கிறோமோ அவ்வளவு அவ்வளவுதான் நம்முடைய லட்சியம் வெற்றிகரமாகப் பூர்த்தியாகும்.

இறுதியில் இந்த இலாகா இவ்வளவு சிறந்த முறையில் நடைபெற்று வந்திருக்கிறது என்றால் இதற்கு முக்கியமான பொறுப்பு உடையவராக இருந்தவர் இப்போது ஓய்வு எடுத்துக்கொண்டிருக்கிற ஸ்ரீ பழனியப்ப முதலியார் அவர்கள். அவர்கள் இந்த ராஜ்யத்து ரிஜிஸ்டிராராக சேவை செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய பெரு முயற்சியினால்தான் கூட்டுறவு இயக்கம் மிக வெற்றிகரமாக நடந்திருக்கிறது. இன்று அவர் பதவியிலிருந்து ஓய்வு பெறும்போது சர்க்கார் இந்தச் சபையின் மூலமாக அவரது வேலைக்கு பாராட்டுதல் தெரிவித்துக்கொள்கிறார்கள் என்று சொல்லி, இந்த மானியக் கோரிக்கையை அங்கத்தினர்கள் எல்லோரும் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : எதிர்க்கட்சியில் உள்ளவர்கள் சேர்ந்து ஸ்ரீ எ. மாரிமுத்து கொடுத்திருக்கக்கூடிய வெட்டுப்பிரேரணையை பிரேரிப்பதற்கு ஒப்புக்கொண்டிருப்பதன் காரணமாக ஸ்ரீ மாரிமுத்து அவர்களை அவருடைய வெட்டுப்பிரேரணையை பிரேரிக்கும்படியாக அழைக்கிறேன். முதலில் பிரேரிக்க வேண்டும். அதற்குப் பிறகு பிரசங்கம் செய்யலாம்.

**Sri A. R. MARIMUTHU** : நான் என்னுடைய வெட்டுப்பிரேரணையைப் பிரேரிக்கிறேன்.

17th March 1959] [Sri A. R. Marimuthu]

Sir, I move—

"That the allotment of Rs. 1,86,49,100 under Demand XXI—Co-operation—be reduced by Rs. 100"

MR. SPEAKER : கனம் மந்திரி அவர்களுக்குப் பதில் அளிக்க எவ்வளவு நேரம் வேண்டும்.

THE HON. SRI R. VENKATARAMAN : அரை மணி போதும்.

MR. SPEAKER : வெட்டுப் பிரேரணையைப் பிரேரிப்பவர்களுக்கு 20 நிமிஷங்கள் கொடுக்கிறது வழக்கம். சோஷலிஸ்டுக் கட்சித் தலைவர் இருவர் பேசவேண்டி இருப்பதனால் 10 நிமிஷம் கொடுக்கிறேன். அதற்குப் பிறகு ஸ்ரீ நல்லசிவத்திற்கும் கூட பத்து நிமிஷம் கொடுக்கிறேன்.

The Demand and the cut motion are before the House for discussion.

* SRI A. R. MARIMUTHU : கனம் சபாநாயகர் அவர்களே, இன்றையதினம் நம்முடைய தேசத்தின் முன்னேற்றத்திற்கு அடிப்படையாக இருப்பது கூட்டுறவு இயக்கந்தான். கூட்டுறவு இயக்கம் நம் ராஜ்யத்தில் இன்னும் நல்லமுறையில் வளர்க்கப்படவேண்டும் என்பதில் யாருக்கும் ஆட்சேபணை இருக்க முடியாது. நம்முடைய ராஜ்யம் இத்துறையில் இதர ராஜ்யங்களுக்கெல்லாம் வழிகாட்டியாக இருக்கிறது என்பதைக் கேட்கும் போது நாம் பெருமைப்பட வேண்டும்.

(Sri V. K. Kothandaraman in the Chair.)

நாம் கூட்டுறவு இயக்கத்தில் எந்த அளவு வெற்றிபெறவேண்டுமென்று விதி வகுத்துக் கொண்டோமோ அந்த அளவுக்கு முன்னேறியிருக்கிறோம் என்பதைக் குறிப்பிட்டாக வேண்டும். இருந்தாலும் இன்றையதினம் கூட்டுறவு அமைப்பில் இருக்கக்கூடிய பல கஷ்டங்கள், இவை உண்டாவதற்குக் காரணமாக இருக்கக் கூடிய பல சட்டங்கள் இதைப்பற்றி எல்லாம் இந்தச் சபையில் பல அங்கத்தினர்கள் நீண்டகாலமாக குறிப்பிட்டு வந்திருக்கிறார்கள். இதையெல்லாம் கவனித்து எல்லாச் சட்டங்களையும் ஒருமிக்க ஒரு சட்டமாக ஒரு (Comprehensive Act) காம்ரிஹென்சிவ் ஆக்டாக கொண்டு வருவார்கள் என்று எண்ணிக்கொண்டிருக்கையில் அவ்வாறு கொண்டுவரப்படாமல் இருப்பதற்கு வருந்தாமல் இருக்க முடியாது. எல்லாத் துறையிலும் கூட்டுறவு நல்ல வளர்ச்சி அடைய வேண்டுமென்று கூறிக்கொண்டிருக்கும்போது இத்துறையில் சர்க்கார் இதுவரையிலும் கவனம் செலுத்தாதது கூட்டுறவு இயக்கத்தின் வளர்ச்சிக்குக் குந்தகமாக இருக்கும் என்பதில் சந்தேகம் கிடையாது. இதை மனதில் கொண்டு அடுத்த ஆண்டிற்குள்ளாவது ஒரு காம்பிரிஹென்சிவ் லெஜிஸ்லேஷன் கொண்டு வருவதற்கு முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். காரணம் இன்றைக்கு இருக்கிற சட்டங்களின்படி எவ்வளவோ கஷ்டங்கள் உண்டாகின்றன.

அதுமட்டுமல்ல, ஒரு சந்தர்ப்பத்தில் ஒருவர் நிர்வாகஸ்தராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டால் அவரைவிட்டு வேறு ஒருவருக்கு மாற்றவே முடியாத நிலைமை இருக்கிறது. இந்த மாதிரி கூட்டுறவு இயக்கத்தில் தலைமை தாங்கி நடத்துகிறவர்கள் என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்ற முறையில் அவர்கள் செய்துகொண்டே போகிற செயல்களினால் பொது மக்களுக்கு இதிலுள்ள நம்பிக்கை பெரும் அளவு பாதிக்கப்படுகிறது. இந்த மாதிரி மோசமான நிலைமை ஏற்படாமல் இருப்பதற்கு முயற்சி செய்யவேண்டும்.

(Mr. Speaker in the Chair.)

இன்றைக்கு இந்த இயக்கத்தை தங்களுக்குச் சாதகமாக எப்படி ஆக்கிக் கொள்ள முடியும் என்கிற நோக்கத்தோடு பல பெரியவர்கள் பிரயத்தனப் படுகிறார்கள். பல இடங்களில் அரசியல் நோக்கத்தோடு கூட்டுறவு இயக்கத்தைப்

[Sri A. R. Marimuthu] [17th March 1959

பார்க்கிறார்கள். இந்த மாதிரி கண்ணோட்டத்தோடு நாம் பார்க்கவே கூடாது. எப்படிக் கல்வி துறையில் அரசியலைப் புகுத்தக்கூடாதென்பதை முடிவு செய்துகொண்டோமோ அப்படி எல்லா அரசியல் கட்சித் தலைவர்களும் ஒன்று கூடி, "கூட்டுறவு இயக்கத்தை அரசியல் கண்ணோட்டத்தோடு பார்ப்பதில்லை, இயக்கத்தை அதிகமாக பாதிக்கக்கூடிய அரசியலை இதில் புகுத்துவது கிடையாது" என்கிற பிரதிக்ஞையைச் செய்துகொண்டாகவேண்டும். இப்படிப்பட்ட நல்லதொரு முடிவுக்கு எல்லாக் கட்சியினரும் வருவதற்கு அமைச்சர் அவர்களும் தக்க முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இது மிக்க அவசியமானது. காரணம் எங்கள் பகுதியில் நடக்கிற சில காரியங்களைப் பார்க்கும்போது நான் மிகவும் வேதனைப்படாமல் இருக்க முடியாது. தேர்தலில் அரசியல் போட்டி, இதன் காரணமாக தலைவர் தேர்ந்தெடுக்கப்படுவதிலேயே காலதாமதம். இது எதைக் குறிக்கிறது ? கூட்டுறவு முறையில் மக்களுக்குள்ள நம்பிக்கை வளருவதற்கு இடையூறாக இருக்கின்றன. இந்த மாதிரியான மோசமான விவகாரங்கள் ஏற்படக்கூடாது. மனிதர்களுடைய பண்பு வளர வேண்டியது ஒரு புறமிருக்க, இத்தகைய மோசமான விவகாரங்கள் ஏற்படுவதற்கு சட்டமும் இடம் தரக்கூடாது. அதற்கேற்ற முறையில் சட்டம் திருத்தப்படவேண்டும். இதில் கவனம் செலுத்த வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

இப்போது, "புல் பைனான்ஸ் ஸ்கீம்" (Full Finance Scheme) என்ற ஸ்கீம் ஒன்று நடைமுறையில் இருக்கிறது. அது இன்னும் சில இடங்களுக்கு விஸ்தரிக்கப்படும் என்று இந்த அறிக்கையில் சொல்லப்பட்டி
9-30 a.m. ருக்கிறது. இந்தத் திட்டம் மிக மிக அவசியம்தான். இப்போது ஒரு விவசாயி தனக்கு வேண்டிய கடன்களுக்கு பல பேர்களைக் கெஞ்ச வேண்டியிருக்கிறது. கூட்டுறவு ஸொஸைட்டி, தாசில்தார், நில அடமான பாங்கு முதலிய பலரையும் பல ஸ்தாபனங்களையும் கெஞ்ச வேண்டியிருககிறது. அவன் ஒரே ஸ்தாபனத்தின் மூலம் தனக்கு வேண்டிய கடன்களைப்பெற இந்த புல் பைனான்ஸ் ஸ்கீம் உதவுகிறது. ஆனால் இப்போதிருக்கும் முறையில் இந்த ஸ்கீம் எப்படி இருக்கிறது என்றால், விவசாயிக்குத் தேவையான சிறு கடன்களைக் கொடுப்பதற்கு மட்டும்தான் உபயோகப்படுகிறது. அவர்கள் தங்கள் பழைய கடன்களைத் தீர்ப்பதற்கு உதவக் கூடிய முறையில் இத்திட்டத்தின் நோக்கம் விஸ்தரிக்கப்பட வேண்டும் என்று கூற விரும்புகிறேன். அவர்களுக்கு அவர்களுடைய அன்றாடத் தேவைகளுக்கு வேண்டிய சிறு கடன்களைக் கொடுத்து உதவுவதுடன் மட்டுமன்றி அவர்களுடைய பழைய கடன்களைத் தீர்ப்பதற்கும் உதவுவதற்கு இத் திட்டத்தின் மூலம் முயற்சிக்க வேண்டும். சாதாரணமாக, நான் கூறும் இந்த யோசனையை ஏதாவதொரு குறிப்பிட்ட ப்ளாக்கில் நடைமுறையில் சோதனை செய்து பார்க்கலாம்; பிறகு இத் திட்டத்தை விஸ்தரிக்கலாம். இன்று விவசாயிகள் பலதரப்பட்ட கடன்களால் கஷ்டப்படுகிறார்கள். அந்தக் கடன்களிலிருந்து அவர்களை விடுவிப்பதற்காக, அவர்களுக்கு நில அடமான பாங்குகள் மூலம் கடன்கள் கொடுக்க முயற்சிக்க வேண்டும். ஓரிடத்தில் இதைப் பரீட்சார்த்தமாக நடத்தலாம். பிறகு வேண்டுமானால் மற்ற இடங்களுக்கு விஸ்தரிக்கலாம். அவ்வாறில்லாமல் இப்போது கைத்தறி நெசவாளர்களுக்கு அளிக்கப்படும் ரிபேட். . .

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, கைத்தறி கூட்டுறவிலும் வருகிறது, இண்டஸ்ட்ரீஸிலும் வருகிறது. கைத்தறி சம்பந்தமான பிரச்னைகளை இண்டஸ்ட்ரீஸுடன் சேர்த்துப் பேசுவது நல்லது என்று நினைக்கிறேன். ஆகவே கைத்தறி சம்பந்தமான விஷயங்களையெல்லாம் இண்டஸ்ட்ரீஸுடன் சேர்த்து விவாதிக்கலாம் என்று சொல்லிக்கொள்கிறேன்.

*SRI A. R. MARIMUTHU : கூட்டுறவு சம்பந்தப்பட்ட கைத்தறிப் பிரச்னைகள்கூட இண்டஸ்ட்ரீஸிலா ?

THE HON. SRI R. VENKATARAMAN : ஆமாம்.

17th March 1959]

* SRI A. R. MARIMUTHU : இப்போது நாட்டில் பரவலாக கூட்டுறவு சாகுபடி முறையைப்பற்றி வெகு விரிவாகப் பேசப்படுகிறது. கூட்டுறவு சாகுபடி முறையைக் கொண்டுவரத்தான் வேண்டுமென்று ஒரு புறத்திலும், அதைக்கொண்டு வந்தால் மோசமான நிலைமை ஏற்பட்டு உற்பத்தியே தலைகீழாகக் கவிழ்ந்து விடும் என்று மற்றொரு புறத்திலும் வாதிக்கப்படுகிறது. பொதுவாகப் பார்க்கும்போது, கூட்டுறவு சாகுபடி முறையால் சாகுபடி பாதிக்கப்பட்டுவிடும் என்ற வாதத்தை நாம் நிச்சயமாக ஏற்றுக்கொள்ளவே முடியாது. இன்றைக்கு நிலங்கள் மிக சிதறுண்டு கிடக்கின்றன. நம் நாட்டில் சிறு சிறு நிலச்சொந்தக்காரர்கள்தான் அதிகமாக இருக்கிறார்கள். அவர்கள் தங்களுக்குத் தேவையான விவசாயக் கருவிகளை பெற முடியாததாலும், காலத்தோடு சாகுபடி செய்ய முடியாததாலும், வேண்டிய உபகரணங்களோடும் உரங்களோடும் சாகுபடி செய்ய முடியாததாலும், உற்பத்தி குறைந்திருக்கிறது. அவர்கள் கூட்டுறவுமுறையில் சாகுபடி செய்தால் உற்பத்தி நிச்சயமாகப் பெருகுமே தவிர குறையாது. உலகத்தில் பல நாடுகளில் கூட்டுறவு சாகுபடி முறை அமலில் இருப்பதைப்பின் பற்றி நம் நாட்டிலும் அதைப் புகுத்தினால் நிச்சயமாக பாதகம் ஏற்படாது. இப்போது ஜாயிண்ட் பார்மிங் சொஸைடிகள், டெனண்ட் பார்மிங் சொஸைடிகள் என்ற இரு வகைகள் இருக்கின்றன. ஜாயின்ட் பார்மிங் சொஸைடியில் நிலச் சொந்தக்காரர்கள் ஒன்று சேர்ந்து சாகுபடி செய்ய வேண்டுமென்று சொல்லும்போது, பக்கத்திலுள்ள நிலங்கள் குத்தகைக்கு கிடைக்குமேயானால் அவைகளையும் சேர்த்து ஜாயிண்ட் பார்மிங் சொஸைடியாக ரெஜிஸ்டர் செய்துகொள்வது இன்றுள்ள பைலாஸ்படி சாத்தியமல்ல. அதற்கு இன்றுள்ள பைலாஸ் இடம் கொடுப்பதில்லை. அந்த நிலங்களையும் ஜாயின்ட் பார்மிங் சொஸைடியில் ஏன் ரெஜிஸ்டர் செய்யக்கூடாது? அத்துடன் டெனண்ட் பார்மிங் சொஸைடியில் ஒரு நிலச்சொந்தக்காரர் சேர விரும்பினால் அவர் அதில் சேருவதற்கு வகை செய்யவேண்டும். மேலும். . .

MR. SPEAKER : உங்களுக்கு அளிக்கப்பட்ட நேரம் முடியப் போகிறது. நீங்கள் குறிப்பிட்ட காலத்திற்குள் பேசி முடிக்காவிட்டால், கனம் அங்கத்தினர் ஸ்ரீ நல்லசிவம் அவர்களுக்கு பேச சந்தர்ப்பம் கிடைக்காது. நீங்கள் உங்களுக்குள் ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டு பேச வேண்டும். I leave it to you. The choice is yours.

SRI A. R. MARIMUTHU : குத்தகைக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட நிலங்களையும் ஜாயிண்ட் பார்மிங் சொஸைடிகளாக ரெஜிஸ்டர் செய்துகொள்வதற்குக் குந்தகம் இல்லாத முறையில் பைலாஸ் மாற்றி அமைக்கவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக் கொள்கிறேன்.

SRI K. R. NALLASIVAM : மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இன்று இந்நாட்டில் மத்தியில் இருக்கும் ஆட்சியாளர்களுக்கும் மாநிலங்களில் இருக்கும் ஆட்சியாளர்களுக்கும் கூட்டுறவு முறையில் விவசாயம் செய்வதுபற்றி நீண்ட விவாதம் செய்துவருகிறார்கள். இந்த விஷயத்தைப் பொறுத்தவரையில் நாட்டில் இரு சாரார் இருக்கிறார்கள்; இரு விதமான கருத்துக்கள் கூறப்படுகின்றன. இன்று கூட்டுறவு விவசாயத்தின் மூலம்தான் இந்த நாட்டில் விவசாயத்தை சீர்திருத்தி உற்பத்தியைப் பெருக்க முடியும் என்று ஒரு சாரார் கூறுகின்றனர். மற்றொரு சாரார், கூட்டுறவு விவசாயம் இந்த நாட்டில் வந்தால் உற்பத்தி நிச்சயம் குறைந்துவிடும் என்று கூறுகின்றனர். இதிலே ஒரு பெரும் கிளர்ச்சி நடந்துவருகிறது. எங்களைப் பொறுத்தவரையில், கூட்டுறவு விவசாயத்தின் மூலமாகவே இந்த நாட்டில் விவசாயத்தை சீர்திருத்த முடியும் என்ற கொள்கையில் நாங்கள் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவர்கள். ஆனால் அதே நேரத்தில் இன்று நாட்டு மக்களுக்கு கூட்டுறவு இயக்கத்தில் உள்ள நம்பிக்கையையும் கணக்கில் எடுத்துக்கொண்டு இப்பிரச்னையைப் பரிசீலித்தாகவேண்டும். 1950-ம் வருஷம் முசோரியில் நடந்த கூட்டுறவு மகாநாட்டில், இந்த தேசத்தில் 5 லட்சம் கூட்டுறவு விவசாயச் சங்கங்களை நிறுவவேண்டும் என்று திட்டமிடப்பட்டது. அந்தத் திட்டம் நிறைவேறியிருக்கிறதா ? இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்குள் நமது ராஜ்யத்தில் 30 கூட்டுறவு விவசாயச் சங்கங்களை ஏற்படுத்த வேண்டுமென்று

[Sri K. R. Nallasivam] [17th March 1959

திட்டமிடப்பட்டது. அதற்காக ஒதுக்கப்பட்ட பணத்தொகை 12 லட்சம் ரூபாய். அதில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இரண்டு வருடங்களில் சுமார் 9,20,000 ரூபாய் தான் செலவிடப்பட்டது. 1958-59-ம் ஆண்டில் 15 கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்க திட்டமிடப்பட்டது. ஆனால் 14 கூட்டுறவுச் சங்கங்கள்தான் அமைக்கப்பட்டன. இத்திட்டத்திற்கு பிரஸ்தாப ஆண்டில் ஒதுக்கப்பட்ட பணத் தொகை 4 லட்ச ரூபாய், ஆனால் செலவிடப்பட்டது 1,46,000 ரூபாய்தான். இதைப் பார்க்கும்போது, சர்க்காரே இந்த முயற்சியை மேற்கொண்டாலும் நடைமுறையில், இச்சங்கங்களை அமைப்பதிலும் நடத்துவதிலும் பல கஷ்டங்கள் இருக்கின்றன என்பது தெரிகிறது. நம் ராஜ்ய சர்க்காரைப் பொறுத்தவரையில், இந்த சர்க்கார் பொதுவாக யதார்த்த நிலைமைகளை நன்றாக உணர்ந்தே காரியங்களைச் செய்துவருகிறது என்பதில் எனக்கு பூரண நம்பிக்கை இருக்கிறது. ஆனால் நான் ஒரு விஷயம் கேள்விப்பட்டேன். இத்திட்டத்தை வேகமாக நிறைவேற்ற வேண்டுமென்று மத்திய அரசாங்கத்தார் விரும்புவதாகவும் அது தான் மத்திய அரசாங்கத்தின் திட்டத்தின் அடிப்படை நோக்கம் என்றும் கேள்விப்பட்டேன். நாட்டில் பல அணைக்கட்டுத் திட்டங்கள் நிறைவேற்றப்பட்ட போதிலும் ஏராளமான நிலங்கள் சாகுபடிக்கு வராமலிருப்பதால், கூட்டுறவு சாகுபடித் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்தால், அவைகள் எல்லாவற்றையும் சாகுபடிக்குக் கொண்டுவரமுடியும் என்ற காரணத்தால் இத்திட்டத்தை வேகமாக நிறைவேற்றவேண்டும் என்று மத்திய அரசாங்கத்தார் விரும்புவதாகக் கேள்விப்பட்டேன். ஆனால் நம் சென்னை ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் அணைக்கட்டுகள் கட்டியவுடன் இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளுக்குள்ளேயே அணைக்கட்டு பிரதேசத்திலுள்ள எல்லா நிலங்களும் சாகுபடிக்கு வந்துவிடுகின்றன. இதை அரசாங்கத்தார் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். இந்த நாட்டில் நிலச்சுவாந்தார்கள் தங்கள் நிலத்தில் பிடிப்பு வைத்துக் கொள்ளவே விரும்புகிறார்கள். நிலச்சொந்தக்காரர்களுக்கு இருக்கும் நிலப் பற்றை நீக்க எல்லாக் கட்சிகளுமே சேர்ந்து பாடுபடவேண்டும். இது ஒரு தனிப்பட்ட கட்சி செய்வதாக இருக்கக்கூடாது. இப்போது கூட்டுறவு இயக்கம் சம்பந்தமாக மக்களிடம் பிரசாரம் செய்வதற்கான தொண்டர் களுக்குப் பயிற்சி அளிப்பதற்கான நடவடிக்கை காங்கிரஸ் கட்சியின் சார்பில் எடுக்கப்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது. அத்தொண்டர்களுக்கு காங்கிரஸ் சார்பில் பயிற்சி அளிக்க நடவடிக்கை எடுக்கப்பட்டிருப்பதாக அறிகிறேன்; இத்தகைய காரியத்தை நாட்டிலுள்ள சகல கட்சிகளுமே சேர்ந்து செய்யவேண்டும்; இதை ஒரு கட்சிப் பிரச்னையாக ஆக்கக்கூடாது.

THE HON. SRI K. KAMARAJ: அவ்வாறு செய்யவேண்டுமென்று அரசாங்கம் ஒரு தீர்மானமும் போடவில்லை.

SRI K. R. NALLASIVAM: இருந்தாலும், ஆட்சியில் இருக்கும் கட்சி ஒரு நடவடிக்கையை எடுக்கும்போது அதை சர்க்காரின் கருத்தாகவே கருதவேண்டியிருக்கிறது.

பொதுவாக எல்லாக் கட்சிக்காரர்களும் இதில் தீவிர சிரத்தை எடுத்துக் கொள்வதற்கும் சந்தர்ப்பம் கொடுக்க அரசாங்கம் முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இல்லாவிடில் கூட்டுறவு இயக்கம் பெயரளவில்தான் இருக்கமுடியுமே தவிர, அரசியலில் வேறு விதமான வெற்றிதான் பெற முடியுமே தவிர, நாட்டில் கூட்டுறவு இயக்கம் வளர முடியாது. இன்று ஒரு கணக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது, 80 பர்சன்ட் கிராமங்கள் கூட்டுறவு இயக்கத்தில் இருக்கின்றன என்றும், 40 பர்சன்ட் மக்கள் அதில் பங்கு எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது. ஆனால் நடைமுறையில் பார்த்தால் சுமார் 20 பர்சன்ட் மக்கள்தான் பெருவாரியாக கூட்டுறவு இயக்கத்தில் பங்கு எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று தெரியவரும். 80 பர்சன்ட் மக்கள் உண்மையிலேயே அதில் பங்கு எடுத்துக் கொள்ளவில்லை என்று தெரியவரும். அதற்கான சந்தர்ப்பம் அவர்களுக்கு உண்டு பண்ணிக் கொடுக்கப்படவில்லை. சமீபத்தில் கூட்டுறவு இயக்கச் சட்டத்தில் ஒரு திருத்தம் செய்யப்பட்டது. தேவையான ஆட்களை அதில் சேர்த்துக்கொள்ள முயற்சி எடுக்கப்படுமென்று, முயற்சி எடுத்துக்கொண்டால், தொந்தரவு எடுத்துக்கொண்டால்தான் அதைச் செய்ய

17th March 1959] [Sri K. R. Nallasivam]

முடியுமே தவிர உடனடியாக எல்லா மக்களையும் அதில் சேர்த்துவிட முடியாது. நானே முயற்சி எடுத்துப்பார்த்தேன். ஜனங்களை கொண்டு போய் அதில் சேர்ப்பதற்கு கஷ்டமாயிருக்கிறது. சட்டதிட்டங்கள் அதற்கு இடம் கொடுக்கவில்லை. ஆகவே, இந்த கூட்டுறவு இயக்கத்திற்கு நாம ஒரு புதிய வேகம், சக்தி கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அப்படி நாம் இந்த கூட்டுறவு இயக்கத்திற்கு ஒரு நல்ல சக்தி அல்லது வேகம் கொடுக்காவிட்டால், நாட்டில் இன்று கூட்டுறவு இயக்கத்தை எதிர்ப்பவர்களுக்கு நல்லதொரு சந்தர்ப்பத்தை அளிப்பதோடு கூட, இந்த கூட்டுறவு இயக்கமும் தோல்வி அடைந்துவிடவும் கூடும். ஆகவே, இந்த இயக்கம் பற்றி நல்லதொரு, பிரமாண்டமான பிரசாரம் செய்தாகவேண்டும். ஆக, கூட்டுறவு இயக்கம் மூலம்தான் நாட்டில் ஒரு புதிய மாறுதலை, ஒரு புதிய சக்தியை, உற்பத்தி வேகத்தை அதிகப்படுத்த முடியும் என்பதை நம் நாட்டிலுள்ள எல்லோரும், எல்லா விவசாயிகளும் உணர்ந்துகொள்ளும்படி செய்யவேண்டும். எனக்கு ஒரு சந்தேகம் இருக்கிறது. ஏன் விவசாயிகளை மாத்திரம் இப்படி கூட்டுறவு இயக்கத்தில் தள்ளவேண்டும் ? ஒருவர் சொன்னார். ஏன் விவசாயிகள் விஷயத்தில் மட்டும் ஒரு கொள்கை, பாக்கியுள்ளவர்கள் விஷயத்தில் இன்னொரு கொள்கை என்று கேட்டார். கூட்டுறவு இயக்கத்திற்குள்ளே போவது சிறைச்சாலைக்குள்ளே போவது போலாகும் என்ற எண்ணத்தை சிலர் கொண்டிருக்கிறார்கள். அதை நான் நம்பவில்லை. கூட்டுறவு இயக்கம் வெற்றிபெற வேண்டுமானால், எல்லாம், எல்லோருக்கும் என்ற மனோபாவம் வளரவேண்டும். ஆனால் நிலத்திற்குமட்டும் ஒரு உச்ச வரம்பு நிர்ணயித்து விட்டு, மீதியுள்ளவைகளுக்கு ஒரு வரம்பு கட்டாமல் இருந்தால் அது கண்டிப்பாக கூட்டுறவு இயக்கத்தை பாதிக்கத்தான் செய்யும். விவசாயத்திற்கு வரம்பு கட்டுவது எப்படி கூட்டுறவு இயக்கத்தைப் பாதிக்கும் என்று கேட்கலாம். எல்லாம் எல்லோருக்கும் என்ற மக்கள் நினைக்கக்கூடிய நிலை ஏற்படுவதற்கு, எல்லாவற்றிற்கும் வரம்பு இருக்கவேண்டும். ஒரு சிலர் மட்டும் லட்சக்கணக்கில் சம்பாதித்துக் கொள்ளலாம் என்றும், ஒரு சிலர் 3,000 ரூபாய் வருமானத்தோடு வாழவேண்டுமென்றும் சொல்வது சரியல்ல. அப்படிப்பட்டதொரு நிலை இருந்தால் கூட்டுறவு இயக்கம் வெற்றி பெறுவதற்கு அதனால் பல சங்கடங்கள் நேரிடும். ஆகவே, நிலத்திற்கு வரம்பு கட்டியிருப்பதுபோல் மீதியுள்ள வருமானத்திற்கும் ஒரு வரம்பு கட்டப்படவேண்டும். உடனடியாக அப்படி கட்ட வேண்டுமென்று நான் சொல்லவில்லை. அப்படி கட்டுவதற்கு பல கஷ்டங்கள் இருப்பதை நான் உணருகிறேன். ஆனால் இத்தனை வருஷங்களுக்கு பிறகாவது அப்படி ஒரு நிர்ணயம் எல்லாவித வருமானத்திற்கும் நிர்ணயிக்கப்படுமென்று சொல்லவேண்டும். அப்படி செய்தால், அது கூட்டுறவு இயக்கம் வெற்றி பெறுவதற்கு உதவியாகயிருக்கும். சோஷியலிஸத்தைப்பற்றி பேசுகிற சர்க்கார் ஒரு பகுதியினருக்கு மட்டும் வரம்பு நிர்ணயித்து விட்டு மற்றொரு சாராருக்கு ஏன் நிர்ணயிக்காமல் இருக்கவேண்டுமென்று நான் அரசாங்கத்தைக் கேட்கிறேன். இதற்கு, புத்திசாலித்தனமாக பதில் சொல்லக்கூடும். நாட்டிலே இன்று உற்பத்தி பெருகவேண்டுமானால், ஒரு சாரார் மட்டும் நாலு, ஐந்து லட்சம் என்று லட்சகணக்காக சம்பாதிக்கலாம் என்றும், நிலத்தை நம்பிக் கொண்டிருப்பவர்கள் மட்டும் 3,000 ரூபாய் வருமானத்தோடு நிற்கவேண்டுமா யென்று சொன்னால், இப்படிச் சொல்பவர்கள் நிலச்சுவான்தார்கள்தான் என்றும் அல்லது நிலச்சுவாந்தார்களின் ஆதரவாளர்கள் தான் இப்படிச் சொல்கிறார்கள் என்றும் மற்றபடி ஜனங்கள் இப்படிச் சொல்லவில்லை என்றும் பதில் சொல்லக்கூடும். எங்களைப் பொறுத்த வரையில் ஒரே சமயத்தில் இரண்டும் வேண்டுமென்று கூறுகிறோம். கூட்டுறவு இயக்கம் வெற்றிபெற, நாட்டிலுள்ள எல்லோருடைய வருமானமும் கட்டுப்படுத்தப்படவேண்டும். ஒரு சாராரது வருமானம் 3,000-க்கு மேல் இருக்கக்கூடாது என்றும் இன்னொரு சாரார் கோடிக் கணக்கில் சம்பாதித்துக் கொள்ளலாம் என்றும் இருந்தால், அது கட்டாயம் கூட்டுறவு இயக்கம் வளருவதற்கு தடையாகத்தான் இருக்கும் என்பதை நான் இங்கு மீண்டும் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். நான் பத்திரிகையில் பார்த்தேன், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின், " எக்கனமிக் ரெவ்யூ"வில்

[Sri K. R. Nallasivam] [17th March 1959

கூறப்படுகிறது, நிலச்சீர்திருத்தம் செய்யப்பட்ட உத்தரபிரதேசம், பஞ்சாப் போன்ற பிரதேசங்களில் வ்வசாய கூட்டுறவு சங்கங்கள் ஆரம்பித்திருப்பதாகவும், சில கூட்டுறவு சங்கங்கள் உண்மையிலேயே நன்கு நடைபெறுகின்றன என்றும், ஒரு குறிப்பிடத்தக்களவு உள்ள கூட்டுறவு சங்கங்களை அங்குள்ள நிலச்சுவாந்தார்கள் தங்கள் உறவினர்களை மட்டும் வைத்துக் கொண்டு, மாமன், மைத்துனன் இவர்களை அங்கத்தினர்களாக வைத்துக் கொண்டு, பழைய நிலையையே இப்பொழுதும் வைத்துக்கொண்டிருக்கிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது, அந்த பத்திரிகையில். எல்லோருக்கும் ஒரேமாதிரியான வருமானம், வசதிகள் என்று வரும்போது நிச்சயமாக இதுபோன்று எண்ணம் வராது. (பெல்) ஆகவே, மத்திய அரசாங்கம் துரிதமாக இதை அமுலில் கொண்டு வரவேண்டுமென்று சொன்னாலும் நமது அரசாங்கம் இந்த விஷயத்தில் நிதானமாக, எல்லாம் எல்லோருக்கும் என்ற எண்ணத்தை மக்களிடம் உண்டு பண்ணக் கூடிய அளவிற்கு, காரியங்களை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்வதோடு இன்றிருக்கும் சட்டத்தை திருத்தவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

* Sri R. SRINIVASA IYER : Mr. Speaker, in supporting this Demand and opposing the Cut Motion, I want to say a few words. I thought that so far as this Demand is concerned, there will be no cut motion at all. The Co-operation Department in this State has advanced in such a way that it has won encomiums from every one including the Press. There is no meaning in finding fault with this movement in which we have succeeded. As stated in the review circulated to us, 'the co-operative movement in our State has fulfilled with distinction its role as a supplier of agricultural credit '. From the time when Act IV of 1938, i.e., the Agriculturists' Debt Relief Act was passed, there was a contention and even vehement contention, that the Government cannot supply agricultural credit. But to-day, conditions are quite different. Agricultural Banks are functioning very well. I know of some Banks in Pattukkottai taluk, especially the ones at Thamarukottai and Keeramangalam through which loans are distributed, even to the tune of a sum of Rs. 1 lakh. Agricultural credit has advanced in such a way that the agriculturists need not go to Tahsildars or other people for getting their loan. They are able to get the amounts in a very short time during the cultivation season. I refer both to long-term and short-term loans for seeds, fertilizers, etc.

So far as the question of co-operative farming is concerned, the two hon. Members who have spoken before me referred to the criticisms against it. No doubt, there are criticisms and there are divergent views. But, it cannot be denied that co-operation will always be a success. There have been two different views. We also find hurried expressions of opinions. It is all because people did not understand what was really meant by this. Whether it was the Nagpur resolution or the other speeches of the sponsors of the co-operative farming, there was no clear expression of what was meant. The latest reference is, that the first attempt will be at Service Co-operatives. Sir, we have to reclaim our land. We have got to level up and improve our land. We have to purchase fertilizers, manufacture and buy new machinery and develop forestry, animal husbandry, fisheries and various other agricultural side-lines. We have to start a number of local industries to develop all these

17th March 1959] [Sri R. Srinivasa Iyer]

things. It is not necessary that we should copy from China or Russia. It cannot be denied that joint enterprise in anything will yield good results. The only thing is there should be no compulsion. That is all. The hon. Member who spoke before me said that there was a feeling among the people that entry into the co-operative field was just like entering into a jail. That idea may be prevalent very rarely, perhaps in the constituency of the hon. Member. At any rate, so far as Tanjore district is concerned, I do not think there is any such fear and I do not think people consider the entering into co-operative field as entry into jail or some such thing. This has been a success in 12 out of the 14 societies that have already been started. If small landholders or small tenants join in a joint enterprise and get Government credit they can surely increase their output. In this connection, I desire to state that now the landholders need not be afraid of their rent. The service co-operatives will be tenant farming societies. The landholders whoever they are, will not lose their proprietary rights. They will get their 40 per cent. This is what is published in to-day's papers. Our beloved Prime Minister's statement and the All-India Congress Committee's resolution are both there. So, the landholders will get their forty per cent of the produce. As stated by the Hon. Minister, we cannot have socialism unless we understand the difference between the socialist principles of distribution "from each according to his ability to each according to his labour" and the Communist principles "from each according to his ability to each according to his needs". A man who works on the field has got to be paid and paid properly. At the same time, the capitalist will get his legal return according to the latest Fair Rent Act. On the other hand, the Communist principle is . . .

* THE HON. SRI R. VENKATARAMAN : இதிலே ஒரு குழப்பம் இருக்கிறது என்று நான் நினைக்கிறேன். கோவில் நிலங்கள், மட நிலங்கள் இவைகளையெல்லாம் "டெனண்டு பார்மிங் சொஸைடி" எடுத்துக்கொண்டு அதில் இருக்கிற டெனண்ட்ஸ் அதாவது இப்பொழுது இருக்கிறவர்களையே கூட்டுறவு முறையில் அமைக்கவேண்டுமென்று நம்முடைய விவசாய இலாகா அமைச்சர் கனம் ஸ்ரீபக்தவத்சலம் அவர்களுடைய அபிப்பிராயம் என்று பத்திரிகையிலே வந்திருக்கிறது. அது வேறு, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியினுடைய தீர்மானம் வேறு. தனி நபர்களுடைய நிலத்தை எடுத்து அவர்களுக்கு 40 சதவிகிதம் கொடுத்து "டெனண்டு கோவபரேடிவ் சொஸைடி" ஏற்படுத்தலாம், செய்யக்கூடாதது ஒன்றுமில்லை. அதுமாதிரி ஒரு முறையை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி தீர்மானத்தில் சொல்லவில்லை.

* SRI R. SRINIVASA IYER : I do not say that this is the resolution of the All-India Congress Committee. From the latest report published in the papers this morning we find that ownership will not be disturbed and that proprietary rights will not be disturbed. I am on joint farming societies. If people have pannai lands or tenants' lands, they can join together, put in their efforts and jointly cultivate the land. They can put up roads; they can buy new machinery; they can work together as in a joint enterprise. We have to move with the world and share our profits with others. We have to remember the difference between the socialistic

[Sri R. Srinivasa Iyer] [17th March 1959

principle and the Communist principle—" from each according to his ability and to each according to his labour " and " from each according to his ability and to each according to his needs ". A man may be in need but may not be able to work. Then he cannot expect any return. I would suggest that before we criticise either this or that and run to conclusions we study the nature of the by-laws that are proposed or the legislation that is to be brought in by the Government, so far as this co-operative farming is concerned. It is well known to the Government and the people that the Co-operative Societies Act and the rules framed thereunder are not working properly and have got to be modified. I hope they will be modified in such a way as will not introduce compulsion and in such a way as will help a smooth working of the societies, whether they are co-operative farming societies or any other enterprise either in agriculture or industry. With reference to the provision made for these, I find that a larger amount of subvention from the Central Government is expected—117·30 lakhs of rupees. We hope that the Central Government will give us the amount expected for the purpose.

Regarding development of the handloom industry in the State, I am not going to dwell much on the point because it will come under 'Industries'. So far as the expenditure is concerned, the grants-in-aid have been increased from 75 lakhs to 121 lakhs of rupees. About 100 lakhs of rupees is provided for weavers co-operative societies which will include the handloom industry. Provision has also been made for other things.

A good sum has been provided for land colonization. For co-operative farming societies, a sum of four lakhs of rupees has been provided. I hope this will also be enhanced and co-operative farming societies will be formed in larger numbers. This State has formed a Co-operative Farming Board. It has not yet started forming new farming societies. We must have co-operative farming societies at the rate of one in each district at least so that we may see them working in the next harvest season.

So far as procurement is concerned, I want to say a word. In Tanjore district, the Tanjore Co-operative Marketing Federation has been directed to procure or has been appointed as an Agent to procurers. This organization has not got enough godown or credit facilities with the result that whenever ryots go and approach them directly, the Secretary says he has not got funds. This is a complaint which I passed on to the Revenue Divisional Officer, Pattukottai. If paddy is delivered, money is not paid. The mirasdars have already burnt their fingers by selling paddy for credit. Therefore, sufficient funds should be provided for the Federation or any other co-operative society which is authorized to procure grains in Tanjore so that when the grains are delivered by the mirasdars, they may be paid for immediately.

The next point that I wish to urge is about the Wholesale Co-operative Stores in Tanjore district. There is a Wholesale Co-operative Stores in Tiruvarur. Smaller merchants make huge

17th March 1959] [Sri R. Srinivasa Iyer]

profits. Merchants in my constituency purchase their requirements from Vijayapuram. They do not purchase from the Co-operative Wholesale Stores. They make more than 25 per cent profits in respect of commodities they require. This state of affairs can be avoided if branches of the Wholesale Co-operative Stores are opened at least in taluk headquarters. I have been requesting the President of the Tanjore District Co-operative Marketing Society to open a branch at Pattukottai. There is an impediment which is stated. It cannot have a branch when one branch is functioning in the district. Therefore, the Wholesale Co-operative Stores at Tiruvarur should be asked to open a branch at Pattukottai.

With reference to housing, I have got to mention a word. I have already suggested when the occasion came that co-operative house building societies for private persons are working well. So far as the low income group housing scheme is concerned, there is difficulty for Government servants to join the societies because they are likely to be transferred once in three years or four years. The proper thing would be to see to the establishment of co-operative housing societies for Government servants or construction of 'type-design' buildings for non-gazetted officers in each district centre so that the ownership of the house may vest in the societies and rent may be collected from the officers who occupy them. The rent will be cheap then. That way, the problem of housing can be solved so far as Government servants are concerned. They will get houses at cheap rent and at the same time the rural housing difficulty can be got over. Government servants who get a pay of 100 to 120 rupees have now to pay a rent even in rural areas of 25 rupees. Therefore, if Government sponsor a scheme for Government servants alone, it will help them. It should be only for them, for non-gazetted officers only.

The next point, I would urge is this. We have started a House Mortgage Bank at the Centre. It should be started in each taluk headquarters. We give credit through this Bank for redeeming houses which is repayable in twenty years. Every one must take interest in this. If every one takes interest in developing such an institution and tries to start a House Mortgage Bank having jurisdiction over a whole taluk, that will help us greatly.

That is all that I wish to say.

**Sri J. MATHA GOWDER** : கனம் சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் இந்த கூட்டுறவு மான்யக் கோரிக்கையை ஆதரித்து சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். நம்முடைய மாகாணத்தில் 80 சதவிகிதம் கிராமங்களிலே கூட்டுறவு இயக்கம் பரவியிருப்பதைப் பார்த்து நாம் பெருமைப்படவேண்டும். எதிர்கட்சி நண்பர் பேசும்போது இதில் அரசியலை புகுத்தக்கூடாது, இதில அரசியல் கட்சி வேறுபாடு காண்பிக்கிறார்கள் என்று குறை கூறினார்கள். கூட்டுறவு இயக்கத்தின் நோக்கமே எல்லோரும் ஒன்றுபட்டு இருக்கவேண்டுமென்பது தான். இதில் கட்சி பாகுபாடே இருக்கமுடியாது. எல்லாக் கட்சியினா களும் இருக்கலாம். கூட்டுறவு இயக்கத்தில் அரசியல் தடையே இருக்க முடியாது. அவர் அவர்களுடைய செல்வாக்கை வைத்து அவரவர்கள் 10 a.m.

கிராமத்தில் இருக்கக்கூடிய மக்களிடையே நல்ல முறையில் நடந்துகொண்டால் அவர்களுக்கு அங்கு கூட்டுறவு சங்கம் நடத்துவதற்கு வாய்ப்பு கிடைக்கிறது. மக்களிடையே அங்கு செல்வாக்கு பெறவில்லை என்றால் சர்க்கார் ஒன்றும் செய்ய முடியாத நிலையில்தான் இருக்கிறார்கள்.

அடுத்தபடியாக, கூட்டுறவு நில அடமான பாங்குகளைப்பற்றி என்னுடைய கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். கூட்டுறவு நில அடமான பாங்குகள் நம்முடைய ராஜ்யத்திலே சரியான முறையிலே நடந்துகொண்டிருக்கிறதா என்பதுபற்றி சந்தேகமாக இருக்கிறது. இந்த பாங்குகளைப் பொறுத்த வரையில் விவசாயிகளுக்கு சரியான முறையில் கடன்கள் உடனடியாக கிடைப்பதில்லை. அதிகமாக காலதாமதம் ஏற்படுகிறது. அவர்கள் மனுக்களை பரிசீலனை செய்வதற்கே ஒரு ஆண்டு காலம் ஆகிவிடுகிறது. சாதாரணமாக ஒருவர் அப்ளிகேஷன் போட்டால் ஒரு ஆண்டு கழித்தும்கூட அவர்களுக்கு கடன் கிடைக்கிறதோ, இல்லையோ என்று சந்தேகமாக இருக்கிறது. ஏனென்றால், அதிலே ஒரு குறை இருக்கிறது. கூட்டுப்பட்டாதாரர் யாராவது விண்ணப்பம் செய்துகொண்டால், அவர்களுக்கு லோன் கிடைப்பதில்லை. கூட்டுப்பட்டா வைத்திருப்பவர்கள் தனிப்பட்ட பட்டா கொண்டுவரவேண்டும் என்ற நோக்கத்தோடு இருப்பது சரியல்ல. கிராம மணியக்காரர் அல்லது கர்ணம் கூட்டுப்பட்டாதாராக இருந்தாலும், அந்த பூமி அவர்கள் வசத்திலே இருக்கின்றது என்று சர்டிபிகேட் கொடுத்தால், அந்த சர்டிபிகேட்டின்பேரில் கூட்டுப்பட்டாதாரர்களுக்கு கடன் வழங்குவதற்கு வழிவகை செய்ய ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக விவசாயப் பண்ணையைப் பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நம்முடைய மாகாணத்தில் டார்ஜெட் 15 பண்ணைகளுக்கு 14 பண்ணைகள் ஏற்கெனவே ஏற்பட்டிருப்பது பற்றி நான் பெருமைப் படுகிறேன். இன்னும் பாக்கியிருக்கும் ஒரு பண்ணையும் மத்திய சர்க்கார் உதவி பெற்று நீலகிரி ஜில்லாவில் கல்லம்பாளையம் என்ற இடத்தில் ஆரம்பிக்கப்போகிறார்கள். அதற்கான பரிசீலனை முடிந்து, சர்க்காரிடமும் வந்துவிட்டது. அதை உடனடியாகக் கவனிக்கவேண்டும். அதை இந்த மாதத்திலே செய்துவிட வேண்டுமென்று ரிஜிஸ்டிரார் அவர்களுக்கு உத்தரவு போட்டால் டார்ஜெட் பூர்த்தியாகிவிடும் என்பதைச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். அதற்கு உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, கிராமக் கூட்டுறவு சங்கங்களில் நீண்டகாலக் கடன் கொடுப்பதில்லை. 10 ஆண்டுகளுக்கு முன்பெல்லாம் கிராமக் கூட்டுறவு சங்கங்களில் நீண்டகாலக்கடன் 5 வருஷத் தவணையில் கொடுக்கப்பட்டு வந்தது. இப்பொழுது அம்மாதிரி நீண்டகாலக் கடன் கொடுக்கப்படுவதில்லை. இப்பொழுது விவசாய பாங்குகள் வைத்திருக்கிறோம் என்று சொல்லலாம். விவசாய பாங்குகளில் 3 வருஷக் கடன் வாங்கிக்கொள்ளலாம் என்ற ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. விவசாய பாங்குகளை நாம் அதிகப்படுத்தவேண்டுமா அல்லது கிராமக் கூட்டுறவு சங்கங்களைப் பலப்படுத்தவேண்டுமா என்பது சர்க்காரின் கொள்கையை திட்டவட்டமாக தீர்மானிக்கவேண்டும். கிராமக் கூட்டுறவு சங்கங்கள் வேண்டுமென்றால், அவைகள் நீண்டகாலக் கடன் கொடுப்பதற்கு வசதி செய்யவேண்டும். இப்பொழுது கிராமக் கூட்டுறவு சங்கங்களில் குறுகிய கால கடன்தான் கொடுக்கப்படுகிறது. நீண்டகால கடனோ, " மீடியம் டெர்ம் லோனோ " விவசாய பாங்குகளில்தான் கொடுக்கப்படுகிறது. விவசாய பாங்குகள் வேண்டுமானால், அவைகளை அதிகமாக்கி ஊக்குவிக்கவேண்டும். அல்லது கூட்டுறவு கிராம சங்கங்கள் பயனுள்ளதாக இயங்கவேண்டுமென்றால், அங்கே நீண்டகாலக் கடன் கொடுப்பதற்கு வசதி இருக்கவேண்டும். இரண்டில் ஒன்று செய்ய வேண்டும். நான் 18 ஆண்டு காலமாக கிராம கூட்டுறவு சங்கத்தின் தலைவராக பணியாற்றிக் கொண்டிருக்கிறேன். கிராமக் கூட்டுறவு சங்கத்தின் தலைவர் என்ற ஹோதாவில் சொல்லுகிறேன். அங்கு இருக்கக் கூடிய நிலை எப்படி இருக்கிறது என்றால் கூட்டுறவு சங்கத்தின் மெம்பர்கள் அத்தனை பேர்களும் நீண்டகாலத் தவணைக் கடன் எங்கள் சங்கத்தில் இல்லை என்று சொல்லுகிறபொழுது, பாங்குகளுக்குச் செல்லவேண்டிய

நிலைமைதான் வருகிறது. அதுவும் கூட்டுறவு இயக்கம் தான். அங்கு போய் கடன் வாங்கிக்கொள்ளலாம். நான் சொல்லுவது என்னவென்றால், நீண்டகாலக் கடன் கொடுப்பதற்கு வசதி இல்லாத காரணத்தினால், கிராமக் கூட்டுறவு சங்கங்கள் நல்லவிதமாக செயல்படமுடியவில்லை என்பது தான். இந்த நிலையிலே ஒன்று கிராமக் கூட்டுறவு சங்கங்களுக்கு நீண்ட காலக் கடன் கொடுப்பதற்கு வசதி செய்துகொடுத்து அவைகளை ஊக்கு விக்கவேண்டும். இல்லையென்றால் விவசாய பாங்குகளை அதிகமாக்கிவிட்டு கிராமக் கூட்டுறவு சங்கங்களை ஒழித்துவிடவேண்டும். இரண்டையும் வைத்துக் கொண்டு ஒன்றுக்கொன்று முரணாக இயங்கி வந்தால், கூட்டுறவு இயக்கம் வளர்ச்சி அடைவதற்கு தடையாக இருக்கும் என்பதை அமைச்சர் அவர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

அடுத்தபடியாக என்னுடைய நீலகிரி ஜில்லாவைப் பொறுத்தமட்டில் மார்கெடிங் சொஸைடிகள் உருளைக்கிழங்கு மட்டும் வாங்கி விற்கும் நிலையில் தான் இயங்கிக்கொண்டு வருகின்றன. சென்ற ஆண்டில் இருந்ததைவிட நீலகிரி ஜில்லாவில் இந்த ஆண்டில் மார்கெடிங் சொஸைடிகள் நல்ல முறையிலே நடந்துவருவது பற்றி மகிழ்ச்சி அடைகிறேன். சர்க்கா ருடைய கவனத்திற்கு மற்றொரு விஷயத்தையும் கொண்டுவர விரும்பு கிறேன். அங்கு டீ உற்பத்தி செய்யும் சிறு சிறு தேயிலை தோட்டக்காரர்கள் டீக்கு மார்கட் கண்டுபிடிக்க முடியவில்லை. டீ வாங்கி விற்கக்கூடிய மார்கெடிங் சொஸைடிகள் அங்கு ஏன் ஏற்படுத்தக்கூடாது என்பது பற்றி சிந்திக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இன்றைக்கு லிப்டன்ஸ், ப்ரூக்பாண்டு போன்ற தனிப்பட்ட கம்பெனிகள் அங்கு இருக்கக்கூடிய டீயை வாங்கி "பிளாண்டு" செய்து இந்த ராஜ்யத்திலுள்ள எல்லா இடங்களுக்கும், வேறு அன்னிய இடங்களுக்கும் கூட அவர்கள் ஏற்றுமதி செய்யக்கூடிய நிலை இருக்கிறது. ஆகவே எங்கள் ஜில்லாவில் தேயிலை வாங்கி விற்பதற்கு கூட்டுறவு மார்கெடிங் சொஸைடிகள் ஏற்படுத்துவதற்கு முயற்சி செய்யவேண்டும். அப்படிச் செய்தால் அந்த சங்கங்களை நல்ல முறையில் நடத்தமுடியும். இந்த ஆண்டு கூட்டுறவு முறையிலே "இண்டஸ்டிரியல் கோவபரேடிவ் சொஸைடி" ஒன்று குந்தாவில் ஏற்படுத்த வேண்டு மென்று கேட்டிருந்தோம்., உத்தரவு கிடைத்துவிட்டது. இப்பொழுது கோட்டகிரியில் இண்டஸ்டிரியல் கோவபரேடிவ் சொஸைடி ஒன்று ஏற்படுத்த வேண்டுமென்று விண்ணப்பம் ரிஜிஸ்டிராருக்கு அனுப்பியிருக்கிறோம். அந்த சொஸைடி ஆரம்பிப்பதற்கு உடனடியாக அனுமதி கொடுக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த சொஸைடியை நல்லவிதமாக நடத்த முடியும் என்று என்னுடைய அனுபவத்திலிருந்து சொல்லு கிறேன். ஏனென்றால் கூட்டுறவுத் துறையில் எனக்கு அனுபவம் இருக் கிறது, டீ உற்பத்தியிலும் அனுபவம் இருக்கிறது. அந்த அனுபவத்தை வைத்துக்கொண்டு அங்கே இம்மாதிரி ஒரு சங்கம் ஏற்படுத்தினால் மக்க ளுக்கு நல்ல விதத்தில் பயன்படும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். நீலகிரி ஜில்லாவில் வேறு எந்தத் துறையிலும் இண்டஸ்டிரி வளர்வதற்கு வழி கிடையாது. கூட்டுறவு இயக்கத்தை நம்பினால்தான் அந்த ஜில்லா முன்னுக்கு வரமுடியும். ஆகவே, இந்த விஷயத்தை பரிசீலனை செய்து டீ இண்டஸ்டிரியல் கோவாபரேடிவ் சொஸைடி ஏற்படுத்திக் கொடுக்க வேண்டும், டீ மார்கெடிங் சொஸைடிகள் அமைத்துக்கொடுக்கவேண்டும் என்று பணிவன்போடு கேட்டுக்கொள்ளுகிறேன். டீ மார்கெடிங் சொஸைடிகள் ஏற்படுவதின் மூலம் நல்ல மார்கெட்டுகள் கண்டுபிடித்து அயல் நாட் டிற்குக் கூட டீயை ஏற்றுமதி செய்ய வசதி ஏற்படும். ஆகவே, டீ மார்கெடிங் சொஸைடிகள் ஏற்படுத்திக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, கூட்டுறவு இயக்கம் என்பது தொழிலாளர்களிடத்தில் பரவவில்லை. நீலகிரி ஜில்லாவைப் பொறுத்தவரையில், இன்றைக்கு இருக்கக்கூடிய ரிஜிஸ்டிரார் அவர்கள் ஏற்கெனவே தொழிலாளர்கள் தலைவராக இருந்தவர். தொழில் கமிஷனராக இருந்தவருக்கு நன்றாக தொழிலாளர்களைப்பற்றி தெரியும். நீலகிரி ஜில்லாவில் தொழிலாளர்களி டையே இந்த கூட்டுறவு இயக்கம் இன்னும் பரவவில்லை. அதைப் பரி

சிலவை செய்து அவர்கள் இந்த இயக்கத்தைப் பயன்படுத்திக்கொள்ளக் கூடிய வகையில் ஒரு திட்டம் வகுக்கவேண்டுமென்று இந்த சமயத்தில் கேட்டுக்கொள்ளுகிறேன். ஏனென்றால் அவர்கள் வேறு எந்தத் துறையையும் நம்பி வாழமுடியாது. முதலாளிகள் கொடுக்கக்கூடிய கூலியை ஓரளவாவது மிச்சம் பிடித்து, கூட்டுறவு இயக்கம் மூலம் அவர்களுக்கு பயன்படக்கூடிய முறையில் அவர்களுக்கு ஏதாவது உதவி செய்வதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளவேண்டும். அவர்கள் வேறு துறையிலே வளர்ச்சி அடைவதற்கு முடியாத நிலையிலே இருக்கிறார்கள். இந்தத் தோட்டத் தொழிலாளர்களுக்கு கூட்டுறவு இயக்கம் பயன்படும்படிச் செய்யவேண்டும் என்று அவர்களை பணிவன்போடு கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தத் துறையில் நல்ல முறையில் அமைச்சர் அவர்கள் செயல்பட்டுக்கொண்டு வருவதையும், இந்த இலாகாவை மிகவும் பொறுப்பாக நடத்திக்கொண்டுவருவதையும் பற்றி அமைச்சர் அவர்களை பாராட்டிக் கொண்டு, இந்த கூட்டுறவு மான்யத்தை நான் ஆதரிக்கிறேன்.

*SRI V. SUBBIAH: கனம் சபாநாயகர் அவர்களே, இன்றைக்கு 21-வது மான்யமாகிய கூட்டுறவுக்கு 1 கோடியே 86 லட்சத்து 49 ஆயிரத்து 100 ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். அதிலே குறிப்பாக இன்றையதினம் கிராம கிரெடிட் சொஸைடிகளுக்கு—கிராம ஐக்கிய நாணய சங்கங்களுக்கு—ஒதுக்கப்பட்டிருக்கக்கூடிய தொகை மிக மிகக் குறைவு என்று நான் நினைக்கிறேன். அமைச்சர் அவர்கள் கொடுத்துள்ள அறிக்கையில் 80 சதவீதத்திற்கு மேல் கிராமங்களைக் கூட்டுறவில் சேர்த்திருக்கிறோம், 34 சதவீதத்திற்கு மேல் நம் ராஜ்யத்தில் உள்ள மக்கள் இந்தக் கூட்டுறவினால் பயனடைந்திருக்கிறார்கள் என்று குறிப்பிட்டார்கள். அது வரவேற்க வேண்டிய விஷயம். ஆனால் 13 கோடி ரூபாயை வைத்துக்கொண்டு அரசாங்கம் சரி பண்ண முடியுமா, இன்றைக்கு இருக்கக்கூடிய கிராமப் பொருளாதார அமைப்பிலே என்று பார்க்கவேண்டும். இப்போது இருக்கக்கூடிய பல சட்டங்களினாலே தனிப்பட்டவர்களிடம் எவ்வளவு கடன் உதவி வாங்கி வந்தார்களோ அதையெல்லாம் வாங்க முடியாத நிலையில் இருக்கிறார்கள். இப்போது இருக்கக்கூடிய லேவாதேவிச் சட்டங்களினால் கடன் வாங்க முடியாத நிலையில் இருப்பவர்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்க வேறு விதங்களில் வகை செய்திருக்கிறார்களா, இதை வேறு வழிகளில் பூர்த்தி செய்து கொள்ள முடியுமா, அதற்காகப் பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால், அப்படிச் செய்யப்படவில்லை. சப்ளிமெண்டரி எஸ்டிமேட் வரும்போதாவது அதற்கு அதிகமாக ஒதுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். கூட்டுறவு ஐக்கிய நாணயச் சங்கங்களுக்கு தொகை ஒதுக்குவது மிக மிக முக்கியமானதால், இதை வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, நில அடமான பாங்குகள் செயல்படுவதைக் குறித்து மதிப்பிற்குரிய நண்பர்கள் பலர் பேசும்போது குறிப்பிட்டார்கள். விவசாயிகளுடைய பழைய கடனைத் தீர்ப்பதற்காக ஏற்பட்ட பாங்குகள் பல ஆண்டுகளாக இருக்கின்றன என்று குறிப்பிட்டால் அதில் தவறு எதும் கிடையாது. பல வருஷங்கள் கடன் வாங்கவேண்டிய ஏற்பாட்டில், 2 அல்லது 3 வருஷங்களுக்குப் பிறகு தான் பலன் கிடைக்கிறது. குறிப்பாக இன்றைக்கு அயகை இல்லாத ஜமீந்தாரி பிரதேசமாகவோ அல்லது இனாம்தாரி பிரதேசமாகவோ சர்வே இல்லாத பிரதேசங்களில், கிராம விவசாயிகள் நில அடமான பாங்குகளின் பலன்களை அடைய முடியாத நிலையில் இந்த பாங்குகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. ரீ-செட்டில்மெண்ட் ஆகும் வரையில் எந்த வித விமோசனமும் இல்லாமல் இருக்கிறது.

இன்றைக்கு இருக்கக்கூடிய மார்க்கெட்டிங் சொஸைடிகள் எந்த முறையில் செயல்படுகிறது என்றால், விவசாயிகள் உற்பத்தி செய்யக்கூடிய பொருட்கள் பணப் பொருள்களாக—பணப் பயிர்களாக—பர்மா, மலேயா, இலங்கை போன்ற இடங்களுக்கு ஏற்றுமதி செய்யக்கூடிய பொருள்களாக இருந்தால் விவசாயிகள் தொடர்புள்ள சங்கங்களாக இல்லாமல் மத்திய ஸ்டோர்ஸ் போன்ற சங்கங்களுக்கு லைசென்ஸ் கொடுத்து அவர்கள் கையில் விவசாயிகள் சிக்கி, அவர்களுக்கு கமிஷன் கிடைக்காது விற்பனை சங்கங்

17th March 1959] [Sri V. Subbiah]

களுக்குக் கிடைக்கக்கூடிய நிலையில் பல விதமாக வீண் செலவு செய்து, பயிர் செய்யக்கூடியவர்களுக்கு நியாய விலை கிடைக்க முடியாத அளவில் கஷ்டப்படுகிறார்கள். அமைச்சர் அவர்கள் இதை நல்ல முறையில் பார்த்து, உற்பத்தி செய்பவர்கள் செலவு செய்து அதனால் வரக்கூடிய பலன்களை அவர்கள் அடைய வேண்டுமே தவிர, மத்தியிலுள்ள தரகர்களும், வியாபாரிகளும் அடைய முடியாத நிலையில் கூட்டுறவு அமைப்பு இருக்க வேண்டுமென்று ஞாபகப்படுத்த ஆசைப்படுகிறேன்.

(Sri V. K. Kothandaraman in the Chair.)

அடுத்தபடியாக விவசாய கூட்டுறவு சங்கங்கள் என்று இன்றைக்கு நாட்டிலே நம்முடைய சர்க்காரும், மத்திய சர்க்காரும் பறைசாற்றுகிறார்கள். உண்மையிலேயே மகாத்மா காந்தி அவர்களும், ஆச்சார்யா வினோபா அவர்களும் பலமுறை சொல்லியிருக்கிறார்கள். அவர்களுக்கு இதிலே ரொம்பவும் நம்பிக்கை இருக்கிறது. இன்றையதினம் நடைமுறையில் எப்படி இருக்கிறது என்றால், விவசாய கூட்டுறவுப் பண்ணைகள் அமைப்பதிலே பல வித அபிப்பிராய பேதங்கள் இருக்கின்றன. சட்ட அமைப்பைப் பார்த்தால் கூட்டுறவுச் சட்டமானது மிகவும் பழமையான சட்டமாக இருக்கிறது. பல்லாண்டுகளுக்கு முன்பு பிரிட்டிஷார் காலத்தில் ஏற்பட்ட சட்டம் இந்தச் சட்டம். இதற்கு வேண்டிய திருத்தங்கள் செய்யப்படவில்லை. சமீபத்திலே, 1950-ம் வருஷத்திய பஞ்சாயத்து சட்டத்தை 1958-ல் புது சட்டமாகக் கொண்டு வந்திருக்கிறோம். இன்றைக்கு கூட்டுறவுச் சட்டத்தைப் பொறுத்த அளவில் புதிய சட்டம் இல்லாத நிலை இருக்கிறது. இதை அவசியம் மாற்றி அமைக்க வேண்டும். கூட்டுறவுப் பண்ணையில் தனி நபர்கள் நிலமும், தேவஸ்தான நிலமும் சேர்த்து செய்யலாமா, செய்யக்கூடாதா என்ற பல பிரச்னைகளையெல்லாம் இருக்கின்றன. இதிலே பலவித கஷ்டங்களெல்லாம் இருக்கின்றன. அதிகாரிகளுக்குச் செய்ய வேண்டுமென்ற எண்ணம் இருந்தபோதிலும், கூட்டுறவுப் பண்ணைகள் ஆரம்பிக்க வேண்டுமென்று அதிகாரிகள் நினைத்தாலும், அவர்கள் யோசிக்கக்கூடிய நிலையில் இருக்கிறது. வருஷக் கணக்கான காலம் ரெஜிஸ்ட்ரேஷனுக்காக காத்திருக்க வேண்டியிருக்கிறது என்பதையெல்லாம் கனம் அமைச்சர் அவர்கள் கவனித்து, அதற்காக முறை வகுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்றைக்கு கிராமாந்திர விவசாய பாங்குகள் அமைப்பதிலே, போர்ட் ஆப் டைரக்டர்களை நாமிநேஷன் செய்கிறார்கள். அது தப்பு என்று நான் நினைக்கிறேன். அதற்கு பதிலாக அது தேர்தல் முறையிலே இருக்க வேண்டும்—தேர்தல் முறைதான் நல்லது. ஜனநாயக அமைப்பிலே கிராமாந்திரங்களில் நல்ல முறையில் இப்போதுள்ள அடிப்படையில் நடக்காது. கிராமாந்திரங்களில் பல கட்சிப் பிரிவினைகள், பல சண்டைகள் இருக்கும்போது நாமிநேஷன் முறை வைத்திருப்பது நல்லதல்ல என்று நான் நினைக்கிறேன். அதை மாற்றி அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக, இன்னும் இரண்டொரு விஷயங்களைப் பற்றிச் சொல்லி முடித்துக்கொள்கிறேன். இந்த நாட்டிலே 3 லட்சம் பேர்கள் மாஜி ராணுவத்தினர்கள் இருக்கிறார்கள். இந்த 3 லட்சம் பேர்களுக்கு நமது ராஜ்யத்திலே சேலத்திலே ஒரு காலனி அமைக்கப்பட்டுள்ளது. கோயம்புத்தூரில் ஒரு விவசாய காலனி ஆரம்பிக்கப்பட்டுள்ளது. இன்றைக்கு அரசாங்கம் ஏதாவது செய்திருக்கிறதா என்று டீடெயில்ட் பட்ஜெட்டிலே பார்த்தேன், மாஜி ராணுவத்தினருக்கு இதுவரையில் செய்யப்பட்டது ஒன்றும் தெரியவில்லை.

எக்ஸ்-செர்வீஸ்மென் டிரான்ஸ்போர்ட் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதே, அதற்கு ஏதாவது செய்திருக்கிறார்களா என்றால் இல்லை. அந்த முயற்சியிலே அவர்களுக்கு நல்ல உதவி செய்ய வேண்டும். முடியவில்லையென்றால் மத்திய சர்க்கார் வசம் ஒப்புவிக்கவேண்டும். இப்போது ஒன்றும் செய்யவில்லை என்று நினைக்கிறேன். அமைச்சர் அவர்கள் கவனம் செலுத்தி

[Sri V. Subbiah] [17th March 1959

நாட்டை பாதுகாத்த மாஜி ராணுவத்தினர்களைப் பாதுகாக்கக் கடமைப் பட்டிருக்கிறோம் என்ற நிலையில் எல்லாவித உதவிகளையும் செய்ய வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்னும் இந்த கூட்டுறவு முறையிலே பல ஊழல்கள் எங்கு பார்த்தாலும் நடக்கின்றன. 50,000 ரூபாய் ஒரு ஸ்டோரிலிருந்து எடுத்துப் போய் விட்டார்கள் என்பது போன்றெல்லாம் பத்திரிகைச் செய்திகள் வருகின்றன. இதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். இந்த முறையில் இருக்கக்கூடாது. ஆடிட்டர்கள் நல்ல முறையில் வேலை செய்யவேண்டும். நல்ல முறையில் மானேஜ்மென்ட் இருக்கவேண்டும். மேற்பார்வை செய்வதில் டிபார்ட்மென்ட் கண்டிப்பாக இருக்க வேண்டும். அதற்கான முறையில் விதிகளில் மாற்றங்களைச் செய்யவேண்டும்—விதி முறைகளை அமைக்கவேண்டும். கூட்டுறவு அமைப்பை மாற்றி அமைத்து, புதிய முறையில் நமது சட்ட மன்றத்திலே பல விதிகளைக் கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

SRI N. S. RAMALINGAM : கனம் தாற்காலிகத் தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற கூட்டுறவு மான்யத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன்.

கூட்டுறவு இயக்கம் இந்த ராஜ்யத்திலே நல்ல முறையில் இயங்கி வருகின்றதைப் பார்த்து எல்லோரும் பெருமைப்படுகிறார்கள். அதைப்பற்றி வரவு-செலவுத் திட்ட உரையிலே நமது நிதி அமைச்சர் அவர்களும், இன்றையதினம் நமது கூட்டுறவு இலாகா அமைச்சர் அவர்களும் எடுத்துக் கூறியிருக்கிறார்கள். அதற்கு முக்கிய காரணம் இந்த ராஜ்யத்திலே உள்ள உத்தியோகத்திலுள்ள கூட்டுறவாளர்களும், உத்தியோகப் பற்றற்ற கூட்டுறவாளர்களும் இந்த இயக்கத்தை நல்ல முறையில் நடத்தி வருவதுதான். அமைச்சர் அவர்கள் சொல்வது போல, இதுவரையில் நடத்தி வந்து ஒய்வு பெற்ற திரு. பழனியப்பா முதலியார் அவர்களுக்கு இதிலே ஒரு பெரிய பங்கு இருந்தது. அவர்கள் இந்த இயக்கத்தை நல்ல முறையில் நடத்தி வந்தார்கள். அவருடைய சேவைக்கு அரசாங்கத்தின் சார்பில் அமைச்சர் அவர்கள் பாராட்டு தெரிவித்தது போல, உத்தியோகப் பற்றற்றவர்கள் சார்பாக நான் அவருக்கு பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

சென்னை ராஜ்யமானது கூட்டுறவு இயக்கத்தில் நல்ல முன்னணியில் இருக்கிறது. இதை மற்ற ராஜ்யங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது மற்ற பல ராஜ்யங்களின் நிலையோடு சமமாக பார்க்கக் கூடாது. கூட்டுறவு இயக்கத்தில் முன்னணியில் இருக்கும் சென்னை, ஆந்திரா, போன்ற ராஜ்யங்கள் சம்பந்தப்பட்ட வரையில் தனிப்பட்ட முறையில் பார்க்கவேண்டும்.

விவசாயப் பாங்குகள் ஏற்படுவதைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். சென்னை ராஜ்யத்தில் 300 விவசாய பாங்குகள் ஆரம்பிக்கப்பட்டு அவைகளெல்லாம் நல்ல முறையில் நடந்து வருகின்றன. வடக்கே அவைகளெல்லாம் சரியாக வேலை செய்யாவிட்டாலும், நமது ராஜ்யத்தில் நல்ல முறையில் வேலை செய்து வந்திருக்கிறது. இதனால் விவசாயிகளுக்கு எவ்வளவு நலன் கிடைத்திருக்கிறது என்பது கண்கூடாகப் பார்த்திருக்கிறோம். இந்த பாங்குகளை மேலும் ஆரம்பிக்க முயற்சி செய்யவேண்டும். அதற்காக இந்த ராஜ்யத்தில் இந்த வரவு செலவுத் திட்டத்தில் கூட 100 பாங்குகள் ஆரம்பிக்க திட்டமிடப்பட்டிருப்பதைப்பற்றி நான் பாராட்டுகிறேன். மேலும் புதிய பாங்குகள் ஆரம்பிக்க முயற்சி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதே திட்டத்தில் விவசாய பாங்குகளுக்கு அலுவலகம் கட்ட, இந்த பாங்குகள் நகை ஈட்டுக் கடன் கொடுப்பதால், அவைகளை பத்திரமாக வைக்க, கட்டிடங்கள் கட்டுவதற்காக மான்யமும், கடன் கொடுப்பதற்காகத் தொகையும் ஒதுக்கியிருப்பதை நான் பாராட்டுகிறேன். இவைகளுக்கு நல்ல அலுவலகங்கள் இருந்தால் தான் நகை ஈட்டுக் கடன் கொடுப்பதற்கான நல்ல சூழ்நிலை இருக்கும். ஆகவே, இதற்கு தொகை ஒதுக்கியிருப்பதற்காக எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்ள விம்புகிறேன்.

17th March 1959] [Sri N. S. Ramalingam]

அதேபோல விவசாய பாங்குகளில் வேலை செய்வதற்கு அனுபவமில்லை. சிப்பந்திகள் தேவையாக இருக்கின்றன. அதிலும் குறிப்பாக அனுபவம் பெற்ற சூப்பர்வைஸர்களாக பார்த்து போட வேண்டியிருக்கிறது. அதனால் அவர்களுக்கு அதிகமான சம்பளம் கொடுக்கவேண்டியிருக்கிறது. மத்திய பாங்குகளில் வேலை செய்தால் அவர்களுக்கு சம்பளத்தோடு டி. எ. போன்ற பல அலவன்ஸ்களும் கிடைக்கின்றன. இவ்விதம் பல படிகள் அவர்களுக்கு வருவாய் வந்துகொண்டிருப்பதால் அவர்கள் மத்திய பாங்குகளில் வேலை செய்வதற்குத்தான் விரும்புகிறார்கள். கிராம புறங்களுக்கு வருவதற்கு அவர்கள் தயங்குகிறார்கள். இதைப்பற்றி இதே மன்றத்தில் கேள்வி நேரத்தின்போது நன்னிலம் அங்கத்தினர் அவர்கள் கேள்வி கேட்டதற்கு அமைச்சர் அவர்கள் இதைப்பற்றி அரசாங்கம் ஆலோசித்துக் கொண்டிருக்கிறது என்று பதில் சொன்னார்கள். இதைப்பற்றி கவனித்து விவசாய பாங்குகளில் வேலை பார்க்கும் காரியதரிசி போன்றவர்களுக்கு அதிகமான அளவில் சம்பளம் கொடுப்பதற்கு வழிவகை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதேபோல் இந்த பட்ஜெட்டில் மேற்பார்வை கழகங்களுக்கும் மான்யமாகவும் கடனாகவும் கொடுப்பதற்கு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்த கழகங்கள் நல்ல முறையில் கூட்டுறவு திட்டத்தை எல்லாம் பரப்புவதற்கு வேலை செய்து வருகிறார்கள். இதன் மூலம் பலருக்கும் கூட்டுறவு இயக்கத்தைப்பற்றி பேசுவதற்கும், நூல் நிலையங்கள் மூலம் பயன்பெறுவதற்கும் வசதியாக இருக்கிறது. அந்த முறையில் இதற்கு பணம் ஒதுக்கப்பட்டிருப்பதற்காக நான் அரசாங்கத்தை பாராட்டுகிறேன். அதேபோல் பஞ்சாயத்தார்களுக்கு பயிற்சி கொடுக்கின்ற காரியத்தில் இப்போது இருக்கின்ற முறையில் எல்லோரும் பயிற்சி பெறுவதற்கு குறைந்தது 15,20 வருடங்களாகும் என்று தெரிகிறது. இதற்கு மத்திய அரசாங்கத்தினுடைய உதவியும் தேவைப்படுவதாகத் தெரிகிறது. ஆகவே எல்லா பஞ்சாயத்தார்களுக்கும் குறைந்தது ஐந்து வருடத்திற்குள் பயிற்சி கொடுப்பதற்கு மத்திய அரசாங்கத்தில் கேட்டு கூடிய சீக்கிரமாகவே பயிற்சி கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, நில அடமான பாங்குகள் சம்பந்தமாக சில வார்த்தைகளை குறிப்பிட விரும்புகிறேன். இப்போது நில அடமான பாங்குகளில் வட்டி விகிதம் அதிகமாக இருக்கிறது. தனிப்பட்ட நபர்களிடமிருந்து $5\frac{1}{2}$ சதமானம் வட்டிக்கு பலர் வாங்கிக்கொண்டிருக்கிறார்கள். அதேசமயத்தில் கூட்டுறவு இயக்கத்திலிருந்து $6\frac{3}{4}$ சத விகிதத்திற்கு கடன் வாங்க வேண்டியிருக்கிறது. இவ்விதம் தங்களுடைய வருமானத்திலிருந்து கொடுப்பதற்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ஆகவே இந்த வட்டி விகிதத்தை குறைக்கவேண்டுமென்று பல மாநாடுகளில் வற்புறுத்தியிருக்கிறோம். அந்த மகாநாட்டில் கனம் அமைச்சர் அவர்களும் இதை ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். மத்திய அரசாங்கத்தினிடம் இதைப் பற்றி எடுத்துக்கூறி இதற்கு நல்ல முறையில் ஒரு ஏற்பாட்டை கொண்டு வருவதற்கு வழி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு நான் அறிந்த மட்டில் இதைப்பற்றி மத்திய அரசாங்கத்திற்கு எழுதியிருந்ததாகவும் அவர்கள் இந்த இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் இதற்கு ஒன்றும் செய்ய முடியாது என்று சொல்லிவிட்டதாக தெரிகிறது. ஆகவே மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்திலாவது இதை சேர்த்துக்கொள்வதற்கு வழி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதன் மூலம் விவசாயிகளுக்கு குறைந்த வட்டி விகிதத்தில் அதாவது $4\frac{1}{2}$ சத விகிதத்தில் கடன் கிடைக்கக்கூடிய அளவுக்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் வழி வகை செய்யவேண்டும், அதற்கான முயற்சியில் நமது அமைச்சர் அவர்களும் இந்த அமைச்சரவையும் வேலை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இது சம்பந்தமாக பம்பாயில் இருக்கக்கூடிய முறையை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். அதாவது நில அடமான பாங்குகளில் இருந்து விவசாயிகளுக்கு $6\frac{1}{2}$ சத விகிதத்திற்கு கடன் கொடுத்தாலும் அதில் $4\frac{1}{2}$ சத விகிதத்தை விவசாயிகளும் $1\frac{1}{2}$ சத விகிதத்தை அரசாங்கமும் கொடுக்கவேண்டும் என்ற முறையில் கொடுத்து வருகிறார்கள். இவ்விதம்

[Sri N. S. Ramalingam] [17th March 1959

அவர்கள் கடனுகப்பெற்று இப்போது சுமார் 35 ஆயிரம் கிணறுகள் வெட்டப்பட்டு வருவதாக தெரிகிறது. ஆகவே அந்த முறையில் இங்கும் ஏதாவது ஒரு முறையை கொண்டுவரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் நில அடமான பாங்கு சிப்பந்திகளுக்கு—அதிலும் குறிப்பாக டெப்யூடி ரெஜிஸ்ட்ரார் அவர்களுக்கு பூரா சம்பளத்தையும் ஸப்-ரெஜிஸ்ட்ரார் அவர்களுக்கு பாதி சம்பளத்தையும் சென்னையில் இருக்கும் நில அடமான பாங்கு கொடுப்பதற்கு ஒத்துக்கொண்டிருக்கிருர்கள். இதில் பூரா சம்பளத்தையும் அரசாங்கமே கொடுப்பதற்கு ஒத்துக்கொண்டால் விவசாயிகளுக்கு குறைந்த விகிதத்தில் கடன் கொடுக்க முடியும். இதைப் பற்றி பலர் சொன்னுர்கள். மற்ற அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு எல்லாம் அரசாங்கமே சம்பளம் கொடுத்து வருவதைப்போன்று இவர்களுக்கும் அரசாங்கமே பூரா சம்பளத்தையும் கொடுப்பதற்கு ஒத்துக்கொண்டால் விவசாயிகளுக்கு பெரும் நன்மையாக இருக்கும், ஆகவே அரசாங்கம் இதைப்பற்றி ஆலோசித்து தக்க ஒரு ஏற்பாட்டை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதைப்பற்றி நாராயணசுவாமி பிள்ளை கமிட்டி ரிப்போர்ட்டிலும் குறிப்பிட்டிருக்கிறது. அதையும் அரசாங்கம் கவனிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக நிலங்களுக்கு மதிப்பீடு செய்வதில் கனம் மாரிமுத்து அவர்கள் சொன்னது போல் மிகவும் குறைவாகவே இருக்கிறது. அதாவது யுத்த காலத்தில் இருந்த விலையைவிட 25 பர்சன்ட் அதிகமாக போட்டு இப்போது மதிப்பீடு செய்கிறோம். இருந்தாலும் உண்மையான விலையைவிட இது மிகவும் குறைவாகவே இருக்கிறது. இந்த முறையை மாற்றவேண்டும் என்று நாராயண சுவாமி பிள்ளை கமிட்டியும், பல நிபுணர்களும் வற்புறுத்திக் கூறியிருக்கிருர்கள். பணம் திருப்பி கொடுப்பதிலும் கூட, உண்மையான விலைக்கு புறம்பாக, அதாவது மூட்டை ஒன்றுக்கு $7\frac{1}{2}$ ரூபாய் விலை என்று மதிப்பிட்டு பணம் கொடுக்கப்படுகிறது. இது உண்மைக்கு புறம்பாக இருக்கிறது. இந்த முறைகளை மாற்றவேண்டும் என்று அமைச்சர் அவர்களுக்கு பல தடவை எடுத்துச் சொல்லியிருக்கிறோம். இதைப்பற்றி அரசாங்கத்திற்கும் எழுதியிருக்கிறோம். இவ்விதம் எழுதி அனுப்பி சுமார் ஒரு வருடமாகியும் இதுவரையிலும் எந்தவிதமான உத்தரவும் போடவில்லை என்று தெரிகிறது. ஆகவே இதன் பேரில் ஏதாவது உத்தரவு போட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதேபோல் சமீப காலத்தில் மழையில்லாமல் பஞ்சமும், பல கஷ்டங்களும் ஏற்பட்டதின் காரணமாக பல விவசாயிகள் தவணைக்கடன்களை திருப்பிக் கொடுக்க முடியாத நிலையில் இருக்கிருர்கள். இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் விவசாயிகளுக்கு உதவுவதற்கு ஒரு ரிவால்விங் பண்ட் ஏற்படுத்த வேண்டும் என்று சொல்லியிருந்தோம். இந்த பண்டிலிருந்து கடன் கொடுக்கவேண்டியது அவசியம் என்று தோன்றினுல் ரெஜிஸ்ட்ரார் அவர்களுடைய உத்தரவின் பேரில் கடன் கொடுக்கலாம் என்ற நிபந்தனை போட்டாவது இதன் மூலம் விவசாயிகளுக்கு உதவி செய்வதற்கு அரசாங்கம் முன்வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் சம்பந்தமாக ஒரு வார்த்தை. இந்த கம்பெனிகள் எல்லாம் தேசீய மயமாக்குவதற்கு முன்னுல் நில அடமான ஸ்தாபனத்திலிருந்து 40 பர்சன்ட் டிபெஞ்சர்கள் வாங்கிக்கொண்டிருந்தார்கள், இப்போது 10, 12 சதமானம்தான் டிபெஞ்சர்கள் வாங்கிக்கொண்டிருக்கிருர்கள். இதனுல் விவசாயிகளுக்கு அதிகமான அளவில் பண உதவி செய்வதற்கு வழியில்லாத நிலைமைதான் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் எல்லாம் குறைந்தது 40 பர்சன்டாவது டிபெஞ்சர்கள் எடுக்க வேண்டும் என்று அரசாங்கம் வற்புறுத்தவேண்டும். இன்றைக்கு ஆயுள் இன்ஷ்யூரன்ஸ்க்கு அதிகமாக பிரிமியங்கள் கிடைத்துக்கொண்டிருப்பது கிராமப்புறங்களில் இருந்துதான். அவ்விதம் இருக்கும்போது இதிலிருந்து கிடைக்கும் பணம் கிராமத்திலிருக்கக்கூடியவர்களுக்கு அதிகமாக பயன்படுவதற்கு வழி செய்யவேண்டும். அந்த முறையில் குறைந்தது ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் ஸ்தாபனங்கள் எல்லாம் 40 பர்சன்டாவது டிபெஞ்சர்கள் எடுக்கவேண்டும் என்று அரசாங்கம்

17th March 1959] [Sri N. S. Ramalingam]

புறுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு இப்போது ரூரல் டிடம்பஞ்சர்களை நில அடமான பாங்குகள் வாங்குவது என்ற முறை ஆந்திரா ராஜ்யத்தில் வந்திருப்பதாக தெரிகிறது. நமது மாகாணத்திலும் இந்தத் திட்டத்தைக்கொண்டு வருவதற்கு நடவடிக்கைகள் ஏற்பாடு செய்திருக்கி ரோம். இதைச் சீக்கிரமாகக் கொண்டு வருவதற்கு அனுமதி கிடைத்தால் அதிகமான பணம் வசூலிக்க முடியும். அதிலும் இப்போது எல்லா இடங் களிலும் அறுவடைகாலமாக இருப்பதால் விவசாயிகளிடம் பணம் புழங்கும் சமயமாக இருக்கும். இந்தக் காலம் தவறிவிட்டால் அவர்களிடம் பணம் இருக்காது, ஆகவே இதைச் சீக்கிரமாகவே கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு மத்திய நில அடமான பாங்குக்கு என்று இதுவரை தனியாகக் கட்டிடம் இல்லை, இப்போது இருக்கிற கட்டிடம் மிகவும் வசதிக்குறைவாக இருக்கிறது, ஆகவே உடனடியாக இதற்கு ஒருபெரிய கட்டிடம் கட்டுவதற்கு வழிவகை செய்யவேண்டும் என்றும், அதற்கான உத்தரவை அரசாங்கம் பிறப்பிக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன். இப் போது தேசீய அபிவிருத்திக் குழு கிராம சீரமைப்பை எல்லாம் கூட்டுறவு முறையில் நடத்த முடிவு செய்திருக்கிறது. அதிலும் இப்போது சர்வீஸ் கோவாப்பரேடிவ் சொஸைட்டி ஆரம்பிக்கப்படவேண்டும் என்று சொல் லப்பட்டு வருகிறது. நாம் ஏற்கனவே பல நோக்கு கூட்டுறவு சங்கங்களை ஏற்படுத்தி நடத்தி வருகிறோம். அதற்கும் இதற்கும் வித்தியாசங்கள் ஒன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. நமது ராஜ்யத்தில் இந்த முறை புதிதல்ல, மேலும் நமது ராஜ்யத்தில், கூட்டுறவு இலட்சியத்தோடு நாம் எல்லோரும் வேலை செய்தால் கூட்டுறவு இயக்கம் நம் ராஜ்யத்தில் முன்னிலை யில் நிற்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்வதோடு, இந்த மான்யத்தை ஆதரித்துக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

**Sri M. KANDASAMI PADAYACHI** : கனம் சபைத் தலைவர் அவர்களே, நமது கூட்டுறவு இலாகா அமைச்சர் அவர்கள் கொண்டு 10-30 a.m. வந்திருக்கும் இந்த மான்யத்தை ஆதரித்துச் சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன். கூட்டுறவுச் சங்கங்கள் எல்லாம் நல்ல முறையிலே நடந்து வருவது பற்றி நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். கூட்டுறவுச் சங்கத்தில் நான் சென்ற இருபது ஆண்டுகளாக மெம்பராக இருந்துவருகிறேன். கூட்டுறவு இயக்கத்திலே செய்யப்படவேண்டிய சில திருத்தங்களை மட்டும் இங்கே சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

இப்பொழுது ஒரு சொஸைட்டியிலே கடன் வாங்கவேண்டுமானால், சொத்தை எழுதிவைத்து, மற்றும் அதற்கு வேண்டிய காரியங்களைச் செய்து கடன் வாங்கவேண்டுமானால் இரண்டு மூன்று மாதங்கள் ஆகின்றன. சொத்துக்கான டைட்டில் டீட் இருந்தால்தான் கடன் கிடைக்கிறது. பாகப் பிரிவினையான சொத்தாக இருந்தாலும், கூட்டுறவு பாங்கின்மூலமாக கடன் உதவி கிடைப்பதில்லை. காரணம், டைட்டில் டீட் வேண்டுமென்று பாங்குக் காரர்கள் கேட்கிறார்கள். பாகப்பிரிவினை ஆகியிருந்தாலும், டைட்டில் டீட் வாங்கியிருக்கமுடியாது. ஆகவே, டைட்டில் டீட் வைத்திருக்கவேண்டும் என்று வற்புறுத்தும் விதியைத் திருத்தியமைக்கவேண்டும். முக்கியமாக பட்டா மாறியிருந்தால் அவர்களுக்குக் கடன் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

விவசாய பாங்குகள் நல்ல முறையில் பணியாற்றி வருகின்றன. சுமார் 20, 30 கிராமங்களுக்கு ஒரு விவசாய பாங்கு அமைப்பதாகத் திட்டம் வகுத்து, அந்தக் கிராமங்களில் உள்ள விவசாயிகளுக்கு வேண்டிய கடன் உதவி செய்கிற முறையில் பணியாற்றி வருகிறது. அருகாமையிலேயும், கிராம மக்களிடையிலேயும் இருப்பதால், கிராமத்தவர்கள் சீக்கிரத்தில் வந்து, விண்ணப்பம் செய்துகொண்டு, சொத்தை எழுதிவைத்தால், டைரெக்டர் களோ அதிகாரிகளோ சீக்கிரத்தில் பரிசீலனை செய்து, டிஸ்போஸல் செய் கிறார்கள். நான் நேற்று கேட்ட ஒரு கேள்விக்குப் பதில் சொல்லும்போது 300 விவசாய பாங்குகளை வைப்பதற்கு திட்டமிட்டிருப்பதாகவும், மேற் கொண்டு வைப்பதற்கும் அரசாங்கம் யோசித்துக்கொண்டிருப்பதாகவும் கூட்டுறவு இலாகா அமைச்சர் அவர்கள் பதில் சொன்னார்கள். அதிலே

ரொம்ப விஸ்தரிப்புத் திட்டம் வேண்டும். விவசாய பாங்குதான் நேரடியாக விவசாயிகளுக்கு உதவி செய்யக்கூடிய முறையில் இருக்கிறதே தவிர, மற்ற கூட்டுறவு க்ரெடிட் சொஸைட்டிகள் உதவி செய்ய முடிவதில்லை. காரணம், அவைகள் 40, 50, 60 மைல் தூரத்தில் அமைந்திருக்கின்றன. ஆனால், விவசாய பாங்குகள் கிராமங்களின் மத்தியில் அமைக்கப்பட்டிருப்பதால், விவசாயிகளுக்கு நன்மையாக இருக்கின்றன. ஒவ்வொரு ஜில்லாவிலும் விவசாய பாங்கு மூலமாகவே கிராமத்தவர்களுக்கு வேண்டிய கடன் வசதிகள் கொடுக்கப்படவேண்டுமேயொழிய, தனிப்பட்ட சொஸைட்டிகளின் மூலம் கொடுப்பதென்றால் சரியாக வராது என்பது என் கருத்து. தனிப்பட்ட சொஸைட்டி மூலமாக இருந்தால், விவசாயிகளுக்கு வேண்டிய கடன் வசதி பெறுவதற்கு சௌகரியமாக இருக்காது. ஆகையால், விவசாய பாங்குகளை நல்ல முறையில் விஸ்தரிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

உரங்கள் கொடுப்பது பற்றி சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். அரசாங்கம், அதை வியாபாரிகள் மூலமாகக் கொடுப்பதால், வியாபாரிகள் லாப நோக்கம் காரணமாக ப்ளாக் மார்க்கெட்டில் விற்றுவிடுகிறார்கள். அதனால் விவசாய மக்களுக்கு உரங்கள் சரியான முறையில் போவதில்லை. உரங்களை கூட்டுறவு விவசாய பாங்கு மூலமாகக் கொடுத்தால் விவசாயிகளுக்கு நேரடியாகப் போவதற்குச் சரியாக இருக்கும். ப்ளாக் மார்க்கெட்டு செய்வதற்கு வழியில்லாமல் போகும். கூட்டுறவு விவசாய பாங்கு டைரக்டர்கள் கண்காணிப்பாக இருந்து விவசாயிகளுக்குக் கஷ்டம் உண்டாகாதபடி பார்த்துக்கொள்வதற்குச் சௌகரியமாக இருக்கும்.

அதே போல், விற்பனைக்கு வேண்டிய தானியங்களையும் ஈடாக வைத்து, வேண்டிய காலத்தில் பணம் வாங்கிக்கொள்வதற்கு வசதி செய்வதும் நல்ல திட்டமாக இருக்கும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

மார்க்கெட்டிங் சொஸைட்டி இருக்கும் இடங்களில் "கோடவுன்" கட்ட அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறார்கள். மார்க்கெட்டிங் சொஸைட்டியிலிருந்து ஐயாயிரம் ரூபாய் சொந்தமாகப் போட்டுக்கொண்டு, அரசாங்கத்திடமிருந்து பத்தாயிரம் ரூபாய் மான்யமாகப் பெற்று, இருபது வருஷத் தவணைகளில் திருப்பிக் கொடுக்கலாம் என்று சொல்கிறார்கள். ஆனால், மார்க்கெட்டிங் சொஸைட்டியில் வைக்கும் பொருள்கள் நல்ல முறையில் கையாளப்பட்டாலும் வியாபாரிகள் அதன்மூலம் லாபம் அடைகிறார்கள். அதைக் கூட்டுறவு மார்க்கெட்டிங் சொஸைட்டியாக வைத்தால், வியாபாரிகளுக்குப் போய்ச் சேராமல் பங்குதாரர்களாகிய விவசாயிகளுக்கு நேரடியாகப் போய்ச் சேரும் என்பது என்னுடைய கருத்து.

இப்பொழுது விலை நிர்ணயம் ரூ. 17 என்று இருக்கிறது. சென்ற வருஷம் விவசாய மக்கள், 60 படி கொண்ட மூட்டையொன்று ரூ. 15 வீதம் கொடுத்தார்கள். அதைக் குறைத்துக் கொடுக்க வேண்டுமென்று அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறார்கள். எப்படியிருந்தாலும் விவசாயிகளுக்குப் போய்ச் சேர வேண்டியது. கடன் கடன் தான். அந்தத் திட்டம் ரொம்ப அவசியம். ரூ. 15-க்கே கொடுக்கும்படியான திட்டத்தை நான் ஆதரிக்கிறேன். அப்படிக் கொடுக்கும்படியாகவும் கேட்டுக்கொள்கிறேன்.

நில அடமான பாங்கியிலே பணம் சீக்கிரம் பட்டுவாடா ஆகவில்லையென்று திரு. மாதா கவுடர் அவர்கள் சொன்னார்கள். உண்மை தான். ஏனென்றால், நில அடமான பாங்கிலே திட்டமாக கூட்டுப்பட்டாவாக இருந்தால், சூபர்வைசர் நேரில் போய், " பணம் திருப்பிக் கொடுப்பதற்கு நிலம் இருக்கிறதா, வளம் இருக்கிறதா ? " என்று பார்வையிட வேண்டும். அனேகமாக சூபர்வைசர்கள் சரியாகப் போய்ப் பார்வையிடுவது இல்லை. நல்ல திட்டமாக இருந்தும், சீக்கிரத்திலே டிஸ்போசல் கொடுப்பதில்லை. பொதுவாகவே காலதாமதம் ஆகிறது. அதிலே நானும் அங்கத்தினராக இருக்கிறேன். ஏதாவது ஒரு "டிபெக்ட்" சொல்கிறார்கள். அது அவசியமாக விவசாயிகளுக்குப் போய்ச் சேர வேண்டும். அப்பொழுதுதான் மக்களுக்கு நன்மை செய்ததாகும். நாம் பாங்குகளை நிறைய ஆரம்பித்

17th March 1959] [Sri M. Kandasami Padayachi]

தாலுங்கூட எதிர்ப்பார்த்த பலன் ஏற்படுவதற்கான ஏற்பாட்டை அரசாங்கம் செய்யவேண்டும். டிபுடி ரிஜிஸ்திரார், ஜாயிண்ட் ரிஜிஸ்திரார் கண் காணித்து நிறையப் பார்வையிட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கூட்டுறவு சங்கங்களையும் பாங்குகளையும் மற்றவைகளையும் வருஷத்திற்கு ஒரு முறை ஆடிட் செய்யவேண்டும். வடாற்காடு ஜில்லாவில் கூட்டுறவு ஆயில் பண்ணையிலே ஏதோ மோசடி நடந்ததாகவும் தகராறு இருந்த தாகவும் சொல்கிறார்கள். அதை அடிக்கடி ஆடிட் செய்துவந்தால் உடனுக்குடனே யார் மீது தப்பு இருக்கிறது என்று நமக்குத் தெரியும் உடனடியாக தலைவருக்குத் தெரிவித்து உடனடியாக வசூல் செய்யலாம். யாரால் தவறு ஏற்பட்டது என்று கண்காணிப்பதற்கு அவசியம் அடிக்கடி ஆடிட் செய்ய டிபுடி ரிஜிஸ்த்திரார் ஏற்பாடு செய்யவேண்டும். நான் ஒரு பாங்கிலே தலைவராக இருந்துகொண்டு வருகிறேன். ஜில்லா பாங்கிலும் டைரக்டராக இருக்கிறேன். ஆடிட் செய்யாததால் குற்றங்குறை இருக் கிறது. இரண்டு, மூன்று வருஷங்களுக்கொரு முறை ஆடிட் நடப்பதால் தான் இந்தக் குறைகள் ஏற்படுகின்றன என்று நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

டெபுடி ரிஜிஸ்திரார்களுக்கு முன்சீப்புக்குள்ள அதிகாரத்தைக் கொடுக்க வேண்டும். டெபுடி ரிஜிஸ்திரார் இன்ஸ்பெக்ஷனுக்கு வரும்போது எக்சிக் யூஷன் ப்ரோசீடிங்ஸ் நிறைவேற்றுவதற்கு முன்சீப்புக்குள்ள அதிகாரத் தை அவர்களுக்குக் கொடுக்கவேண்டும். கடனைத் திருப்பிக் கொடுக்க முடியாத அளவுக்கு விவசாயிகளுக்கு முடைகள் இருக்கலாம். இருந் தாலும் அறுவடைக் காலங்களில் அவர்கள் கையில் பொருள் இருக்கும். அப்பொழுதாவது பாங்குகளுக்கு வரவேண்டியதை வசூலிக்க நடவடிக் கை எடுக்கக்கூடிய அதிகாரம் டெபுடி ரிஜிஸ்திரார்களுக்கு இருக்கவேண்டும். இப்படி நடவடிக்கை எடுப்பதற்கு ஏற்பாடு செய்தால்தான் ஓவர்டியூக்கள் குறையும். அறிக்கை மூலமாக அவர்களுக்குத் தெரிவித்து நடவடிக்கை எடுக்க வசூல் செய்தால்தான் ஏராளமான பாங்குகள் நல்ல முறையில் நடந்துவரும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

நிலத்திற்கு உச்சவரம்பு நிர்ணயிப்பதைவிட கூட்டுறவு முறையில் பண்ணைகள் அமைப்பதன் மூலமாக விவசாயம் செய்வது மக்களுக்கு நல்லது. கூட்டுறவுப் பண்ணை மூலமாக நிலத்தில் விவசாயம் செய்ய வேண்டும் என்பதுதான் என்னுடைய அபிலாஷை. அம்மாதிரி வைத்தால் ஒருவிதமான தொந்தரவும் இருக்காது. அப்பொழுதுதான் அதனுடைய பலன் விவசாய மக்களுக்குப் போய்ச்சேரும். உச்சவரம்பு கட்டிவிட்டால் ஆளுக்கு அரை ஏக்கர் வரும். அதனால் பலன் காண முடியாது. நிலச்சுவாந்தார்களுக்கு எப்படியும் போதுமான வசதி இருக் கலாம் இருந்தாலும்கூட இந்தத் திட்டம் கூட்டுறவு முறையில் ஏற்பட்டால் பலவிதமான நோக்கங்களுக்கு நல்லதாக இருக்கும். ஏதோ கூட்டுறவு இயக்கத்தில் நான் பல ஆண்டுகளாகச் சேர்ந்தவன் என்ற முறையில் எனக்கு அதன் நன்மை தெரியும். அதனால் சொல்கிறேன். அதனால் மற்றவர்களுக்கு அதன் நன்மை தெரியாது என்பதற்காக அல்ல நான் சொல்வது. விவசாய மக்களுக்கு கூட்டுறவு இயக்கத்தின் மூலம் இந்த அரசாங்கம் எவ்வளவோ செய்து வருவது பற்றி நான் ரொம்பவும் சந்தோஷப்படுகிறேன். அதை இன்னும் நல்ல முறையிலே நடத்த வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த மான்யத்திலே எனக்குப் பேச வாய்ப்புக் கொடுத்த தலைவருக்கு நன்றியைத் தெரிவித்து என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

**SRI S. M. ANNAMALAI** : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்தக் கூட்டுறவு இலாகாவின்மீது கொண்டு வரப்பட்டிருக்கிற வெட்டுப் பிரேரபணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளைச் சொல்ல ஆசைப் படுகிறேன். கூட்டுறவு இலாகாவின் மூலமாக விவசாயிகளுக்கு கடன்கள் கொடுக்கப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. ஆண்டு ஒன்றுக்கு இரண்டு கோடி ரூபாய் வீதம் மூன்று ஆண்டுகளுக்கும் ஆறு கோடி ரூபாய் என்று இருந்தது 13·3 கோடி ரூபாயாக சென்ற ஆண்டில் உயர்ந்து

அடுத்த ஆண்டு 16 கோடி ரூபாயாகச் செலவிடப்படும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஆனால் அந்தக் கடன்களால் யார் யார் பயன்படுகிறார்கள் என்று பார்த்தால் பெரிய பணக்காரர்களும் பெரிய நிலம் படைத்தவர்களும்தான் பயன்படுகிறார்கள். அவர்கள்தான் இந்தக் கடனை நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்ளுகிறார்களே தவிர பாமர மக்கள், விவசாய மக்கள் அதை நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்ளமுடியவில்லை. அதை போலவே புல் பைனான்சிங் ஸ்கீம் என்ற ஸ்கீம் ஒன்று இருக்கிறது. அந்த ஸ்கீமின்படி ராமநாதபுரம் மாவட்டத்திலும் கோயம்புத்தூர் மாவட்டத்திலும் இரண்டு பிர்க்காக்களை எடுத்து நல்ல முறையில் பரிசோதனை செய்து, இந்த ஆண்டு கனம் அமைச்சர் அவர்கள் கொடுத்திருக்கக் கூடியதைப் பார்த்தால் சுமார் ஆறு ப்ளாக்குகள் விஸ்தரிக்கப்படும் என்றும் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இந்த இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தைப் பார்த்தால் 1959–60-ல் பனிரெண்டு ப்ளாக்குகள் ஆரம்பிக்கப் படும் என்று சொல்லியிருக்கிறார்கள். ஏழு விவசாய ப்ளாக்குகள் விஸ்தரிக்கப்படும் என்றும் சொல்லியிருக்கிறார்கள். உண்மையில் பார்க்கப் போனால் இந்த கிராம கூட்டுறவு விவசாய சங்கங்கள் விவசாய மக்களுக்கு நல்ல முறையில் பயன்படுகிறதா என்று பார்த்தால் அவர்களுக்கு பயன் படாமல் பெரிய முதலாளிகளும், பெரிய பணக்காரர்களும், பெரிய நிலச்சுவாந்தார்களும்தான் அதன் மூலம் பயனடைகிறார்கள் என்பது தெரிய வரும். சாதாரணமாக சட்டசபை தேர்தல் காலங்களில் கூட அவ்வளவு பணம் செலவு செய்ய மாட்டார்கள். ஆனால் இந்த கூட்டுறவு விவசாய சங்கங்களில் டைரெக்டராகவும், ப்ரசிடெண்டாக வருவதற்கு அவர்கள் செலவழிப்பதைப்பார்த்தால் எவ்வளவோ அதிகமாக செலவு செய்வதைப் பார்க்கலாம். அந்தச் சங்கங்களில் தலைவராக வருவதற்கு ஒரு வோட்டுக்கு பத்து, அல்லது நூறு அல்லது நூற்று ஐம்பது ரூபாய் வரையில் கொடுத்து அவர்கள் ப்ரசிடெண்டாகவும் டைரெக்டராகவும் வந்து விடுகிறார்கள். கிராமங்களிலுள்ள பாமர மக்களுக்கு அந்த கூட்டுறவு சங்கங்களில் உறுப்பினராக வருவதற்கும் எந்த விதமான வாய்ப்பும் கிடையாது. இந்தக் கூட்டுறவு சங்கங்களைப்பற்றிப் பேசும்போது கனம் ஸ்ரீநிவாச அய்யர் சொல்லுகிறார். இதற்குக் கூடவா வெட்டுப் பிரேரேபணை என்று. சட்ட மன்றத்தின் முன் இதற்குக் கூட வெட்டுப் பிரேரேபணை கொடுக்க வேண்டுமா என்றுகூட கேட்கிறார். சுமார் சென்ற இரண்டு மூன்று நாட்களாக வருகிற பத்திரிகைகளைப் பார்த்தால் தென் ஆற்காடு மாவட்டத்தில் 400 ரசாயன உரம் மூட்டைகள் காணமல் போய்விட்டன என்றும் நவ இந்தியா பத்திரிகையில் வந்திருக்கிறது. இந்த 400 மூட்டைகளும் 4 வாகன்களில் வந்தது என்றும், மூன்று வாகன்களும் நல்ல முறையில் பயன் படுத்தப்படவில்லை என்றும் ஒரு வாகன் இருக்கிற இடம் தெரியவே இல்லை என்றும் அதிலுள்ள 400 மூட்டைகள் சென்ற இடமே தெரியவில்லை என்றும், பத்திரிகையில் பார்த்தேன். அதைப் போலவே வட ஆற்காடு மாவட்டத்தில் ரசாயன உரம் வந்த மூட்டைகள் எங்கே போயிற்று என்று தெரியவில்லை என்ற புகார் வந்திருக்கிறது என்றும் இந்த முறையில் கூட்டுறவு சங்கங்கள் மிக மிக மோசமான முறையில் நடை பெற்று வருகிறது என்றும் சொல்லப்படுகிறது. அதைப் போலவே சென்ற மூன்று நான்கு நாட்களாக இந்த சட்ட மன்றத்தில் கேட்கப்படுகிற கேள்விகளைப் பார்த்தால் உர மூட்டைகளுக்கு பதிலாக சாதாரணமாக பத்து மூட்டை புளியங்கொட்டை இருந்ததாகவும் சொல்லப்படுகிறது.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அண்ணாமலைக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கூட்டுறவு இயக்கம் என்பது பொது மக்களுடைய இயக்கம். அதிலுள்ள டைரெக்டர்கள் தவறுகள் செய்தால் அது சர்க்கார் தவறு செய்ததாக கருதக்கூடாது. அந்த தவறுகளை நாம் திருத்திக்கொள்ள நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்பதை மட்டும்சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

SRI S. M. ANNAMALAI : அந்தப் புகார்களை திருத்துவது சர்க்காருடைய பொறுப்பாக இருக்கிறது என்பதால் அதைச் சொல்லுகிறேன். காரணம் 1958-ம் ஆண்டு ஸ்டேட் ஆடிட்டர்களை நியமித்திருக்கிறார்கள்.

17th March 1959] [Sri S. M. Annamalai]

அதற்கு முன்னதாக தனியான இலாகா ஆரம்பித்து அதன் மூலமாக நல்ல முறையில் தணிக்கை செய்து வந்தர்கள். அப்பொழுது இப்படிப் பட்ட மோசடிகள் நிகழ்ந்திருக்கிறதா ?

இந்த ஸ்டேட்மெண்டில் மாஜி ராணுவத்தினருக்கு எவ்வளவோ தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பது ஸ்டேட்மெண்டில் காணப்படவில்லை. மாஜி ராணுவத்தினர் நமது மாநிலத்தில் இருக்கிறவர்கள் மூன்று லட்சம் பேர்கள். அவர்களில் ஒரு சிலர் அதாவது 100 பேர்கள் கூட்டுறவுச் சங்கங்களில் சேர்ந்திருக்கிறார்கள். அந்த சங்கங்களின் மூலமாக சர்க்கார் அவர்களுக்கு எவ்வளவு பணம் ஒதுக்கி இருக்கிறது என்பது இந்த வரவு செலவு திட்டத்தில் காணோம். மாஜி ராணுவத்தினருக்கு மத்திய சர்க்கார் பணம்தர வேண்டும் மத்திய சர்க்காரை இந்த சர்க்கார் வற்புறுத்தி வாங்கிக்கொள்ள வேண்டும். உண்மையில் பார்க்கப் போனால் மாஜி ராணுவத்தினர்கள் ராணுவத்தில் நல்ல முறையில் சேவை செய்து விட்டு இப்பொழுது கிராமங்களில் வந்து தங்கியிருக்கிறார்கள். அவர்கள் ரொம்பவும் ஏழ்மையான நிலைமையில் இருக்கிறார்கள். தங்களுடைய வாழ்க்கையைக்கூட நடத்த முடியாத நிலையில் இருக்கிறார்கள். மத்திய சர்க்காரிடம் இவர்களுக்கு என்று தனியாக பணம் இருக்கிறது. அதிலிருந்து இந்த மாஜி ராணுவத்தினருக்கு அதிகப்படியான பணம் கொடுக்க வேண்டும் என்று இந்த சர்க்கார் மத்திய சர்க்காரை வற்புறுத்திக் கேட்டு வாங்கி இவர்களுக்கு கொடுக்க முன்வர வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கிராமங்களிலுள்ள பஞ்சாயத்தார்களுக்கு பயிற்சி ஆரம்பிக்கப்போவ தாகச் சொல்லப்படுகிறது. கூட்டுறவுச் சங்கங்களில் பஞ்சாயத்தார்களாக இருக்கக்கூடிய உறுப்பினர்களுக்கு உண்மையிலேயே இந்த கூட்டுறவு இயக்கத்தின் விதிகள் தெரியவில்லை. அந்த விதிகள் தெரியாமல் இருக்கிற காரணத்தால் கூட்டுறவுகளை நடத்துவதற்குத் தெரியாமல் ரொம்பவும் தவிக்கிறார்கள். அப்படிப்பட்ட பஞ்சாயத்தார்களுக்கு ட்ரெயினிங் தரவேண்டும் என்று 23·51 லட்ச ரூபாய் இந்த இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்த மூன்று வருஷங் களாக 2·51 லட்சம் ரூபாய் செலவிடப்பட்டு மீதமுள்ள 21 லட்சம் ரூபாய் செலவிடப்படாமல் அப்படியே வைத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த 21 லட்சம் ரூபாயை வருங்காலத்திலாவது நல்ல முறையில் செல விடப்பட்டு அந்தந்த பஞ்சாயத்தார்களுக்கு நல்ல முறையில் ட்ரெயினிங் கொடுத்தல் வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : ரூபாய் எவ்வளவு செலவு செய்யப்பட்டிருக்கிறது என்பதைப் பார்க்காமல் எண்ணிக்கையைப் பார்த்தால் நிறைய பேர்களுக்கு ட்ரெயினிங் கொடுக்கப்பட்டிருப்பது தெரிய வரும். அப்படி 4,546 பஞ்சாயத்தார்களுக்கு ட்ரெயினிங் கொடுக்கப்பட்டி ருக்கிறது.

SRI S. M. ANNAMALAI : இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் ஒதுக்கப்பட்டிருக்கிற பணம் சரிவர செலவு செய்யப்படவில்லை. வேண்டு மானால் எண்ணிக்கை அதிகமாக இருக்கலாம். இன்னும் இரண்டு வருஷங்கள் தானிருக்கிறது இ ண்டாவது ஐந்தாண்டு திட்டம் முடிவடை வதற்கு. இந்த 21 லட்சம் ரூபாயையும் நல்ல முறையில் செலவிடப்பட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த மாநில சர்க்கார் உணவு தானியங்களை வாங்குவதற்கு என்று மத்திய சர்க்காரைக் கேட்டு பத்து கோடி ரூபாய் வாங்கப்போவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி பத்து கோடி ரூபாய் வாங்கி உணவு தானியங்களை வாங்கி வியாபாரம் செய்யப்போவதாகவும் அப்படிச் செய்யும் போது லாபம் நஷ்டம் இல்லாமல் வியாபாரம் செய்யப்போவதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி பத்து கோடி ரூபாய் வாங்கும்போது அதற்கு வட்டி உண்டா இல்லையா என்பதைப்பற்றி அறிக்கையில் குறிப்பிட வில்லை. அப்படி மத்திய சர்க்கார் வட்டி தேவை என்று சொன்னால்,

[Sri S. M. Annamalai] [17th March 1959

இந்த மாநில சர்க்கார் மத்திய சர்க்காரிடம் என்ன சொல்ல வேண்டு மென்றுல் லாபம் அல்லது நஷ்டம் இல்லாமல் இந்த வியாபாரத்தைச் செய்யப் போகிறேம் அதனுல் இந்த பத்து கோடி ரூபாய்க்கும் வட்டி தர முடியாது என்று சொல்லவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதைப்போலவே பார்மிங்க சொசைட்டிக்கு என்று இந்த மாநில சர்க்கார் 6·56 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறர்கள். இதில் மத்திய சர்க்காருடைய விகிதம் என்ன என்பதைப் பற்றி சொல்லவில்லை. முன்பு சொன்னதைப்போலவே மத்திய சர்க்காரிடம் சொல்லி இதற்கு மேலும் பணம் தேவை என்று வற்புறுத்தி பணத்தைப் பெற வேண்டும் என்று நான் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

கடைசியாக ஜவ்வாது மலைவாசிகளைப் பற்றிக் கொஞ்சம் சொல்லவேண்டிய தாக இருக்கிறது. கனம் அமைச்சர் அவர்கள் கூட அவர்களை வந்து சமீபத்தில் பார்த்து விட்டுப் போனர்கள். ஜவ்வாது மலைவாசிகள் மிகவும் எழ்மையான நிலையில் இருக்கிறர்கள். ஜவ்வாது மலை மீது விளையக் கூடிய கடுக்காய் போன்ற வியாபாரப் பொருள்களை தனிப்பட்ட முதலாளி கள், 2,000, 3,000 என்றும் ரூபாய்க்கு நாலு மரக்கால் அல்லது மூன்று மரக்கால் என்றும் வாங்கிக்கொண்டு வந்து கீழே அதே கடுக்காய்களை ஒன்று காலணு அரையணு என்று விற்று அதிகப்படியான கொள்ளை லாபம் சம்பாதிக்கிறர்கள். அதனுல் மலைமேலேயே ஜவ்வாது மலை வாசி களுக்கு மார்க்கெட்டிங் சொசைட்டிகளை ஆரம்பித்துத் தர வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

*Sri N. MAHALINGAM : துணை சபாநாயகர் அவர்களே, இந்தக் கூட்டுறவு மானியத்தை ஆதரிக்கும் முறையில் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்.

இந்தக் கூட்டுறவு மானியத்தில் வீடுகள் கட்டும் திட்டத்திற்காக மத்திய சர்க்கார் குறைந்த வருவாய் உள்ளவர்களுக்காக வீடு கட்டும் திட்டமும், ராஜ்ய சர்க்கார் வீடு கட்டும் திட்டமும் அமுலில் இருந்து வருகிறது. மாநிலத்தில் இருக்கக்கூடிய பல முக்கிய நகரசபைகளாலும் இந்த வீடுகள் கட்டவேண்டிய அவசியம் மிக அதிகமாக இருந்து வருகிறது. இதற் கெல்லாம் அதிகமான பணம் தேவையாக இருக்கிறது. இப்பொழுது இருக்கக்கூடிய வீடு கட்டும் கூட்டுறவு சொசைடிகளிடம் போதுமான பணம் இல்லை. சென்ற இரண்டு ஆண்டுகளாக இந்த வகையில் சுமார் 33½ லட்சம் ரூபாய் செலவிடப்பட்டிருக்கிறது. அந்தத் தொகை நம்முடைய மாநிலத்தின் தேவைக்குப் போதுமானதாக இல்லையென்பதைத் தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்தத் தொகையை அவசியம் அதிகப்படுத்துவதற்கு ராஜ்ய சர்க்கார் வேண்டிய முயற்சியை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

மத்திய சர்க்காரால் பணம் கொடுக்க முடியாத நிலைமை இருந்தாலும் அல்லது மாகாண சர்க்காரால் மேற்கொண்டு பணம் ஒதுக்க முடியாத நிலைமை இருந்தாலும், "லைப் இன்ஷுரன்ஸ் கார்ப்பொரேஷன்" என்று சொல்லக்கூடிய அவர்களிடமிருந்து வேண்டிய கடன் பெற்று அவற்றை இந்தக் கூட்டுறவு முறையில் வீடுகள் கட்டித்தரப் பயன்படுத்தவேண்டும். அதற்கான முயற்சிகளைச் சர்க்கார் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று குறிப்பிட விரும்புகிறேன். லைப் இன்ஷுரன்ஸ் கார்ப்பொரேஷன் அவர்களுடைய சிப்பந்திகளுக்கும், சர்க்கார் சிப்பந்திகளுக்கும் வீடு கட்டப் பணம் கொடுப்பதற்காக யோசனை செய்து கொண்டிருப்பதாகத் தெரிகிறது. அவர்கள் சர்க்கார் சிப்பந்திகளுக்கும், தங்கள் சிப்பந்தி களுக்கும் மட்டும் வீடு கட்டுவதற்காகப் பணம் கொடுப்பது என்பது போதாது. பொதுவாகப் பொதுமக்கள் எல்லோருக்கும் கொடுக்க வேண்டும். குறைந்த பட்சம் இன்ஷுரன்ஸ் செய்திருக்கக்கூடிய பாலிசி ஹோல்டர்ஸ் எல்லோருக்குமாவது கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்களிடமிருந்து பணத்தைப் பெற்று வீடு கட்டிக்கொடுக்கும் சொசைடி களுக்குக் கொடுத்தால், அந்த சொசைட்டிகளால் இன்னும் அதிகமான அளவில் வீடுகள் கட்டிக்கொடுக்க முடியும்.

17th March 1959] [Sri N. Mahalingam]

பொள்ளாச்சியைப் பொறுத்தவரை அங்கு இருக்கக்கூடிய கூட்டுறவு வீடு கட்டும் சொசைடிக்கு 200 வீடுகள் கட்ட சர்க்கார் அனுமதி கொடுத்திருக்கிறார்கள். நாம் இப்பொழுது புதிதாகப் பரம்பிக்குளத் திட்டத்தைத் துவக்க இருப்பதால் அந்தப் பகுதிகளில் வீடுகளுக்குக் கிராக்கி இருந்து கொண்டிருக்கிறது. மேற்கொண்டு 200 அங்கத்தினர்கள் வீடுகளுக்காக மனுச் செய்துகொள்ளத் தயாராக இருக்கிறார்கள். மறுபடியும் 200 அங்கத்தினர்கள் சேர்ந்து வீடுகள் கட்ட அனுமதி கொடுத்து, வரும் ஆண்டில் அதற்கான பணத்தை ஒதுக்க வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, சர்க்காருடைய அறிக்கையில் "மூன்று கூட்டுறவு சர்க்கரை ஆலைகளை ஏற்படுத்துவதற்கான வேலைகள் நடந்து வருவதாகக் கூறப்பட்டிருக்கிறது. 1959-60-ம் ஆண்டில் உற்பத்தி செய்யப்படும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இப்பொழுது கூட்டுறவு இலாகா நடைமுறைகளினால் வேலைகள் நல்ல முறையில் நடக்க தடை ஏற்படுகிறது. இப்பொழுது கூட்டுறவு சொசைடிகளில்—சர்க்கரை ஆலைகளில் டைரக்டர் தவிர எக்சிக்யூடிவ் கமிட்டி என்று ஒன்று இருக்கிறது. அந்த எக்சிக்யூடிவ் கமிட்டி தான் முக்கிய நிர்வாக விஷயங்களைக் கவனிக்கவேண்டி இருக்கிறது. அதற்கு சென்னையில் இருந்து கூட்டுறவு இலாகா அதிகாரிகளும், தொழில் இலாகா டைரக்டர்களும் வந்து கலந்துகொள்ள வேண்டியவர்களாக இருக்கிறார்கள். உடுமலைப் பேட்டையில் உள்ள ஆலையைப் பொறுத்த வரை டைரக்டர் கூட்டத்தில் "கோரம்" இருந்தால் கூட, சில சமயங்களில் எக்சிக்யூடிவ் கமிட்டியில் "கோரம்" இல்லாத நிலைமை ஏற்படுகிறது. இந்த எக்சிக்யூடிவ் கமிட்டி அவசியமா என்பது பற்றி சர்க்கார் சிந்திக்க வேண்டும். நேரடியாக டைரக்டர் கூட்டமே போட்டுக்கொண்டுவந்தால் போதுமானது.

சென்ற வருஷத்திற்கு முன்னால் இருந்து ஒரு எஞ்சினீயரைப் போட்டு சம்பளம் 600 ரூபாய் அனுமதிக்க வேண்டுமென்று கூட்டுறவு இலாகா சர்க்காரைக் கேட்டிருந்தும் அனுமதி கொடுக்கப்படவில்லை. அதன் காரணமாக வேலை ஆரம்பிப்பதில் காலதாமதம் ஏற்பட்டிருக்கிறது. கடந்த 2, 3 மாதங்களாகத் தான் வேலை நடந்துகொண்டு வருகிறது. சென்ற ஆண்டு கேட்ட போதே எஞ்சினீயரை வைத்துக்கொள்ள அனுமதி கொடுத்திருந்தால் வேலைகளைத் துரிதமாக நடத்தச் சௌகரியமாக இருந்திருக்கும். கூட்டுறவு இலாகா இன்னும் அதிகமான அளவில் இயங்குவதற்கு அதன் நடைமுறை விதிகளைத் திருத்தியமைப்பது மிகவும் அவசியம். இப்பொழுது இருக்கும்படியான சட்டத்தை வைத்துக்கொண்டு கூட்டுறவு இலாகா தொழில்களை நல்ல முறையில் நடத்தவேண்டுமென்பது கொஞ்சம் சிரமமான காரியம். குறிப்பாக சர்க்கரை ஆலைகள் சம்பந்தமாக, 3 ஆலைகளும் குறிப்பிட்ட காலத்தில் உற்பத்தி செய்யவேண்டுமானால் சர்க்கார் நடைமுறை விதிகளைத் திருத்த நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கூற விரும்புகிறேன்.

சூலூரில் ஒரு கூட்டுறவு நூற்பு ஆலையை நிறுவவேண்டுமென்று அங்கிருக்கக் கூடிய சேனையிலிருந்து விலகியவர்கள்—"எக்ஸ் சர்விஸ்மென்" நீண்ட நாட்களாகக் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய பிரதிநிதிகள் சென்னையில் அமைச்சர்களையும், இலாகா காரியதரிசிகளையும் சந்தித்து அந்த ஆலையை சூலூரில் ஏற்படுத்தவேண்டுமென்பதைப் பற்றிப் பல முறை எடுத்துச் சொல்லி இருக்கிறார்கள். அதற்குச் சாதகமாக எந்த வித பதிலும் கிடைக்கவில்லை. திருநெல்வேலி ஜில்லாவில் ஒரு கூட்டுறவு நூற்பு ஆலையை ஆரம்பித்திருக்கிறார்கள். அது மிகவும் வரவேற்கத்தக்கது. அதே போல் சூலூரிலும் ஒரு ஆலையை ஆரம்பிக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டியது மிகவும் அவசியம் என்று வலியுறுத்திக்கூற விரும்புகிறேன்.

மற்றபடி கூட்டுறவு இலாகாவில் சில தவறுகள் நடந்து கொண்டு வருகின்றன. அரசாங்கம் அதைக் கண்டுபிடித்து உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். அப்பொழுதுதான் கூட்டுறவு இலாகா வெற்றி

கரமாக நடைபெறமுடியும். மக்களுக்கு அது நன்மை பயப்பதாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சிலோனுக்கு மிளகாய எக்ஸ்போர்ட் செய்வதில் பல தவறுகள் நடக்கின்றன. முன்பெல்லாம் தாலூகா சொஸைடிகள் எக்ஸ்போர்டடுக்கு மிளகாய் கொடுத்து வந்தார்கள். அது சரியானபடி நடக்கவில்லை என்று கருதி ஜில்லாவில் இருக்கக் கூடிய சொஸைடி மிளகாய் எக்ஸ்போர்ட்டுக்குக் கொடுக்க ஆரம்பித்தது. முன் பாவது அந்த வகையில் கிடைத்த வருவாய் ஏதோ பாதி விவசாயிகளுக்குக் கிடைத்தால் பாதி வியாபாரிகளுக்குக் கிடைத்தது. இப்பொழுதோ பூராவும் வியாபாரிகளுக்கே கிடைத்துவருகிறது. தாலூகா விவசாயிகள் தங்களுடைய மிளகாயை சிலோனுக்கு அனுப்பமுடியாத நிலைமை ஏற்பட்டுவிட்டது. இந்த எக்ஸ்போர்டில் நல்ல லாபம் இருக்கின்ற காரணத்தால் இது விவசாயிகளுக்கு நேரடியாகப் பயன்படும் முறையில் இந்தத் திட்டத்தைத் திருத்த வேண்டியது அவசியம். தவறு நடந்த இடத்தில் நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கூட்டுறவு இலாகாவின் மூலம் பல முக்கியமான காரியங்களைச் செய்ய வேண்டுமென்று நாம் திட்டமிட்டிருக்கும்போது அதன் நடைமுறை சரியான படி நடக்க சட்டங்களைத் திருத்தவேண்டும். தவறுகளைக் கண்டிக்கச் சட்டத்தில் இடம் இருக்கவேண்டும். அதற்கேற்றவாறு அதைத் திருத்தியமைக்க வேண்டும். அவ்வாறு திருத்தியமைக்காத அளவில் கூட்டுறவு இலாகாவின் மூலம் நாம் எதிர்பார்க்கும் பலன் நிச்சயமாகக் கிடைக்காது என்று கூற விரும்புகிறேன்.

விவசாயம் கூட்டுறவு முறையில் நடக்கவேண்டுமென்று இப்பொழுது திட்டமிடப்பட்டிருக்கிறது. அதில் எவ்வளவு சிரமம் இருக்கிறது என்பதை விவசாயத்தைப் பற்றி நன்றாக அறிந்தவர்கள் உணர்ந்திருப்பார்கள். நெல் அறுவடை காலத்தில் இரவில் எவ்வளவு திருட்டுப் போகிறது என்பதை நாம் எண்ணிப்பார்க்கவேண்டும். இரவில் வந்து மூட்டை மூட்டையாக நெல்லைத் திருடிக்கொண்டு போய்விடுகிறார்கள். தனிப்பட்டவர்கள் இரவில் அங்கு வந்து பாதுகாத்துக்கொண்டிருக்கும்போது கூட அவர்கள் கூட்டமாக வந்து திருடிக்கொண்டு போய்விடுகிறார்கள். தனிப்பட்டவர்கள் பாதுகாப்பு இருக்கும் போதே இந்த மாதிரி நடக்கிறது என்று சொன்னால் கூட்டுறவு முறையில் நடந்தால் என்ன முறையில் நடக்கும் என்பதை நாம் எண்ணிப்பார்க்கவேண்டும். யார் போய் இதை மேற்பார்ப்பார்கள்? நடைமுறையில் ஏற்படக்கூடிய கஷ்டங்களை நீக்குவதற்கான வழிவகைகளைச் செய்துகொண்டு கூட்டுறவு இலாகா தங்களுடைய நடவடிக்கைகளை விவசாயத்துறையில் விஸ்தரிக்கவேண்டும். இப்பொழுது கடன் கொடுப்பது போன்ற வேலைகளே இன்னும் பூர்த்தியாகவில்லை. அதெல்லாம் பூர்த்தியாகாமல் இருக்கும் நிலையில் விவசாயத்துறையில் கூட்டுறவு இலாகா இறங்கவேண்டுமென்று சர்க்கார் நினைப்பது நிச்சயமாகத் தவறாகும் அது மிகவும் கஷ்டமாக இருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம் என்று குறிப்பிட விரும்புகிறேன். கூட்டுறவு இலாகாவின் மூலம் விவசாயிகளுக்கு வேண்டிய கடன்களை விவசாய உற்பத்திக்கு வேண்டிய பொருள்களைச் சரியானபடி கொடுப்பதற்குவேண்டிய வசதிகளைச் செய்யவேண்டுமென்று கூறி இந்த மானியத்தை ஆதரித்து என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

11 a.m. * Sri M. JAGANNATHAN : Mr. Chairman, Sir. I rise to oppose the demand and support the cut motion. Sir, during the . . . (The Hon. Sri R. VENKATARAMAN : The hon. Member need not oppose it ! Does he not want Co-operation?) I am opposing it simply; convention demands that I should oppose it. (Laughter.)

Sir, during the short span of time at my disposal, I wish to focus the attention of the Government to the question as to how far this co-operative movement has benefited the Harijans in our State. Sir, it is my considered opinion and that opinion is based upon

17th March 1959] [Sri M. Jagannathan]

concrete facts and long experience that this co-operative movement has completely left the Harijans out of the co-operative fold just in the same way as the Harijans were left out of the four-fold division of society in ages past. I should say that this co-operative movement in our State has done precious little so far in order to improve the lot of the Harijans. Sir, the Hon. Minister for Industries and Co-operation has circulated a review of the progress made in the Co-operative Development Schemes during the year 1958-59 and under the head ' Agricultural Credit ', the Hon. Minister declares in grandiloquent terms, ' the Co-operative movement in our State has fulfilled with distinction its role as a supplier of agricultural credit. The Co-operatives which covered over 49 per cent of the villages in the State and served 21 per cent of the rural population at the commencement of the Second Plan now cover 84 per cent of the villages and serve 34 per cent of the rural population. The volume of credit provided by the co-operatives which was about Rs. 6 crores at the commencement of the Second Five-Year Plan has gone up two fold, the amount lent during the current year till the end of January 1959 being Rs. 13·30 crores against the target of Rs. 13·50 crores to be achieved by the end of March 1950 '.

Well, Sir, this statement is a statement which paints a very rosy picture. If my opinion is asked I like to say that this percentage which has been claimed by the Hon. Minister to have covered the rural population is a per centage which does not include the Harijan masses as such. The percentage of Harijans who have been benefited by this co-operative movement will be almost next to nothing. Sir, this co-operative movement has completely failed to provide credit facilities to the poor Harijan ryots, because, the conditions and terms under which the loans are advanced by these credit societies are framed in such a way that the Harijans find it difficult to obtain any loans from these societies. These credit societies insist upon the fact that the person who comes before the Society asking for loans must produce heavy securities either in the shape of lands or in the shape of houses. The Harijans as we all know do not possess much of lands; nor do they possess houses which are valuable. At best, the houses in which Harijans live are places not worth mentioning, just poor huts, pib-stys. If the Harijans were to produce these houses by way of securities, the credit societies do not accept them. What is the net result? The result is the Harijans are completely denied any loan facilities from these credit co-operative societies. This fact has duly been emphasised by the Second Five-Year Plan. I may read from the ' Second Plan ', published by the Government of India, Planning Commission, in the year 1956. At page 226, paragraph 14, they say: " In the development of rural credit, perhaps, the greatest difficulty in the past has been that a substantial proportion of agriculturists are non-credit-worthy according to the rules and conditions for advancing loans which were generally prescribed. To meet this situation, it is proposed that loans should be advanced by credit societies on the basis of production programmes and anticipated crops and maximum credit limit will be fixed for each member and

[Sri M. Jagannathan] [17th March 1959

within this limit, he will be permitted to obtain loans according to his requirements. To ensure proper use of funds, loans will be given in kind, in the form of seed, fertiliser, etc. Where cash loans are given, the payments may be in instalments. Members of credit societies will be persuaded to agree in advance to market their produce through the primary marketing societies."

Sir, from this, it will be clear that the vast majority of Harijans who go to the credit societies, asking for loans are denied loans simply because they are 'non-credit-worthy'. They are non-credit-worthy. They are unable to produce any securities to the societies. If only the recommendation of the Second Plan Schemes are taken into consideration, namely, that the loans should be advanced not on the basis of securities as such, but on the basis of production programme and anticipated crops, I think the difficulties will be obviated to some extent and the Harijans might be in a position to get loan assistance from these credit societies. Otherwise, as things stand to-day, the Harijans will not be able to obtain any loan assistance from these credit co-operative societies.

Sir, if only the Government meant what they say in the matter of Harijan uplift, they wil come forward to ask the co-operative department to devise ways and means and formulate schemes with a view to provide co-operative societies for the uplift of Harijans in our State. It is no use that the Government should talk in high terms about Harijan Welfare and Harijan uplift without any reference to the concrete schemes which they formulate with a view to implement them for the purpose of Harijan uplift. There is a sort of erroneous attitude on the part of the Government when they say that 'we have created the department of Harijan uplift which goes into the whole question of uplifting the Harijan community in the entire State'.

(Mr. Speaker in the Chair.)

We all know that the Harijan Welfare department is a department intended for disbursing just scholarships par excellance, nothing more, nothing less.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I think the hon. Member may speak about these in the Demand for Harijans and Backward Classes. For, I will not be able to reply now to the points he raises.

SRI M. JAGANNATHAN : Sir, I am speaking of Harijan Welfare Department not with a view to expatiate upon the schemes which that department is enforcing, I mean, implementing. But I should say that this co-operative department should not simply rely upon the Harijan Welfare Department for the purpose of Harijan uplift as such. On the other hand the co-operative department in its own way can concentrate upon the uplift of Harijans by way of implementing its own schemes by creating a number of co-operative societies in various walks of life mainly intended for the purpose of Harijan uplift. It is only in that connection that I wanted to point out this aspect of the matter.

17th March 1959] [Sri M. Jagannathan]

Sir, the Government now think that the Harijans as such can be uplifted in our State simply because there is another department for that purpose. Far from it all that tall talk about Harijan uplift must take a concrete shape in the form of providing them with the facilities under the co-operative movement in order to enable them to come up in life economically and otherwise. Otherwise, their talk of Harijan uplift will be a sort of rigmarole. Therefore I earnestly appeal to the Hon. the Minister for Industries to come forward with a definite programme to start more co-operative societies for the purpose of uplifting Harijans.

The Second Five-Year Plan also gives another scheme, the scheme of starting a number of labour and construction co-operatives for the purpose of providing full employment for the vast unutilised labour force that is available in our rural areas. If the scheme is implemented, I am sure it will go to benefit the Harijans as such, because we all know that the Harijans are, for the most part of the year, unemployed except for agricultural operations for a period of five or six months in the year. For the rest of the year, Harijans remain unemployed. If these labour and construction co-operatives are started in accordance with the scheme formulated by the Second Five-Year Plan, I am sure that will benefit the Harijans and enable them to eke out a livelihood for themselves. With these words, Sir, I finish my speech. Thank you, Sir.

Sri S. NAGARAJA MONIGAR : On a point of information, Sir. Is it the intention of the hon. Member Sri M. Jagannathan that co-operatives should be started solely for Harijans on a communal basis?

Sri M. JAGANNATHAN : No, no.

*Sri R. KRISHNASAMI NAIDU : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் கூட்டுறவு மானிய பிரேரணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்தப் பிரேரணையின்மீது பல சகோதர அங்கத்தினர்கள் பல யோசனைகளைக் கூறியுள்ளார்கள். நாம் நம் நாட்டின் எதிர்கால வளர்ச்சிகள் அனைத்தையும் கூட்டுறவு தத்துவத்தின் கீழேதான் அடையவேண்டும் என்ற குறிக்கோளைக் கொண்டிருக்கிறோம். இந்த அடிப்படையில் நம்நாட்டின் எதிர்கால வளர்ச்சிக்கான திட்டங்கள் எல்லாம் வகுக்கப்பட்டு வருகின்றன. கூட்டுறவு இயக்கத்தை எதிர்காலம் எவ்வாறு கவர்ந்திருக்கிறது என்பதை இதன்மூலம் அனைவரும் தெரிந்துகொள்ளவேண்டும். ஆனால் இந்தக் கூட்டுறவு இயக்க உணர்ச்சி சிறு பிள்ளை முதலே நம் சிறுவர்களுடைய உள்ளத்தில் நன்றாக ஊன்றிவிட வேண்டும் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. சோஷலிஸ ஸமுதாய அமைப்பு நம் நாட்டில் ஏற்பட வேண்டுமென்பதை அனைவரும் ஒப்புக்கொள்ளுகிறோம். சோஷலிஸ சமுதாய அமைப்பு எப்படி நம் நாட்டில் ஏற்பட முடியும் என்றால் கூட்டுறவு தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு நாம் இயக்கும்போதுதான் ஏற்பட முடியும். இந்த நிலைமையில் கல்வி கற்கும் சிறுவர்களுக்கும்—அவரவர்களுடைய வகுப்புக்கேற்றவாறு இந்தக் கொள்கையை அவரது பாட புத்தகங்களிலேயே நன்றாக விளக்கி எழுதி அவர்கள் உணருமாறு செய்ய வேண்டும். ஆசிரியர்களும் இந்தக் கூட்டுறவு இயக்கத்தின் தத்துவங்களைத் தெள்ளத் தெளிய உணர்ந்துகொள்ளக்கூடிய முறையில் அதற்கான

[Sri R. Krishnasami Naidu] [17th March 1959

காரியங்களைச் செய்ய வேண்டும். அதோடு கூட்டுறவு ஸ்தாபனங்களில் இருக்கக்கூடிய நிர்வாகஸ்தர்களுக்கு பயிற்சி அளிப்பது என்பது ஒருபுறம் இருக்க அதற்கு முன்னாலேயே எதிர்காலத்தைப்பற்றி எப்படி சிந்திக்க வைக்கிறது, இப்போதுள்ள அனுபவங்கள் என்றால் இனிச் சின்னஞ்சிறு பிராயம் முதலே பொதுமக்கள் எல்லோருடைய மனதிலும் இந்தக் கருத்து புதைந்துவிடும்படியாகச் செய்ய வேண்டும் என்கிற முடிவுக்குத்தான் வரவேண்டியிருக்கிறது. இந்த இயக்கம் வெற்றிபெறுவதற்கு சமுதாயத் திலுள்ள ஒவ்வொருவரும் உழைக்கவேண்டியது கடமை. அப்படி எல்லோ ரும் பங்குகொள்ளக்கூடிய முறையில் சிறந்த திட்டமாக இது அமைந்து விட்டால் நாட்டின் வளர்ச்சி பல துறையினும் நல்ல முறையில்ஏற்படும் என் பதில் சந்தேகமில்லை. இந்த அடிப்படையில் அதிகமான பேர்களை ஐந்தாண்டுத் திட்டகாலத்திற்குள் இந்த இயக்கத்தின்கீழ் கொண்டுவரவேண்டும் என்பதற் காகப் பிரசார வேலை—இன்றைக்குச் செய்து வருவது கடலில் பெருங் காயத்தைக் கரைப்பது போன்ற அளவில்தான்—காரியங்கள் நடைபெற்று வருகின்றன என்று சொல்வேன். ஸ்ரீவில்லிபுத்தூர் தாலூகாவை எடுத்துக் கொண்டால் 87 கூட்டுறவு சங்கங்களுக்கு ஒரு மேல்பார்வை யூனியன்தான் இருக்கிறது. அவற்றின் மூலம் 20 லட்சம் முதல் 30 லட்சம் வரையில் குறுகிய காலக் கடன் கொடுத்து வாங்கப்படுகிறது. அப்பேர்ப்பட்ட சங்கங்க ளின்கீழ் எல்லோரையும் கொண்டுவருவதற்காகப் பிரசாரம் செய்வதற்கு இன்றையதினம் 10 ரூபாய், 15 ரூபாய் என்ற அளவில் மட்டும் செலவு செய்து வருவது போதாது என்று குறிப்பிட விரும்புகிறேன். குறிப்பாக இன்றைய தினம் கூட்டுறவு தத்துவங்களை எடுத்து பொதுமக்களிடத்தில் சரியான முறையில் பிரசாரம் செய்தாகவேண்டியிருக்கிறது. இப்போது அமைந்திருக்கிற மேல்பார்வை யூனியனை சரியான முறையில் இயங்கு வதற்குத் தக்கபடி அதை செலவு கொஞ்சம் அதிகமானாலும், தக்கபடி அமைக்கவேண்டும். கூட்டுறவு தத்துவ அடிப்படையில் இன்று அரசாங்கம் அமைத்திருக்கிற பல திட்டங்கள் பொதுமக்களை இன்னமும் கவராமல் பல பிரதேசங்களில் இருந்துகொண்டிருக்கின்றன. குறிப்பாக எங்கள்பகுதி யில் பூர்ண கடன் கொடுக்கும் திட்டத்தைக் கொண்டு வந்திருந்தும், இந்த ஸ்தாபனங்களின்கீழ் இல்லாமல் பக்கத்தில் பலபேர்கள் வட்டிக்கடன் வாங்கிவருகிறார்கள். நானும் மற்றவர்களும் அவர்களிடத்தில் நேரில் சென்று கேட்டுக்கொண்டோம். இந்தக் கூட்டுறவு ஸ்தாபனங்களின்கீழ் சேர்ந்து கொள்வதனாலே என்ன என்ன பலனை அனுபவிக்க முடியும் என்பதையெல்லாம் கூறியும்கூட அவர்கள் இதில் சேர்வதற்கு முன்வர வில்லை. காரணம் இதைப்பற்றி தப்பான எண்ணம் அவர்கள் மனதில் ஊன்றிப்போய் இருப்பதுதான். இதை மாற்றுவது கடினமாக இருக்கி றது. ஏழை ஹரிஜனங்களும்கூட—ஸ்ரீவில்லிபுத்தூரைப் பொறுத்த வரை யில்—நாங்கள் எவ்வளவோ கேட்டுக்கொண்டும் இன்னும் அநேகம் பேர் சேரவில்லை. இப்படி பல இடங்களில் அவர்களுடைய அறியாமையின் கார ணமாக இந்தப் பயன்களைப் பெறுவதற்குப் பின்தங்கிவிடுகிறார்கள். இதற் காகப் பிறரைக் குற்றம் சொல்லிப் பயன் இல்லை. இதற்காக அரசாங்கத்தை குறைகூறுவதைவிட்டு இந்தச் சட்டமன்றத்தில் உள்ள ஒவ்வொரு உறுப்பி னர்களும் தங்கள் தங்கள் அனுபவத்தை வைத்துக்கொண்டு தங்கள் தங்கள் தொகுதியில் கூட்டுறவு இயக்கத்தின்கீழ் ஏதாவதொரு திட்ட வேலையை எடுத்துக்கொண்டு முனைந்து செய்து காட்டினால் மக்களுக்கு மிக வும் உபயோகமாக இருக்கும். அவ்வாறு இல்லாமல் பொதுப்படையாகக் குறை சொல்வது அவ்வளவு உபயோகமாக இருக்காது என்று நினைக்கி றேன். கிராமத்திற்கு ஒரு சங்கம் வைப்பதென்ற மத்திய சர்க்கார் யோசனை க்கு மாறாக நம் ராஜ்யத்தில் நமக்கு அனுபவத்தில் நலமாகத்தோன்றும் வகையில் அவர்கள் அமைக்க அனுமதி வாங்கிவிட்டது குறித்து நாம் சந்தோஷம் அடையவேண்டும்.

விவசாய கூட்டுறவு பாங்குகள் பல, கனம் அங்கத்தினர்கள் கூறியதுபோன்று கிராமப் புறங்களில் நல்ல பலனை அளித்துவருகின்றன என்பதை நாம் அனுபவபூர்வமாகக் காண்கிறோம். அவைகள் பல இடங்களில் ஏற்பட வேண்டும். கிராமங்களில் அமைக்கப்பட்டுள்ள விவசாயக் கூட்டுறவு பாங்குகளுக்கு சில குறிப்பிட்ட வருஷ காலம் வரை ஊழியர்களை அந்த பாங்குகளிடமிருந்து அவர்களுக்கான சம்பளத்தைப் பெறாமல்

இலவசமாகக் கொடுப்பது என்ற வரையறையை இன்னும் சில ஆண்டுகளுக்கு நீடிக்கவேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன். பொதுமக்களுக்கு அந்த ஸ்தாபனங்களில் உள்ள நம்பிக்கை இன்னும் பலப்பட வேண்டும். எனவே இந்தச் செலவுகளை அரசாங்கம் பொருட்படுத்தக்கூடாது. அவைகள் கிராமங்களில் நன்ருக வேரூன்றும் வரையிலும், அவைகளுடைய லேவாதேவி அதிகரித்து அவைகளுடைய பொருளாதார நிலை நன்ருக உயரும் வரையிலும், அதிகாரிகளின் சேவையை அவைகளுக்கு இலவசமாகக் கொடுப்பது போன்ற உதவிகளை சர்க்கார் அவைகளுக்கு அளிக்க வேண்டும். இது சர்க்காரின் கொள்கையாகவும் கூட்டுறவு இலாகாவின் கொள்கையாகவும் இருக்க வேண்டும். இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கி றேன்.

மார்க்கெட்டிங் ஸொஸைடிகள் சம்பந்தமாக கனம் அங்கத்தினர்கள் பல யோசனைகள் சொன்ஞர்கள். நான் ஒன்று சொல்கிறேன். அவைகள் தாலூகாவிற்கு ஒன்று வீதம் இருக்கவேண்டுமா அல்லது தாலூகாவிற்கு இரண்டு வீதம் இருக்கவேண்டுமா அல்லது தாலூகாவிற்கு மூன்று வீதம் இருக்கவேண்டுமா என்பது வரையறுக்கப்பட வேண்டும். ஆங்காங்கே யுள்ள பொருளாதார நிலைமைக்குத் தகுந்தபடி சில இடங்களிலும், தேவைக்குத் தகுந்தபடி சில இடங்களிலும் இவைகளின் எண்ணிக்கை இருக்கலாம். இன்னும் சில இடங்களில் அவரவர்கள் விருப்பத்திற்குத் தகுந்தபடி பல சங்கங்கள் அமைக்கப்படுகின்றன. எனவே எல்லாச் சங்கங்களுக்கு போதிய வேலைகள் இருக்கின்றனவா என்று தெரிந்துகொள்ள வேண்டும். அந்த ஸொஸைடிகளின் அங்கத்தினர்கள் உற்பத்தி செய்து கொண்டுவரும் பொருள்கள் அவைகளின்மூலம் விற்றுக்கொடுப்பதில் பல கஷ்டங்கள் இருக்கின்றன. இப்போது, முன்கூட்டியே, பயிரிடும்போதே, மிளகாய், பருத்தி போன்ற பொருள்களை விளைவிக்க ஏக்கருக்கு 200 ரூபாய், 300 ரூபாய் என்று விவசாயிகளுக்கு கண்ட்ரோல். கிரடிட் கடன் கொடுக்கப் படுகிறது. அவைகளை விளைவித்த பிறகு மார்கெட்டிங் ஸொஸைடிகளும் கொண்டுவரும்போது வியாபாரிகளால் பல இடையூறுகள் ஏற்படுகின்றன. இந்த இடையூறுகளை நீக்குவதற்காக, இப்போது வியாபாரிகளுக்குக் கொடுக்கும் லைஸென்ஸுகள் விஷயத்தில் ஏதேனுமொரு கட்டுதிட்டம் வகுப்பது நல்லது என்று கருதுகிறேன். இந்த விவசாயிகள் தாங்கள் உற்பத்திசெய்த பொருள்களை மார்க்கெட்டிங் ஸொஸைட்டிகளுக்குக் கொண்டு போவதை தடை செய்யும் வகையில் வியாபாரிகள் இடையில் சென்று வாங்கினுல் அந்த வியாபாரிகளுக்குக் கொடுக்கப்பட்டுள்ள லைஸென்ஸ்கள் ரத்து செய்யப்படும் என்ற நிபந்தனையை லைஸென்ஸ் விதிக்க வேண்டுமென்று நினைக்கிறேன். கூட்டுறவு விற்பனைச் சங்கங்களில் விற்கப்படும் சாமான்கள் கலப்படம் செய்யப்பட்டவையாக ஆக்கப்பட வேண்டும் என்ற நோக்கத்துடன் வியாபாரிகள் பல காரியங்கள் செய்கிருர்கள். கூட்டுறவு விற்பனை சங்கங்கள் விற்கும் சாமான்களுக்கு அதிக விலை கிடைக்கக்கூடாது என்ற நோக்கத்துடனும் இன்னும் பல சுயநல நோக்கங்களுடனும் வியாபாரிகள் பல காரியங்களைச் செய்கிருர்கள். இப்படிப்பட்ட காரியங்களைச் செய்யும் வியாபாரிகள் லைசென்ஸுகள் ரத்து செய்யப்படும் என்று லைஸென்ஸுகளை அவர்களுக்கு வழங்கும்போதே வரையறுத்தால் நல்லது என்று நினைக்கிறேன். அனுபவத்தில் இந்தக் கஷ்டங்களைத் தெரிந்து கொண்டதால்தான் இந்த யோசனைகளைச் சொல்லுகிறேன் என்பதை இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்கிறேன்.

எங்கள் பகுதியில் உள்ள மார்கெட்டிங் ஸொஸைடியிடம், நீண்ட இழை பருத்தி விதை உற்பத்தி செய்வதற்கான திட்டம்—அரசாங்கம் நடத்தும் ஒரு திட்டம்—ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. 60-ம் நெம்பர் நூல் வரை நூற்கக்கூடிய பருத்தி அங்கே விளைகிறது. அங்கே உற்பத்தியாகும் நீண்ட இழைப் பருத்தி விதைகளை இந்த அரசாங்கத்தின் கட்டளைப்படி இந்த மாநிலம் பூராவும் அனுப்பி வருகிருேம். கிட்டத்தட்ட 6,000 ஏக்கர் அங்கே மார்க்கெட்டிங் ஸொஸைடியின் மேற்பார்வையில் பயிரிடப்படுகிறது. மார்க்கெட்டிங் ஸொஸைடி எந்த ஜின்னிங் பாக்டரிக்குக் கொண்டுபோய்—தங்களுக்குச் சொந்தமான ஜின்னிங் பாக்டரிக்குக் கொண்டு போய்—பருத்தியை ஜின் பண்ண விரும்புகிருர்களோ அங்கே கொண்டு

[Sri R. Krishnasami Naidu] [17th March 1959

போய் அதை அவர்கள் ஜின் பண்ண முடியாதபடி வியாபாரிகள் அவர்களுக்கு இடைஞ்சல்கள் செய்கின்றனர். இக்காரணங்களால், கலப்படமில்லாத விதைகளைத் தயாரித்துக் கொடுப்பதில் கஷ்டம் இருக்கிறது. சுமார் 7 ஆண்டுகள் பரீட்சைகள் நடத்திய பிறகே பொறுக்கு விதைகளைச் சிபார்சு செய்கிறார்கள். அப்படி இருக்க எந்த இடத்திலும் ஆரம்பித்த அடுத்த வருஷமே கலப்படம் ஏற்படுவதற்கான சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. வியாபாரிகள் குறுக்கிடுவதால் இந்த கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இப் பிரச்னையை அரசாங்கம் நன்றாக கவனிக்க வேண்டும். நமது நாட்டில் நீண்ட இழைப் பருத்தியும் பஞ்சும் குறைவாக உற்பத்தி செய்யப்படுகின்றன. அவைகளை நாம் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்கிறோம். எனவே இத்தகைய கூட்டுறவு ஸொஸைடிகளுக்கு வியாபாரிகளாலும் மற்றவர்களாலும் இடைஞ்சல்கள் ஏற்படாதபடி பார்த்துக்கொண்டு இவைகளுக்கு ஆக்கம் அளிக்க வேண்டும் என்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : The hon. Member has got only one minute more.

**Sri R. KRISHNASAMI NAIDU** : அடுத்தபடியாக, சூபர்வைசிங் யூனியன்களை ஒவ்வொரு தாலூகாவிலும் பலப்படுத்த வேண்டும் என்று ஸ்ரீ ராமலிங்கம் சொன்னார். அதற்கான காரியாலயங்களும் லைப்ரரிகளும் இருக்க வேண்டும். கூட்டுறவின் தத்துவத்தை பரப்ப வேண்டுமானால் சிறந்த வகையில் திட்டமிட்டு இத்திட்டங்களை மக்கள் புரிந்து கொள்ளச் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும். விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்துவதில் நீண்ட காலதாமதம் ஏற்படுகிறது என்று கனம் அங்கத்தினர்கள் புகார் சொன்னார்கள். அதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். விவசாயக் கூட்டுறவு சங்கங்களை அமைக்க வேண்டுமானால் ரெஜிஸ்டிராருக்கு ப்ரோபோஸலை அனுப்ப வேண்டும், அவருக்கு சர்க்காரிடமிருந்து பெர்மிஷன் வந்த பிறகு தான் சங்கத்தை ரெஜிஸ்டர் செய்வதற்கு ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. சில காரியங்களுக்காக ரெஜிஸ்டிராருக்கு பணம் ஒதுக்கப்படுவதுடன், அதிகாரமும் வழங்கப்படுகிறது. அதே மாதிரி இந்த விஷயத்திலும் அவருக்கு நிறையப் பணமும் வேண்டிய அதிகாரமும் வழங்கப்பட்டால், காலதாமதம் குறையும்.

**Sri V. K. KOTHANDARAMAN** : கனம் சபாநாயகர் அவர்களே, நான் இந்த வெட்டுப் பிரேரணையை ஆதரித்துப் பேச விரும்புகிறேன். கூட்டுறவு இயக்கம் வளர வேண்டும், அதை வளர்ப்பதன் மூலம் மக்களுக்கு பல நன்மைகளையும் செய்ய வேண்டும் என்பதுதான் எல்லோருடைய நோக்கமும் ஆகும் என்று சொன்னாலும் இன்று எல்லோரும் அந்த முறையில் செயல்படுகின்றனரா என்று பார்க்கும்போது அவ்வாறு செய்யப்படவில்லை என்றே சொல்லவேண்டியிருக்கிறது. இன்று பணவசதி படைத்தவர்களின் ஆதிக்கத்தில்தான் எல்லாச் சங்கங்களும் எல்லா பாங்குகளும் இருக்கின்றன என்பது நாம் எல்லோருக்குமே தெரிந்த விஷயம். இப்போது, டெபுடி ரெஜிஸ்டிரார்கள், ப்ரைமரி ஸொஸைடிகளுக்கு இவ்வளவு பணம் கொடுக்க வேண்டுமென்று சொன்ன போதிலும்கூட ஸென்ட்ரல் பாங்குத் தலைவரோ போர்டு நிர்வாகத்தில் இருப்பவர்களோ அவ்வளவு பணம் கொடுப்பதில்லை. அவர்களுக்கு வேண்டியவர்களாக எந்தத் தலைவர்கள் இருக்கிறார்களோ அவர்களுக்குத்தான் வேண்டிய பணம் கொடுப்பார்கள். வேண்டாதவர்கள் தலைவர்களாக வந்திருந்தால் அந்த ஸ்தாபனங்களுக்கு பணம் கொடுப்பதில்லை. அவைகள் புறக்கணிக்கப்படும். அவைகளுக்கு இலகுவில் பணம் கொடுப்பதில்லை. இந்த நிலைமை கிராமப்புறங்களில் சர்வசாதாரணமாக இருந்து வருகிறது. இன்றையதினம் மத்திய பாங்கிலும் ஸொஸைடிகளிலும் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்ட வேண்டும் என்று ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் விரும்புகிறார்கள். அங்கே அரசியலை வளர்க்க வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள். அந்த ஸ்தாபனங்களின் தலைவர்களை தேர்தல் மூலமாகவே தேர்ந்தெடுக்க வேண்டும் என்று சொல்லப்பட்டாலும், வேறொருவரை நாமினேஷன்

17th March 1959] [Sri V. K. Kothandaraman]

செய்வதற்கான அதிகாரம் சர்க்காருக்கு சட்டத்தில் அளிக்கப்பட்டிருப்பதால் இந்த ஸ்தாபனங்களில் பல ஊழல்கள் ஏற்படுவதை நாம் பார்க்கிறோம். உதாரணமாக, ராஜபாளையம் ஹௌஸிங் ஸ்கீம் ஆரம்பிக்கப்பட்டபோது அங்கே பெரும்பான்மையான அங்கத்தினர்கள் தேர்ந்தெடுத்த தலைவரை சர்க்கார் நீக்கிவிட்டு வேறொரு தலைவரை நாமினேஷன் செய்தார்கள். அதேபோல, இந்த மாநிலத்தில் உள்ள அத்தனை சில்க் வீவர்ஸ் சொஸைடிகளிலும் தலைவர்கள் நாமினேஷன் செய்யப்பட்டிருக்கிறார்கள். இதுபோன்று எத்தனையோ சங்கங்களிலும் பாங்குகளிலும் தலைவர்களை சர்க்கார் நாமினேஷன் செய்திருக்கிறார்கள். எனவே, கூட்டுறவு இயக்கத்தை மக்களாகவே நடத்துகிறார்கள், தலைவர்களை மக்களே தேர்ந்தெடுக்கிறார்கள், எனவே தலைவர்கள் தவறு செய்தால் அது மக்களின் தவறுதான் என்று சர்க்கார் சொல்வது சரியல்ல. அவ்வாறு சொல்லப்படுமானால், இந்த ஸ்தாபனங்களில் தலைவர்கள் பணத்தைக் கையாடுகிறார்கள் என்றால், அது மக்களின் குணம், மக்கள்தான் பணத்தை எடுத்துக்கொண்டார்கள் என்று சொல்லி நடவடிக்கை எடுக்காமல் விட்டுவிடுவதா அல்லது நடவடிக்கை எடுக்கப்படுமா என்பது நமக்குத் தெரிந்தாகவேண்டும்.

இந்த நிலையில் சரியான ஆடிட் ரிப்போர்ட்டும் செய்வதில்லை என்றும் தெரிவித்துக்கொள்கிறேன். உதாரணமாக, 54–55 ஆடிட் ரிப்போர்ட், ஸ்டேட் ஹான்ட்லூம் வீவேர்ஸ் சொஸைடி ஆடிட் ரிபோர்ட் சென்ற ஆண்டில் தான், 58-ம் ஆண்டில்தான் வைக்கப்பட்டது. இப்படி பல வருடங்கள் கழித்து பின்னர் ரிப்போர்ட்டுகள் கொடுக்கப்பட்டால் அதிலுள்ள ஊழல்களை எப்படி கவனத்தில் வைத்துக்கொண்டிருக்க முடியும். இதுபோன்று ஆடிட் ரிபோர்ட்களை வெகு காலம் கழிந்து பிற்பாடு வைப்பதின் நோக்கம் என்ன? ஊழல்களை மறைப்பதற்காகத்தான் இப்படி காலம் தாழ்த்தப் படுகிறது என்று ஏன் சொல்லக்கூடாது? சர்வ சாதாரண மக்களுக்காக சொஸைடிகள் அமைக்கப்படுகின்றன என்று சொல்லிவிட்டால் போதாது. இன்று மக்கள் ஒன்றுபட்டு ஒரு சொஸைடி அமைப்பதென்றால், அது லேசான காரியமல்ல. மதிப்பிற்குரிய நேருஜி அவர்களே சொல்லியிருக்கிறார்கள். நான் ஒரு சொஸைடியை ரெஜிஸ்டர் செய்ய, முயற்சி செய்தும்கூட ஒரு வருடத்திற்கு முடியவில்லை, அந்தளவிற்கு நிலை இருக்கிறது என்று சொன்னால் சாதாரண மக்களின் நிலை என்னவாகயிருக்கும் என்று அவர்களே திட்டவட்டமாக கூறியிருக்கிறார்கள். இதற்கெல்லாம் காரணம், சட்டதிட்டங்களில் இருக்கக்கூடிய ஊழல்களை மாற்றி திருத்தியமைக்காத வரையில், நாங்கள் இத்தனை சங்கங்களை அதிகப்படுத்திவிட்டோம், இத்தனை பாங்குகளை அதிகப்படுத்தி விட்டோம், பணம் அதிகம் கொடுத்திருக்கிறோம், என்றெல்லாம் சொல்லி விட்டால் போதாது. அந்த சங்கங்களில் ஏற்படுகிற ஊழல்களைப் போக்குவதற்கு என்ன முயற்சிகள் எடுக்கப்பட்டிருக்கின்றன ? அப்படி ஊழல்களைப் போக்குவதற்கு முயற்சிகள் எடுக்கப்பட்டிருக்கின்றனவா என்று பார்த்தால் இல்லையென்றுதான் சொல்ல வேண்டும். உதாரணமாக, காலஞ்சென்ற நம் மதிப்பிற்குரிய முத்துரங்க முதலியார் அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட ஸ்ரீபெரும்புதூர் மார்க்கெட்டிங் சொஸைடியில் பல ஊழல்கள் ஏற்பட்டன. பத்தாயிரக் கணக்கான ரூபாய் கையாளப் பட்டதென்று பகிரங்கமாக நோட்டீஸ் மூலம் விளம்பரப்படுத்தி சர்க்காருக்கும் அது அனுப்பப்பட்டது. அதுமாத்திரமல்ல. போலீஸ் இலாகா அமைச்சர் அவர்களுக்கும்கூட தேர்தல் காலத்தில் . பத்தாயிரக்கணக்கான ரூபாய் அந்தப் பணத்திலிருந்து செலவு செய்யப்பட்டதென்றும் அந்த நோட்டீஸில் கண்டுள்ளது. அப்படியிருந்தும்கூட இதுவரையிலும் அதுபற்றி விசாரணை செய்து நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றனவா என்று பார்த்தால் இல்லை என்றுதான் தெரியவருகிறது. இதேபோன்று இன்றுகைத்தறி நெசவாளர்களுக்காக அவர்களின் பாதுகாப்பிற்காக வேண்டி, அவர்களின் அபிவிருத்திக்காக வேண்டி செஸ் நிதியில் கோடிக்கணக்கில் ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம் என்று சொல்லலாம். உதாரணமாக, 1954–55-ம் ஆண்டில் மத்திய அரசாங்கம் இந்த ராஜ்யத்திற்கு கிட்டத்தட்ட 142 லட்சம் ரூபாய் கொடுத்ததை 1958–59-ல் 86 லட்சமாக குறைத்திருக்கிறார்கள். இந்தப் பணம்கூட ஒழுங்கான முறையில் வருகிறதா என்று பார்த்தால் அப்படி ஒழுங்காக வருவதில்லை.

11-30 a.m.

[17th March 1959

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்களிடம் நான் மீண்டும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன், ஹாண்ட் லூம் சம்பந்தமான பிரச்னைகளை அவர்கள் இண்டஸ்ட்ரீஸ் டிமாண்டில் பேசினால் அதற்கு பதில் சொல்வதற்கு சுலபமாக இருக்கும். "பாரத்தில்", இது வரலாம், ஆனால் சப்ஜெக்ட் இண்டஸ்ட்ரீஸில் வரும்.

MR. SPEAKER : அதில் "சான்ஸ்" கிடைக்கிறதோ இல்லையோ என்று அவருக்கு பயம். ஆகவே, இதிலேயே சொல்கிறார்.

THE HON. SRI R. VENKATARAMAN : இதில், பதில் சொல்ல முடியாதே என்பதற்காகத்தான் சொல்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : அப்படி செஸ் நிதியில் இருந்து நமக்கு சரியாக கிடைக்காதிருப்பதற்குக், காரணம் நமது அரசாங்கம் திட்டமிட்டு மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பிய பிறகு அவர்கள் அங்கீகாரம் செய்தாலொழிய அனுப்புவது கிடையாது. நான் சொல்கிறேன், அங்கீகாரம் நடந்தாலும் சரி, நடக்கவில்லை என்று சொன்னாலும் சரி ஒதுக்கப்பட்டிருக்கும் பணத்தை இந்த ராஜ்யத்திற்கு அனுப்பிவிட வேண்டும். அது கைத்தறி நெசவாளர்களுக்கு உபயோகப்படுத்தப்படவேண்டும். அப்படி அந்தப் பணம் சரியான முறையில் வராத காரணத்தினால் இன்றையதினம் அபிவிருத்தி வேலைகள் எல்லாம் தடைபட்டுள்ளன. ரிபேட் கொடுப்பது தவிர மற்றபடி கைத்தறி நெசவாளர்களுக்கு செய்யப்பட வேண்டிய அபி விருத்தி வேலைகள் ஒன்றும் செய்யப்படவில்லை என்பதை நான் இந்த சந்தர்ப்பத்தில் எடுத்துக் கூற விரும்புகிறேன். 1956–57-ம் ஆண்டில் இருந்ததைவிட 1957–58-ல் புதிய சொஸைடிகள் அமைப்பதோ, அங்கத்தினர் களை சேர்த்திருப்பதோ ரொம்பக் குறைவாகயிருக்கிறது. அதேபோன்று ஆரம்பித்திருந்த "மேக்கிங் யூனிட்ஸ்"ம் மூடப்பட்டிருக்கிறது. வீடு கட்டும் திட்டமும் நிறுத்தப்பட்டுள்ளது. 1958-59-ம் ஆண்டுக்கு ரிபேட் ஒதுக்கப்பட்டி ருந்தது. இந்த மாதம் 31-ம் தேதியோடு இந்த வருடமும் முடிவடையப் போகிறது. பெருவாரியான சொஸைடிகளுக்கு ரிபேட் இன்னும் கிடைக்க வில்லை. அப்படி கிடைக்கப்படாத காரணத்தினால் இன்றைய தினம், உற் பத்தி செய்த ஜவளியில் மூன்றில் ஒரு பாகம் தேங்கிக் கிடைக்கிறது என் பதை நான் அமைச்சர் அவர்களின் கவனத்திற்குகொண்டுவர விரும்பு கிறேன்.

அடுத்தபடியாக, மார்கெட்டிங் ஸொசைடிகளின் வழி உரம் வினியோகம் செய்யப்படுகிறது என்று பெயரே தவிர அவ்வளவும் கள்ள மார்கெட்டில் தான் விற்கப்படுகிறது. யார் விவசாயம் செய்கிறார்களோ அவர்களுக்கு விநியோகம் செய்வதின் மூலம்தான் அதைப் பயன்படுத்த முடியும். ஆனால் இன்றைய தினம் செல்வாக்குள்ளவர்களுக்குத்தான் மார்கெட்டிங் சொஸைடிகள் பயன்படுகிறதே தவிர ஏழை மக்களுக்கு அவைகள் பயன்படுவதில்லை. உதாரணமாக, இன்றைக்கு நெல் மூட்டை என்று சொல்லி தவிடு மூட்டையையும், புளியங்கொட்டை மூட்டையையும் வைத்து பணம் வாங்குவதற்கு மார்கெட்டிங் சொஸைடிகள் உதவியாயிருக் கின்றன. அதுதான், தென் ஆற்காடு ஜில்லாவில் ஒரு மாதத்திற்கு முன்னால் ஒரு லட்சம் ரூபாய் அளவில் ஊழல் ஏற்பட்டதென்று பத்திரி கையில் கூட பார்த்தேன். இந்தளவில், ஊழல்கள் மேலும் மேலும் அதிகப்பட்டுக்கொண்டே போகின்றன. கூட்டுறவு முறையில், இன்று விவசாய பாங்குகளை அதிகப்படுத்தி விட்டோம் என்று சொல்லக் கூடிய அதே நேரத்தில், நிலச்சீர்த்தம் வரப்போகிறது என்று கண்டு பெரிய நிலச்சுவான்தார்கள் தங்கள் நிலங்களை மற்றவர்கள் பெயருக்கு மாற்றி லட்சக்கணக்கான பணத்தை இன்று அதன் மூலம் பெற்று வருகிறார்கள். இந்த பாங்குகள் அவர்களுக்கு சாதகமாயிருக்கின்றன. ஆகவே, இது போன்ற நிலைகள் ஏற்பட்டு வருவதால் சர்க்கார் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். பரிபூர்ண கவனம் இந்த கூட்டுறவு பாங்குகளில் செலுத்தப் படவேண்டும், அதில் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பதை நான் தாழ்மையோடு தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

17th March 1959] [Sri V. K. Kothandaraman]

அடுத்தபடியாக, பலநோக்கு சங்கங்கள், நாணய சங்கங்கள், விவசாய பாங்குகள், விவசாயப்பண்ணைகள் இவைகளை அதிகப்படுத்தும் அதே நேரத்தில் இந்த மாதிரிப்பட்ட சங்கங்களினால் கிராமங்களில் இன்று குழப்பம் ஏற்படுகிறது, கட்சிகள் ஏற்படுகிறது என்று சொன்னால் அதற்கு காரணமாக இருப்பவர்கள் கிராம மணியக்காரர்களும், கணக்குப் பிள்ளைகளும்தான். அப்பேர்ப்பட்ட பேர்வழிகளை அந்த சங்கங்களில் போட்டு வைத்தால், கட்டுச் சோற்றில் பெருச்சாளி புகுந்த மாதிரி மேலும் மேலும் அங்கு ஊழல்கள் தான் பெருகிக்கொண்டிருக்கும். ஆகவே, மணியக்காரர்கள், கணக்குப் பிள்ளைகள் அதில் இருக்கக் கூடாது என்று சட்டத்தை திருத்த வேண்டும். இதுபோன்று விவசாயிகளுக்கு கூட்டுறவு சங்கங்கள் மூலம் ட்ராக்டர்கள், போரிங் செட், இவைகள் எல்லாம் வாங்கிக்கொள்வதற்கு முதல் பிரயாரிடி யாக அவர்களுக்கு சலுகை காட்டப்படவேண்டும். விவசாயத்திற்கு தேவை யான உப கருவிகள் இன்றைக்கு குறைந்த ரேட்டில் கிடைக்க குறைந்த பட்சம் ஒவ்வொரு பிர்காவிலும் ஒவ்வொரு தொழிற்சாலை ஏற்படுத்தப்பட வேண்டும். மோட்டார், பஸ் தொழிலாளர்கள் ஒன்றுபட்டு கூட்டுறவு முறை யில் டிரான்ஸ்போர்ட் போக்குவரத்தை நடத்துவதற்கு அவர்களுக்கு ரூட்கள் கொடுப்பதில் அவர்களுக்கு முதல் பிரயாரிடி கொடுக்கப்படவேண் டும். பஞ்சாயத்து யூனியன்கள் எப்படி ப்ளாக் வாரியாக அமைக்கப்பட்டி ருக்கிறதோ அதேபோன்று இந்த கூட்டுறவு சங்கங்களும் ப்ளாக் வாரியாக அமைக்கப்படவேண்டும். மடம், கோவில் இவைகளுக்கு சொந்தமாகயிருக் கும் நிலங்களை எடுத்து, உடனடியாக ஒரு விவசாய மாதிரிப் பண்ணை ஆரம்பிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். அதேபோன்று, நான்கு தாலூகா மார்கெட்டிங் சொஸைடிகள் ஆரம்பிக்கப்போவதாக அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். குடியாத்தம் தாலூகாவில் ஒரு மார்க்கெட்டிங் சொஸைடி ஆரம்பிக்கவேண்டுமென்று பல வருடங்களாக முடிவு எடுத்திருந்தும் இன்னும் அது ஆரம்பிக்கப்படாதிருப்பதால் அதை உடனடியாக ஆரம்பிக்க வேண்டுமென்றும் அமைச்சர் அவர்களை கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக, கூட்டுறவு பண்டகசாலைகளை நல்ல முறை யில் ஊக்குவிக்க வேண்டுமென்றால் கூட்டுறவு பண்டகசாலைகளில் விற்பனை செய்யக் கூடிய பொருள்களுக்கு விற்பனை வரியிலிருந்து விதிவிலக்கு கொடுக்கவேண்டும். கூட்டுறவு பண்டகசாலைகளில் உணவுப் பொருள்களை இப்பொழுது அதிக விலை கொடுத்து வாங்கி குறைந்த விலையில் விற்கக் கூடிய நிலையிருக்கிறது, ஸ்டேட் பர்ச்சஸ் முறை வந்ததால். ஆகவே, அவர் களுக்கு நியாயமான விலையில் கிடைக்கக்கூடிய நிலையை உண்டாக்க வேண்டும். அதேபோன்று கூட்டுறவு சங்கங்கள் மூலம் நியாயவிலைக் கடைகள் நடத்துவதற்கும் சர்க்கார் போதுமான வசதி செய்து கொடுக்க வேண்டும். கூட்டுறவு பண்டகசாலைக்கு இம்போர்ட் லைசென்ஸ் கொடுப்பது என்றால் ரெஜிஸ்டர் செய்து மூன்று வருடங்களுக்கு பின்னர்தான் கொடுப் பது என்ற நிபந்தனை இருக்கிறது. அதையும் மாற்றியமைத்து ஒரு வருடத்திற்குப்பிறகு கண்டிப்பாக கொடுக்கவேண்டுமென்ற நிலையிருக்கும்படி செய்யவேண்டும்.

ஆகவே, நிர்வாகச் செலவைக் குறைக்கவேண்டும். கட்சி பாகுபாடு கூடாது, சட்டத்தைத் திருத்தி பங்குதாரர்களுக்கு அதிகப் பங்கு கொடுக்க வேண்டும், ப்ரைமரி சொஸைடிகளுக்கு அதிக அதிகாரம் கொடுக்கவேண்டும். உரம் நியாயமான வழியில் சொஸைடிகள் மூலம் விநியோகம் செய்யப் பட வேண்டும். உற்பத்திப் பொருள்களின் விநியோகம் சங்கங்கள் மூலம் தான் இருக்கவேண்டும். இந்த சிறந்த கொள்கைகள் மக்களுக்கு நல்ல முறையில் பயன்பெறும்பொருட்டு சட்டத்தை மாற்றி, திருத்தியமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

SRI K. S. SUBRAMANIA GOUNDER : கனம் சபாநாயகர் அவர்களே கூட்டுறவு அமைச்சர் கொண்டுவந்திருக்கும் கூட்டுறவு மான்யத்தை ஆத ரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கூட்டுறவு அமைச்சர் அவர்களும், இந்த இலாகாவில் முன்பு ரிஜிஸ்டிராராக இருந்த ஸ்ரீ பழனி யப்ப முதலியார் அவர்களும் இதிலே மிகவும் அதிக சிரமும், அக்கரை 11-40 a.m.

[Sri K. S. Subramania Gounder] [17th March 1959

யும் எடுத்துக்கொண்டு, இந்த இலாகாவிலே என்னென்ன காரியங்கள் செய்யவேண்டுமோ, அவைகளையெல்லாம் செவ்வனே செய்ததற்காக நான் அவர்களை முதலிலே பாராட்டுகிறேன்.

நம்முடைய ராஜ்யம் மற்ற ராஜ்யங்களைவிட கூட்டுறவு இயக்கத்திலே முன்னணியில் நிற்கிறது என்பதை நாம் மட்டுமல்ல, நம்முடைய நாட்டிலுள்ள அனைவரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இந்த நிலையிலே நாம் இன்னும் எந்த அளவில் முன்னேற வேண்டுமென்பதற்கு நாம் திரும்பவும் வழிவகை செய்துதான் ஆகவேண்டும். பொதுவாக நம்முடைய நாட்டிலே கூட்டுறவு இயக்கம் எந்த அளவிலே முன்னேற வேண்டும் என்று இந்தியாவுக்கே அவர்கள் ஒரு திட்டம் வகுப்பதில் நம்மையும் சேர்த்தால் நாம் இன்னும் அதிகமாக முன்னேறுவதற்கு அது ஒரு வழியாக இருக்காது என்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். குறிப்பாக விவசாய பாங்குகளை எடுத்துக்கொண்டால், யு.பி., அஸ்ஸாம் போன்ற இடங்களில் அவைகள் நல்ல முறையிலே இயங்கவில்லை என்று சொல்லுகிறார்கள். அம்மாதிரி சொல்லுவதற்குக் காரணங்கள் இருக்கின்றன. நம்முடைய ராஜ்யத்தை எடுத்துக்கொண்டால், அவைகள் மிகவும் நல்ல முறையிலே நடக்கின்றன என்பதை எல்லோரும் ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். இந்த நிலையிலே நம்மையும் எல்லா ராஜ்யங்களோடு சேர்த்து, நாமும் அந்த ராஜ்யங்களில் ஒரு ராஜ்யம் என்ற ஒரு அடிப்படையில் திட்டம் வகுக்கவேண்டுமென்பது சரியாக இராது என்பதை நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்த ஆண்டில் 100 விவசாய பாங்குகள் அதிகமாகச் செய்யவேண்டுமென்ற அளவிலே நாம் திட்டம் வகுத்திருக்கிறோம். ஆனால் பிளானிங் கமிஷன் இனி கூட்டுறவு விவசாய பாங்குகள், "லார்ஜ் சைஸ் சொஸைடிகள்" இருக்கக்கூடாது என்ற அளவிலே ஒரு "டைரக்டிவ்" கொடுத்திருப்பதாக பேப்பரிலே பார்க்கிறோம். கூட்டுறவு இயக்கமானது "ஸ்டேட் ஸப்ஜெக்ட்" என்ற காரணத்தினாலே இதிலே மத்திய சர்க்கார் தலையிடக்கூடாது என்ற அளவிலே நம்முடைய அமைச்சர் இம்மாதிரி இறுதியிலே டெல்லியில் நடக்கக்கூடிய கான்பெரன்ஸில் தெரிவிக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். சாதாரணமாக நாம் விவசாய பாங்குகளை மாத்திரம் வைத்துக்கொண்டு கடன் லேவாதேவி அதிகமாச் செய்துவிட முடியாது. சிறிய நாணய சங்கங்களை நாம் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாக உண்டாக்கி இன்னும் நல்ல முறையில் வேலை செய்யமுடியுமோ அதை நாம் செய்யவேண்டும். விவசாய பாங்குகள் நல்ல முறையில் வேலை செய்வதற்கான காரணத்தை சற்று ஆராய்ந்து பார்த்தோமானால், அங்கு ஒரு சம்பள காரியதரிசி போட்டிருக்கிறோம். அது தான் முக்கியமான காரணம் என்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். சாதாரணமாக ஒவ்வொரு பிரதம நாணய சங்கத்திலும் ஒரு சம்பளக் காரியதரிசியையோ, அல்லது குமாஸ்தாவையோ போடவேண்டும். அதற்கு நாம் ஒரு திட்டத்தை வகுக்கவேண்டும். அதற்காக இப்பொழுது அரசாங்கம் ஓரளவு மான்யம் கொடுத்தாலும்கூட, அந்த மான்யம் போதாது என்பதை கனம் அமைச்சர் அவர்களுக்கு நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். குறைந்தது மாதம் 50 ரூபாய் சம்பளம் கொடுத்தால் தான் நிச்சயமாக ஒரு குமாஸ்தா போட்டு நடத்த முடியும். மாதம் 50 ரூபாய் என்று கணக்கு வைத்துப் பார்க்கும்போது வருஷத்திற்கு 600 ரூபாய் இதற்கு மான்யம் கொடுக்கவேண்டும். அதுவும் குறைந்தது 5 வருஷங்களுக்காவது இந்த மான்யம் கொடுக்கப்பட்டால்தான் நல்ல முறையில் லேவாதேவியை அதிகப்படுத்த முடியும் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

சென்ற ஆண்டு நாம் 13½ கோடி ரூபாய் லேவாதேவி செய்திருக்கிறோம். வரும் ஆண்டில் 16 கோடி ரூபாய் அளவில் திட்டம் வகுத்திருக்கிறோம். இதைப்பற்றி உண்மையிலேயே நாம் பெருமைப்பட்டாலும், இந்தப் பணம் போதாது. அதுவும் கொடுக்கக்கூடிய பணம் ஓராண்டுக் கடனாகத்தான் அதிகமாக வருகிறது. அது விவசாயிகளுக்கு போதுமானதாக இராது மாத்திரமல்ல, 3 ஆண்டு, 5 ஆண்டு கடன் அதிகமாக தேவையாகிக்கொண்டு வருகிறது. இம்மாதிரி தேவையான கடனை அதிகப்படியாக கொடுப்பதற்கு நம்முடைய ராஜ்ய சர்க்காரும், ரிஜிஸ்டிரார் அவர்களும் வேண்டுவன செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

17th March 1959] [Sri K. S. Subramania Gounder]

சென்ற ஆண்டிலே 75 லட்சம் ரூபாய் தான் 3 ஆண்டு கடனாக நம்முடைய ராஜ்யத்திலே கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆண்டிலே 100 லட்சம் ரூபாய் ரிசர்வ் பாங்கியிலிருந்து 3 ஆண்டு கடனாகவும், 5 ஆண்டு கடனாகவும் கொடுக்கபபோகிறார்கள். இதை நம்முடைய ராஜ்யத்திலுள்ள எல்லா ஜில்லாக்களுக்கும் நாம் வினியோகித்துக்கொள்ள வேண்டும். இது எந்த அளவிலே வரும் என்றால், சாதாரணமாக ஒவ்வொரு ஜில்லாவுக்கும் சராசரி 10 லட்ச ரூபாய் கூடவராது. பெரிய ஜில்லாவாக இருந்தால் 10 லட்ச ரூபாய் வரும். சிறிய ஜில்லாவாக இருந்தால் 7 லட்சம், 8 லட்சம் தான் வரும். அதை அவர்கள் தாலுகா வாரியாக பிரிக்கும்பொழுது ஒரு தாலுகாவுக்கு 1 லட்ச ரூபாய்கூட 3 ஆண்டு கடன், 5 ஆண்டு கடன் வராது. இந்த நிலை போகவேண்டும். வேண்டிய அளவு விவசாயிகளுக்குத் தேவையான 3 ஆண்டு 5 ஆண்டு கடன் கிடைக்கவேண்டும். அதுதான் எல்லாவற்றையும் விட முக்கியம். விவசாயிகளுக்கு கடன் கொடுப்பதிலே அவர்களுடைய தேவையை அனுசரித்து, நீண்ட காலத் தேவையாக இருந்தால், தேவையான நீண்ட கால கடன், மத்திய கால தேவையாக இருந்தால், தேவையான மத்திய கால கடன் கொடுப்பது மிகவும் அவசியம் என்பதைத் தெரிவித்து கொள்ள விரும்புகிறேன்.

ரிசர்வ் பாங்கு பணம் கொடுக்கும்பொழுது, ஒவ்வொரு மத்திய பாங்கும் அதனுடைய "ஷேர் காபிடல் பிளஸ் ரிஸர்வ் பண்டு" எவ்வளவு இருக்கிறதோ, அந்த அளவுக்குத்தான் 3 ஆண்டு கடன் கொடுக்கலாம் என்று சொல்லுவது சரியல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஒரு மத்திய பாங்கு 50 சதவிகிதம் ஒரு ஆண்டு கடனும், பாக்கி 50 சதவிகிதம் 3 ஆண்டு, 5 ஆண்டு கடனாகவும் கொடுக்கலாம் என்ற அளவிலே "பைலா" இருக்கிறது. திட்டம் இருக்கிறது. அப்படியிருக்கும்பொழுது, ஷேர் காபிடல், ரிசர்வ் பண்டு அளவுதான் கொடுக்கவேண்டுமென்று சொல்லுகிறபொழுது தேவையான நீண்ட கால, மத்திய கால கடன் கொடுக்க முடியாத அளவிலே போய்விடுகிறது. 16 கோடி ரூபாயில் குறைந்தது 5, 6 கோடி ரூபாயாவது 3 ஆண்டு, 5 ஆண்டு கடனாகக் கிடைப்பதற்கு வேண்டுவன செய்யவேண்டும் என்று அமைச்சர் அவர்களை திரும்பவும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆடிட்டைப் பொறுத்தவரையில், அது தனியாகப் பிரிக்கப்பட்டு, தனியாக ஒரு ஆடிட் ஆபீஸர் போட்டு இப்பொழுது நிர்வகிக்கப்படுகிறது என்று அமைச்சர் அவர்கள் அறிக்கையிலே குறிப்பிட்டிருக்கிறார்கள். நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுவது என்னவென்றால், தனியாக ஒரு ஆடிட் ஆபீஸர் ஏ. ஜி., ஸ் ஆபீஸிலிருந்து வாங்கிப் போட்டால் மாத்திரம் ஆடிட் நல்லமுறையிலே நடத்திவிடமுடியும் என்று யாரும் சொல்லவே முடியாது. இன்னும் ஆடிட் சிப்பந்திகளை அதிகமாக்கவேண்டும். அதுதான் மிகவும் முக்கியமான காரியம். சாதாரணமாக அமைச்சர் அவர்களை சற்று கணக்கிட்டுப் பார்க்கும்படி கேட்டுக்கொள்கிறேன். நான்கு, ஐந்தாண்டுகளுக்கு முன்னதாக எவ்வளவு ஆடிட்டர்கள் இருந்தார்கள், அப்பொழுது எத்தனை சங்கங்கள் இருந்தன, எவ்வளவு லேவாதேவி, இருந்தது, இப்பொழுது எவ்வளவு அதிகமாக லேவாதேவி நடக்கிறது, எவ்வளவு ஆடிட்டர்கள் இருக்கிறார்கள், இது போதுமா என்று பார்த்தால், நிச்சயமாக அதிகமாக வேண்டும் என்று எல்லோரும் ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். இதிலே ஒன்றும் சந்தேகமில்லை. அதிகமாக லேவாதேவி ஆகக்கூடிய சமயத்திலே இன்னும் அதிகமான ஆடிட்டர்களைப் போட்டு அப்போதைக்கப்போது "கன்கரெண்டாக" கணக்குகளை ஆடிட் செய்தால்தான் நல்ல முறையில் இருக்குமே தவிர பிறகு எதாவது ஒரு தவறு ஏற்பட்டுவிட்டால் எப்பொழுது அந்தத் தவறு ஏற்பட்டது, யார் அதைச் செய்தார்கள் என்று கண்டு பிடிப்பதுகூட கஷ்டமாகிவிடும் என்பதையும் நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆகவே தான் ஒவ்வொரு சங்கத்திற்கும் எவ்வளவு ஆடிட்டர்கள் தேவை என்பதை உடனடியாக கவனித்து, வேண்டிய ஆடிட்டர்களை அதிகப்படுத்தவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

[Sri K. S. Subramania Gounder] [17th March 1959

அதுவும் குறிப்பாக நாம் கூட்டுறவு சங்கங்களின் மூலம் கொடுக்கக் கூடிய பணம் எல்லாம் அதிகமாக ரிசர்வ் பாங்கிலிருந்து சர்க்கார் காரண்டியின் பேரில் கொடுக்கக்கூடிய பணமாக இருக்கிறது. ஆகையினாலே அந்தக் கணக்குகளை தக்க முறையில், நல்லபடி ஆடிட் செய்வது அரசாங்கத்தினுடைய பூரண பொறுப்பாக இருக்க வேண்டும். ஆடிட் செய்வதிலே லாப நஷ்டம் பார்ப்பது சரியல்ல என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அதிகமாக ஆடிட்டர்கள் போட்டால் இன்னும் செலவு அதிகமாகி விடும் என்று பார்க்கக்கூடாது. ஆடிட் மூலம் வரக்கூடிய வருமானம் குறைவாக இருக்கிறது என்ற அளவிலே கணக்குப் போட்டால், அது சரியான கணக்காக இருக்காது என்பதையும் நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

நிலம் இல்லாத குத்தகைக்கு விவசாயம் செய்யக்கூடிய விவசாயிகளுக்கும், இன்னும் விவசாயத்திலே ஈடுபட்டிருப்பவர்களுக்கும் பணம் கடனாகக் கொடுக்க வேண்டும் என்று பல அங்கத்தினர்கள் சொன்னார்கள். கூட்டுறவு இயக்கம் அதாவது செண்டிரல் பாங்கு, கூட்டுறவு சங்கங்கள், இவைகளையெல்லாம் செய்வதற்கு தடையாக இருக்கிறது என்ற பாணியிலே அநேகர் பேசினார்கள். இதிலே என்ன தடை இருக்கிறது என்பதை சற்று யோசனை செய்து பார்க்கவேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

11-50 a.m. அரசாங்கமே இதில் இதற்காக பணம் கொடுக்க வேண்டும் என்று சொன்னபோது "கான்ஸ்டிடியூஷன் ஆப் எ கியாரண்டி அண்ட் ரிலீப் பண்ட்" ஒன்று ஆரம்பிக்க வேண்டும், அதை ஆரம்பித்தால்தான் சௌகரியமாக இருக்கும் என்ற முறையில் அதை சீக்கிரமாக ஆரம்பிக்க வேண்டும் என்று சொல்லப்பட்டது. ஆனால் என்ன காரணம் என்று தெரியவில்லை, இதுவரையிலும் ஆரம்பிக்கப்படவில்லை. இதில் சற்று கால தாமதம் செய்து வருகிறார்கள். இது சீக்கிரமாக ஆரம்பிக்கப்பட்டால்தான் இந்த நிலமில்லாத குத்தகைதாரர்களுக்கும் மற்றும் நிலமில்லாதிருப்பவர்களுக்கும் பணம் கொடுப்பதற்கு சௌகரியமாக இருக்கும். ஆகவே இதை உடனடியாக ஆரம்பிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதோடு கடன் கொடுக்கிற காரியத்தில் ஏதாவது நஷ்டங்கள் ஏற்படுகின்றன என்றால் அதில் அரசாங்கம் ஓரளவுக்கு கியாரண்டி கொடுப்பதற்கு முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இது தவிர (புல் பைனான்ஸ் ஸ்கீம்) **Full finance schemes** இரண்டு பிர்க்காக்களில் இருந்து வந்தது. அந்த இடங்களில் நல்ல முறையில் நடத்தப்பட்டு வருவதாகத்தெரிகிறது. இந்தத் திட்டம் இதர ஜில்லாக்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது என்று குறிப்பிட்டார்கள். இதில் இரண்டு விஷயம், அதாவது, ஒன்று கிடைக்கக்கூடிய கடன்களை கூட்டுறவு இயக்கத்தின் மூலம் கொடுப்பது, அதாவது ஏஜென்ஸி இல்லாத இடங்களில் கொடுப்பது என்பது, மற்றொன்று இந்த ஏரியாவில் ஏற்கெனவே கடன் கொடுக்கப்படாமல் இருந்தால் அந்த ஏரியாவுக்கு வேண்டிய கடனை கொடுப்பது என்பது. சாதாரணமாக ஒவ்வொரு ப்ளாக்கிலும் சுமார் ஐந்து லட்சம் வரையிலும் கடன் கொடுப்பதற்கு ஏற்பாடு இருந்து வருகிறது. திரும்பி இதை ப்ளாக்-கிலேயே வசூலித்து வருகிறார்கள். இந்த இடங்களில் எல்லாம் கூட்டுறவு மூலமாக காரியங்கள் நடைபெறுவதில்லை. இவ்விதம் வரும்போது சில இடங்களில் சரியான விதத்தில் கடன் கொடுக்கவில்லை என்றும் தெரிகிறது. இதன் காரணமாக ஏற்கனவே கொடுக்கப்பட்டு வந்த ஏரியாவில் அல்லது சரகத்தில் ஐந்து லட்சத்திற்கும் குறைவாகவே போகிறது என்பதை அமைச்சர் அவர்களின் கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். காரணம் கூட்டுறவு இயக்கத்தில் இன்றைக்கு போதிய அளவு பணம் இருக்கிறது என்று சொல்ல முடியாது. மொத்தம் 16 கோடி ரூபாயில் ஒவ்வொரு ஜில்லாவுக்கும் இவ்வளவு என்று ஒதுக்கிவிடுகிறார்கள். இவ்விதம் ஒதுக்கி விடும்போது ஒவ்வொரு ஜில்லாவுக்கு சுமார் 10 லட்சம் ரூபாய்தான் கிடைக்கிறது. இதை வைத்துக்கொண்டு (புல் பைனான்ஸ் ஸ்கீம் **Full finance Scheme**-யை வெற்றிகரமாக நடத்த முடியாது. ஆகவே இந்த விதத்தில் பார்க்கும்போது ஒவ்வொரு ஏரியாவுக்கும்

17th March 1959] [Sri K. S. Subramania Gounder]

குறைவாகத்தான் போகிறது. ஏற்கெனவே எவ்வளவு பணம் பிளாக் பண்டில் சர்க்கார் மூலம் கொடுக்கப்பட்டதோ, அந்த அளவுக்கு கூட்டுறவு இயக்கத்தின் மூலம் கொடுத்து விநியோகிப்பதற்கு தகுந்த அளவில் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அவ்வாறு செய்தால்தான் நல்ல முறையில் செய்ததாக இருக்கும். அவ்விதம் பணம் ஒன்றும் கொடுக்காமல் நீங்களே செய்யுங்கள் என்று சொல்லுவது சரியாகாது என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

மற்றொன்று எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்திருப்பது இந்த கூட்டுறவு பார்மிங் ஸொஸைட்டிகள், இதில் எந்த மாதிரியான சங்கங்கள் ஏற்படுத்த வேண்டும் என்பதுதான் பிரச்னை. பெட்டர் பார்மிங் ஸொஸைட்டியாக இருக்கவேண்டுமா அல்லது ஜாயிண்ட் பார்மிங் ஸொஸைட்டியாக இருக்க வேண்டுமா அல்லது, டெனன்ட் பார்மிங் ஸொஸைட்டியாக இருக்கவேண்டுமா என்கின்ற பல கருத்துக்கள் இருந்து வருகின்றன. பொதுவாக மக்களுக்கு கூட்டுறவு இயக்கத்தில் காரியங்கள் சரியான நேரத்தில் நடைபெறுவதில்லை, இம்மாதிரியான சங்கங்களின் மூலமாக காலதாமதம் ஏற்படுகிறது என்கின்ற எண்ணம் மக்களிடையில் இருந்து வருகிறது. பல காரியங்களுக்கும் அக்ரிகல்சரல் டிப்பார்ட்மெண்டோடு கலந்து செய்வதில், அதிலும், அரசாங்கத்தின் கியாரண்டி பெறுவதிலும் கால தாமதம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது. இதில் என் அபிப்பிராயம் என்னவென்றால், இதை அவ்வளவு சீக்கிரமாக முடிவுசெய்ய முடியாது. ஏனென்றால் நமது ராஜ்யத்தில் எந்த மாதிரியான கூட்டுறவு பார்மிங் ஸொஸைட்டி ஏற்படுத்தினால் நல்ல முறையில் இயங்கும் என்பதைப்பற்றி நாம் பரிசீலனை செய்து பார்க்க வேண்டியிருக்கிறது. இதைப்பற்றி பரிசீலனை செய்வதற்காக, எந்த மாதிரியில் இந்த கூட்டுறவு பார்மிங் ஸொஸைட்டி இருக்க வேண்டும் என்பதைப்பற்றி ஓரளவு அறிந்துகொள்வதற்கு இதற்கென்று ஒரு தனி கமிட்டி போட்டு, அதன் மூலம் நாட்டில் இதில் இருக்கின்ற எல்லா கஷ்டங்களையும் ஆராய்ந்து முடிவு செய்து அதன் அடிப்படையில் ஆரம்பிப்பது நல்லது என்று நான் கருதுகிறேன். அந்த முறையில் ஒரு கமிட்டி அமைத்து அதனுடைய சிபாரிசுகள் என்ன என்பதை அறிந்து அதன் பிரகாரம் செயல்படுவது நல்லது, என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்ததாக சேலம் ஜில்லாவை பொறுத்த வரையில் அங்கு கூட்டுறவு முறையில் ஒரு சர்க்கரை ஆலை ஆரம்பிக்கப்பட வேண்டும். அங்கு ஏக்கர் ஒன்றில் 70 டன் கரும்பு கிடைக்கிறது. இந்த முறையில் நல்ல அளவில் உற்பத்தியாகிற சேலம் ஜில்லாவில் ரெகவரியை எடுத்துக்கொண்டாலும் 13 சத விகிதம் இருக்கிறது. சென்னை ராஜ்யத்தில் மட்டுமல்ல, இந்தியாவிலேயே கரும்பு உற்பத்தியிலும், சர்க்கரை உற்பத்தியிலும் முதன்மையாக இருப்பது இங்குதான். அந்த முறையில் பார்த்தாவது அங்கு உடனடியாக ஒரு சர்க்கரை ஆலை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக "கோடவுன்" கட்டப்படும் விஷயத்தில் பெரிய காலதாமதம் ஏற்படுகிறது. இதற்கு வேண்டிய அயர்ன் அண்ட் ஸ்டீல் கிடைப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அதை (ஓப்பன்) வெளி மார்க்கட்டிலேயே வாங்கிக்கொள்ள வேண்டும் என்று அரசாங்கத்திலிருந்து சொல்லப்படுகிறது. வெளியில் இப்போது இவைகளுக்கு என்ன விலை இருக்கிறது என்பதையும், இந்த விலை கொடுத்து கூட்டுறவு இயக்கத்தினர் வாங்க முடியுமா என்பதையும் அமைச்சர் அவர்கள் யோசித்துப் பார்க்கவேண்டும். நமது கூட்டுறவு இலாகா அமைச்சர் அவர்களே இண்டஸ்ட்ரீஸ் இலாகாவின் அமைச்சராகவும் இருப்பதால் இதை கட்டுவதற்கு எல்லாம் சுலபமாக நடவடிக்கைகள் எடுக்க முடியும் என்று நம்புகிறேன். அந்த முறையில் கூட்டுறவு இலாகா மூலம் கோடவுன்களை கட்டுவதற்கு வேண்டிய ஸ்டீல்-சாமான்களை அரசாங்கம் ஒதுக்கித்தரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மற்றொன்று, ப்ரக்யூர்மெண்ட் ஆப்ரேஷன் முறையை நடத்துவதற்கு கூட்டுறவு இயக்கத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதில் பணம் போதிய அளவு இல்லாததினால் அதிகமான காலதாமதம் ஏற்படுகிறது என்பதாக இங்கு எடுத்துச் சொல்லப்பட்டது. இதற்காக பணம் கிடைப்பதற்கு ஸ்டேட் பாங்கிலிருந்து பணம்

[Sri K. S. Subramania Gounder] [17th March 1959

வருவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். இதையெல்லாம் தணிக்கை செய்வதற்கு அதிகமான அளவில் சூப்பர்வைஸர்கள் இருக்க வேண்டும். இவ்விதம் அதிகமான அளவில் இருக்கவேண்டும் என்று சொல்லும்போது ஒவ்வொரு ஜில்லாவுக்கும் ஒரு டெப்பூடி ரெஜிஸ்ட்ரார், ஒவ்வொரு ஜில்லாவுக்கும் மூன்று இன்ஸ் பெக்டர்கள் இவர்களாவது இருக்கவேண்டும். இவ்விதம் இருந்தால் தான் தவறுகள் நடக்காமல் பார்த்துக்கொள்வதற்கு சௌகரியமாக இருக்கும். அதோடு இந்த சிப்பந்திகளை அரசாங்கம் இலவசமாக கொடுக்க வேண்டும் என்றும் கெட்டுக்கொள்கிறேன்.

* **SRI M. P. SUBRAMANIAM** : அவைத் தலைவர் அவர்களே, இந்தக் கூட்டுறவு மான்யத்தின்மீது கொடுத்திருக்கும் வெட்டுப் பிரேரணையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கூட்டுறவு இயக்கம் நமது ராஜ்யத்தில் குறிப்பாக கிராமப்புறங்களில் கடன் தேவைகளை பூர்த்தி செய்வதில் ஓரளவு வளர்ச்சி பெற்றிருக்கிறது என்பதை பெருமையோடு சொல்லலாம். என்றாலும் கூட்டுறவு இயக்கம் கடன் தேவைகளை பூர்த்தி செய்வதில் மட்டும்தான் வெற்றி பெற்றிருக்கிறது. அதுவும் எந்த அளவில் கூட்டுறவு இயக்கம் வெற்றி பெற்றிருக்கிறது என்பதை நாம் சீர்தூக்கி பார்க்க வேண்டியது அவசியம் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். அமைச்சர் கொடுத்திருக்கின்ற புள்ளி விவரங்களிலிருந்து 85 சதமானம் கிராமங்களில் கூட்டுறவு இயக்கம் கொண்டு வரப்பட்டிருக்கிறது என்றும், 45 சதமானம் மக்கள் இதை பயன் படுத்த தகுதிபெற்றிருக்கிறார்கள் என்றும் தெரிகிறது. இவ்விதம் குறிப்பிட்டிருக்கிற 45 சதமானம் மக்களுடைய பூரா கடன் தேவைகளையும் கூட்டுறவு இயக்கம் பூர்த்தி செய்கின்றதா என்று பார்த்தால் இல்லவே இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். கூட்டுறவு இயக்கம் நாம் எதிர்பார்க்கிற அளவுக்கு வளர்ச்சி பெற்றிருக்கிறதா என்று பார்த்தால் இல்லை என்றுதான் சொல்ல வேணடும். எல்லோரும் கூட்டுறவு முறையில் பயன்பெற முடியவில்லையென்றால் அதற்குக்காரணம் கூட்டுறவு இயக்கத்தில் அவர்கள் சேர்ந்து பயன்பெற வேண்டும் என்கின்ற ஆசை இல்லாமலில்லை. கூட்டுறவு இயக்கத்தின் மூலமாக எளிதாக கடன் வசதி பெற முடியும் என்று அவர்களுக்கு தெரியாது. மற்ற வகையில் எல்லாம் இரண்டு ரூபாய், மூன்று ரூபாய் என்று மாதம் ஒன்றுக்கு வட்டி கொடுத்து வாங்கி கொண்டிருக்கின்ற மக்களுக்கு, கூட்டுறவு இயக்கத்தின் மூலமாக ஆறு அல்லது ஏழு சதமானம் வட்டிக்கு கடன் கிடைக்கும் என்ற முறை அவர்களுக்கு தெளிவாக எடுத்துரைக்கப்படவில்லை என்பதை நாம் ஒப்புக் கொண்டாக வேண்டும். எத்தனையோ வாரங்கள் எல்லாம் கொண்டாடுகின்ற பொழுது சாதாரண மக்களுக்கு—அதிலும் கிராமப்புறங்களில் இருக்கும், மக்களுக்கு—கூட்டுறவு வாரம் மூலமாக இதைப்பற்றி எடுத்துச் சொல்ல வேண்டியது நம்முடைய கடமை. அந்த அளவுக்கு நல்ல பிரசாரம் செய்யவேண்டும் என்பதை நான் இங்கே வலியுறுத்திக்கூற விரும்பு கிறேன்.

12 noon. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்கு 208 லட்சம் ரூபாய் செலவு செய்வதாக அமைச்சர் அவர்கள் ஒரு திட்டம் வகுத் திருப்பதாக இங்கே புள்ளி விவரம் தந்திருக்கிறார்கள். ஆனால், கடந்த மூன்று ஆண்டு காலத்தில், கொடுத்த புள்ளி விவரப்படி 69 லட்சம் ரூபாய்தான் செலவு செய்திருக்கிறோம். 1959–60-வது ஆண்டிலே 53 லட்சம்தான் இந்தத் திட்டத்தின்கீழ் செலவு செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இன்னும் 208 லட்சத்திலே மீதி 86 முதல் 90 லட்சம் ரூபாய் வரையில் செலவு செய்வதற்கு கடைசி ஆண்டில் முடியுமா என்று என்னால் தெரிந்துகொள்ள முடியவில்லை. அதற்கு வேண்டிய வழிவகை செய்ய முடியும் என்றுதான் நான் நினைக்கிறேன்.

கிராமப் புறங்களில் விவசாய பாங்குகளானாலும் சரி, சாதாரண சிறிய சொஸைட்டிகளானாலும் சரி, இன்று விவசாயிகளுக்கு எல்லாக் கடன் களையும் கொடுப்பது, (Full finance scheme) என்று குறிப்பிட்டி

17th March 1959] [Sri M. P. Subramaniam]

ருப்பதுபோல, அந்தத் திட்டம் இரண்டு, மூன்று இடங்களில் அமுலாக்கப்பட்டு நல்ல முறையிலே செயல்பட்டு வருகிறது என்று குறிப்பிட்டார்கள். இந்தத் திட்டம் எல்லா இடங்களிலும் வரவேண்டும் என்பதுதான், என்னுடைய தனிப்பட்ட கருத்து. ஏனென்றால், கூட்டுறவு சங்கத்தில் உறுப்பினராக இருக்கக்கூடியவர் கூட்டுறவு சங்கத்தில் கடன் பெறவும், நில அடமான சங்கத்தில் கடன் பெறவும், அரசாங்கம் கொடுக்கும் கடன் வசதி பெறவும் இரண்டு, மூன்று முறைகளிலே கடன் பெற வசதி இருப்பது கடன் வாங்குபவர்களுக்கு ஓரளவு நல்லதாக இருந்தாலும் சிலரே நன்மை அடையக்கூடிய வழியும் வாய்ப்பும் ஏற்படுகிறது என்பதை அரசாங்கம் உணர வேண்டும். அரசாங்கம் கொடுக்கும் கடன் வசதிகள் அத்தனையும் கூட்டுறவு இயக்கம் மூலமாகவே கொடுப்பதுதான் சிறந்த முறை. அந்த முறை எல்லா இடங்களிலும் கையாளப்படவேண்டும் என்று எனக்கு முன் பேசிய திரு. கே. எஸ். சுப்பிரமணிய கவுண்டர் அவர்கள் குறிப்பிட்டது போல, இதுவரையில் எந்த அளவு அந்தப் பகுதியிலே கடன் வசதி கிடைத்துள்ளதோ அதைவிடக் கூடுதலான கடன் வசதிகள் கூட்டுறவு முறையிலே கிடைக்க நாம் உத்தரவாதம் செய்து தந்து "புல் பினான்ஸ் ஸ்கீம்"ஐ அந்த பகுதியிலும் விஸ்தரிக்கப்படவேண்டும். பன்னிரண்டு தேசிய நல விஸ்தரிப்புத் திட்டப் பகுதிகளில் 1959–60-ம் ஆண்டில் விஸ்தரிக்கப்படுவதாகச் சொல்கிறார்கள். ஏற்கனவே நான் குறிப்பிட்டபடி, முதலில் உத்தரவாதம் கொடுத்துத்தான் விஸ்தரிக்க வேண்டும் என்று நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

விவசாய பாங்குகள், 1959-60-வது ஆண்டில் 100 திறப்பதாக திட்டமிட்டிருக்கிறார்கள். விவசாய பாங்கைப் பொறுத்தவரையில் அவை ஆரம்பிக்கப்பட்டு இதுவரையில் நல்ல முறையில் செயல்பட்டு வருகிறது என்பதை நான் உணருகிறேன். ஆனால், விவசாய பாங்கிலே நீண்ட காலக் கடன் கொடுக்கப்படமுடியாவிட்டாலும், மத்திய காலக் கடன் வெகுவாகக் கொடுக்க வழிவகுக்க வேண்டும். திரு கே. எஸ். சுப்பிரமணிய கவுண்டர் அவர்கள் குறிப்பிட்டதுபோல், பதினாறு கோடி ரூபாய் கொடுப்பதாக இருப்பதில் ஐந்தாறு கோடி ரூபாயாவது மத்திய காலக் கடன் கொடுப்பதற்கு வேண்டிய வழிகளை அவர்கள் சொன்னார்கள். கிராமப் புறங்களைப் பொறுத்தவரையில், விவசாயி, குறுகிய காலத்தில்—ஓராண்டுத் தவணையில் திருப்பித் தரவேண்டுமென்றால் சில சந்தர்ப்பங்களில் வானம் பொய்த்துவிட்டாலும்சரி, அல்லது வேறு எதிர்பாராத செலவு ஏற்பட்டாலும் சரி, கடனைத் திருப்பிக் கொடுக்க முடியாத நிலைமை ஏற்படுகிறது என்பதை நண்பர்கள் அறிவார்கள். ஆகவே, பெரும்பாலான விவசாயிகளுக்கு மத்திய காலக் கடன் கொடுப்பதற்கு வழிவகை செய்ய வேண்டும். இந்தக் கூட்டுறவு சங்கங்கள் மூலமாக கடன் கொடுப்பதைப் பொறுத்தவரையில், விவசாயிகளுக்கு உரங்கள், விதைகள் முதலியன வாங்கிக்கொடுத்து உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்று பேசுகின்ற நேரத்தில், விவசாயிகளுக்குக் காலாகாலத்தில் வேண்டிய கடன் வசதி செய்தால் பெரிய பிரச்னை கிராமப்புறங்களைப் பொறுத்த வரையில் தீர்ந்து விடும் என்று நினைக்கிறேன். கிராமப்புற விவசாயிகளுக்கு விவசாயத்தை எப்படிச் செய்வது, என்ன வகையில் செய்வது என்ற வழிவகை தெரியாமல் இல்லை. வேண்டிய காலத்தில் விவசாயத்திற்கு வேண்டிய பொருள்கள் வாங்குவதற்கு வசதி இல்லாமல் போய் விடுகிறது என்பதை உணருகிறோம். ஆகவே, விவசாயிகளுக்கு வேண்டிய கடன் வசதிகளைக் கூடுதலாக்க வேண்டும்.

நில அடமான பாங்குகளைப்பற்றி பல சந்தர்ப்பங்களில் நான் கூறியிருக்கிறேன். மீண்டும் வலியுறுத்திச் சொல்வது நல்லது என்று நினைக்கிறேன். நில அடமான பாங்குகளைப் பொறுத்த வரையில், நில அடமான பாங்கு என்று பெயரளவில் இருக்கிறதேயல்லாமல், விவசாயிகளுக்குப் பயன்தரக்கூடிய அதன் சட்டதிட்டங்கள் சுலபமாக்கப்படவில்லை. என்னுடைய சொந்த அனுபவத்தைக் கூறவேண்டுமானாலுங்கூட, கடன் வேண்டுமென்ற விண்ணப்பம் போட்டால் ஒரு ஆண்டு, ஒன்றரை ஆண்டுகள் கடன் பெற காலமாகிறது ; எளிதிலே பெறுவதற்கு வழிவகை கிடையாது. எவ்வளவு நுட்பம் தெரிந்தவர்களானாலும் சரி, பக்கத்திலுள்ள நில அடமான பாங்குக்குச் சென்று, பல வசதிகளைச் செய்து தரவேண்டு

[Sri M. P. Subramaniam] 17th March 1959]

மென்று கேட்டுக்கொண்டாலும்சரி, குறைந்தது ஓராண்டு காலத்திற்குள் கடன் பெறமுடியாது. அந்த நிலை மாறி, விவசாயிகளுக்கு ஓரிரண்டு மாத காலத்திற்குள் கடன் கிடைக்க வழி செய்ய வேண்டும். அந்த அளவு நில அடமான பாங்குகள் செயல்படுவதற்கு வழிவகை காண சட்டதிட்டங்களைத் திருத்தியமைக்க வேண்டுமென்று நான் இங்கே சொல்லிக்கொள்கிறேன்.

மற்றும், நில அடமான பாங்கு விஷயத்தில் குறிப்பிட விரும்புவது நில அடமான பாங்கு மூலம் கடன் பெறவேண்டுமானால் யுத்தத்திற்கு முன்பாக ஒரு நிலத்தின் பெறுமானம் என்ன இருந்ததோ அதில் பாதிதான் கடனாகக் கொடுக்க வழிவகை இருக்கிறது. சம்பந்தப்பட்ட அதிகாரி கருதினால், 15 முதல் 20 சத விகிதம் கூட்டிக்கொடுக்கலாம். 20 ஆண்டுகளுக்கு முன்பு ஒரு நிலம் நூறு ரூபாய் பெறுமானமுள்ளதாக இருந்தது இன்று பத்தாயிரம் ரூபாய் பெருமானம் உள்ளதாக இருக்கலாம். பத்தாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள நிலமாக இருந்தால் ஐயாயிரம், நாலாயிரம் ரூபாய் வரையில் கடனாகப் பெறக்கூடிய நிலை இருக்கவேண்டும். ஆனால், நில அடமான பாங்கு மூலமாக கடன் பெறக்கூடிய தொகை, இன்றைய விதிகளின்படி, ஐம்பது ரூபாய்தான். 1939-ம் ஆண்டுக்கு முன்பு குறிப்பிட்ட நிலத்திற்குப் பக்கத்தில் உள்ள நிலம் என்ன விலைக்கு விற்றதோ அந்த விலையைக் கண்டுபிடித்து, அதன் அடிப்படையில்தான் கடன் கொடுக்கப்படுகிறது. ஏதோ நில அடமான பாங்கு இருக்கிறது என்று சொல்கிறோமே தவிர, உண்மையிலேயே விவசாயிகளுக்குப் பயன்படவில்லை. இனி விலைவாசி இறங்கப்போவது சுலபமாகத் தெரியவில்லை. யுத்தம் முடிந்த பிறகு ஏறுமுகத்தில் இருக்கிறதே தவிர இறங்கு முகமாகும் என்றே தெரியவில்லை. 1945-46க்குப் பின்னாலே இப்பொழுது என்ன விலைக்கு விற்கிறதோ, அதில் 15 சத விகிதம் குறைத்துவிட்டு, அந்த அடிப்படையிலே கடன் கொடுப்பதற்குத் திட்டம் வகுத்தால் நில அடமான பாங்கு மூலமாக அவர்களுக்குப் பலன் கிடைக்கும் என்பதை நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

கூட்டுறவு இயக்கங்கள் அரசியல் காரணங்களுக்காகப் பயன்படுத்தப்படுகின்றன என்று ஒரு சில உறுப்பினர்கள் குறிப்பிட்டார்கள். நானும் இதையே குறிப்பிடவேண்டியிருக்கிறது. ஏனென்றால், கூட்டுறவு, அரசியலுக்கு அப்பால் எல்லாதுறைகளிலும் நல்ல முறையிலே 'கூட்டுறவு' என்ற பெயருக்கிணங்க எல்லோரும் ஒத்துக்கொள்ளவேண்டுமென்றால் இதிலே கொஞ்சம் அரசியல் கலப்பு இல்லாமல் இருக்கவேண்டும். நான் பரவலாகப் பார்ப்பது கூட்டுறவு இயக்கத்தில் இருக்கக்கூடியவர்கள் தங்களுக்குச் சாதகமாக அரசியல், கட்சிக் காரணங்களுக்காக அதைப் பயன் படுத்துவது என்றால், பின்னால் கூட்டுறவு இயக்கம் வளர்வதற்கே வழிவகை இல்லாமல் போய்விடும் என்று குறிப்பிட விரும்புகிறேன். விவசாய பாங்குகளுக்கு டைரக்டர் நியமனம் செய்கின்ற விஷயத்தில், கூடுமான வரையில் அந்தப் பகுதியிலே அது எந்த அரசியல் கட்சியைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் சரி, எந்த விருப்பு வெறுப்பு இருந்தாலும் சரி, அந்தப் பகுதி மக்கள், பொது மக்கள் பிரதிநிதியாக இருக்கக்கூடியவர்கள் விவசாய பாங்கு டைரக்டர்களாகப் போடப்படவேண்டுமே தவிர, விருப்பு வெறுப்பு காரணமாக இஷ்டப்படி போட்டால், விவசாய பாங்கு உண்மையிலேயே அந்த மக்களுக்குப் பயன்படாது.

மற்றும், இங்கு ஒன்று குறிப்பிட விரும்புகிறேன், அமைச்சர் அவர்கள் கொடுத்த அறிக்கையில், கூட்டுறவு இன்ஸ்டிட்யூட் என்று சென்னையில் இருப்பதைக் கல்லூரியாக உயர்த்துவதற்கு 14 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால், கடந்த இரண்டு மூன்று ஆண்டு காலமாக அதிலே கொஞ்சமும் செலவழிக்கப்படவில்லை. 1959-60-இலே இப்படி ஆக்குவதற்கு திட்டம் இருப்பதாகவும் தெரிந்து கொள்ளமுடியவில்லை. அது என்ன ஆகும் என்பதை நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். கூட்டுறவு இயக்கம் நல்ல முறையில் வளரவேண்டும் என்பதற்கு போதிய அளவு கூட்டுறவுக் கல்வியிலே உயர்ந்த கல்வி கொடுப்பது அவசியம் கூட்டுறவு கல்லூரியாக மாற்றுவது பலன் பெறும் என்ற

17th March 1959] [Sri M. P. Subramaniam]

எண்ணம் இருக்குமானால், இதை என் உயர்த்துவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவில்லை என்பதை நான் இங்கே கேட்டுக் கொள்ள விரும்புகிறேன்.

மற்றும், சேலம் மாவட்டத்தைப் பொறுத்தவரையில், கல்ராயன்மலை, சேர்வராயன்மலைப் பகுதிகள் மலைஜாதியினர் வசிக்கும் பகுதிகள் ஆகும். அங்கு உற்பத்தி செய்கின்ற பொருள்களையெல்லாம் குறிப்பாக, கடுக்காய், மிளகு போன்றவை கீழேயுள்ள மக்கள் மேலே சென்று பாமர மக்களை மிகவும் ஏமாற்றி வாங்கிக்கொண்டு வருகிறார்கள் என்று பல முறை நான் சுட்டிக்காட்டியிருக்கிறேன். ஒரு ரூபாய் இரண்டு ரூபாய் பெறுமானமுள்ளவற்றை இரண்டணா, நான்கணா விலைக்கு வாங்குகிறார்கள். ஆறு மாத காலத்திற்கு முன்னாலேயே பணத்தைக் கொடுத்து, பெரிதும் அக்கிரமமான முறையிலே வாங்குகிறார்கள். அங்குள்ளவர்களுக்கே லாபம் கிடைக்கும்படியாக அங்கே பல நோக்குக் கூட்டுறவு சங்கங்களாக இருந்தாலும் சரி, கூட்டுறவு விற்பனைச் சங்கங்களாக இருந்தாலும் சரி, ஏற்படுத்தவேண்டுமென்று ஐந்து ஆண்டுகளுக்கு முன்பே மாகாண ரிஜிஸ்திராருக்கு எழுதியிருக்கிறேன். சேலத்திலேயுள்ள அதிகாரிகளுக்கும் எழுதினேன். முயற்சி செய்வதாகச் சொன்னார்கள். இரண்டு முறை அவர்களிடம் போய் வந்தேன். பின்னால், எந்த விதமான பலனும் ஏற்படவில்லை. மலை ஜாதியினர் பகுதியாக இருக்கும் காரணத்தால் விசேஷமாக அரசாங்கம் அதிலே அக்கறை எடுத்து, அவர்களுக்கு அரசாங்கம் செலவிலேயே அதிகாரிகள் சில பேர்களை நியமித்து, பத்து ஆண்டு பணியாற்றுவதற்கு வழி செய்தால்தான் அந்த மக்கள் சுறண்டப்படுவதை ஓரளவுக்குத் தடுத்து நிறுத்த முடியும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

கடைசியில் ஒன்று குறிப்பிடுவேன். கூட்டுறவு சங்கங்கள் மூலமாக பல ஊழல்கள் நடைபெற்றுவருவதைப் பல சந்தர்ப்பங்களில் கேள்விகள் மூலம் சுட்டிக்காட்டியிருக்கிறார்கள். இவைகள் நல்ல முறையில் கவனிக்கப்படவில்லையென்றால், கூட்டுறவு சங்கங்களின் வளர்ச்சிக்கு மிகத் தடையாக இருக்கும் என்பதைச் சுட்டிக்காட்டி, உதாரணத்திற்கு நான் ஒன்று குறிப்பிட விரும்புகிறேன். ஏற்கனவே பல முறை இங்கே குறிப்பிட்டும் இருக்கிறேன். சேலத்திலே கூட்டுறவு விற்பனைச் சங்கத்தின் மூலமாக இலங்கைக்கு மிளகாய் ஏற்றுமதிக்காக ஒரு அனுமதி கொடுக்கப்பட்டு, அது நல்ல முறையிலே பயன்படுத்தப்படாமல் விற்பனைச் சங்கத்திலே இருக்கிறவர்கள் எண்பதாயிரம் ரூபாய் லாபம் சம்பாதித்ததாகவும் பின்னால் விஷயம் வெளிவந்த பிறகு, பத்தாயிரம் ரூபாய் இதில் கூட்டுறவு சங்கத்திற்கு லாபமாகக் காட்டி, மீதிப் பணத்தை அவர்கள் சம்பந்தப்பட்டவர்கள் கையாண்டுவிட்டதாகப் புகார் வந்து, ஓராண்டு காலத்திற்குமுன் விசாரணையில் இருப்பதாகக் கூறி, பின்னால் மத்திய அரசாங்க இன்டெலிஜன்ஸ் டிபார்ட்மெண்ட் எடுத்துக்கொண்டார்கள் என்று சொல்லி, பின்னால் என்ன ஆனது என்று தெரியவில்லை. அங்கேயுள்ள மக்கள் என்ன சொல்கிறார்கள் என்றால், இதிலே சம்பந்தப்பட்டவர்கள் பெரிய மனிதர்கள், கூட்டுறவு இயக்கத்தில் பெரியவராக இருந்தால் அது யாரையும் பாதிக்காது என்ற எண்ணம் ஏற்பட்டிருக்கிறது. அதைப் போக்குவதற்காவது இதுபோன்ற காரியங்களில் சிறந்த அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

Sri P. S. K. LAKSHMIPATHI RAJ : கனம் சபாநாயகர் அவர்களே, சபை முன்பு இருக்கிற இந்த கூட்டுறவு மானிய கோரிக்கையின் மீது ஒரு சில வார்த்தைகளைக் கூற விரும்புகிறேன். எனக்கு முன்னால் பேசிய பல அங்கத்தினர் பல விஷயங்களைப்பற்றி பேசியிருக்கிறார்கள். கூட்டுறவு முறையானது நமது மாகாணத்தில், என் இந்தியாவிலேயே நல்ல முறையில் செயல்பட்டு வருகிறது. அதிலும் நமது மாகாணத்தில் அது நல்ல முறையில் செயல்பட்டு வருகிறது என்பதை கேட்டு மிகவும் சந்தோஷமடைகிறேன். இந்த கூட்டுறவு முறையானது முதலாளித்துவத்திற்கும் கம்யூனிஸத்திற்கும் இடையேயுள்ள ஒரு முக்கியமான திட்டம். இந்த திட்டத்தைப்பற்றி குறை கூறுவதற்கு முன்னதாக இந்த திட்டத்தை

[Sri P. S. K. Lakshmipathi Raj] [17th March 1959

செயல்படுத்துவதற்கு இதை நல்ல முறையில் நடத்திக்காட்டுவதற்கு நல்ல ஊழியர்களும் நல்ல எண்ணம் படைத்தவர்களும் இருந்தால் இதைப்பற்றி குறை கூறுமலும் அரசாங்கத்தைப் பற்றி குறை கூறுமலும் இருக்க முடியும். அதன் மேல் அது நல்ல முறையிலும் நடக்கும் என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

நமது ராஜ்யத்தில் கூட்டுறவு முறையானது நல்ல முறையில் செயல் படுவதற்குக் காரணம் உண்மையிலேயே தமிழர்கள் நல்ல நோக்குள்ளவர் களாக இருப்பதாலும், அறிவாளிகளாக இருப்பதாலும்தான். நல்ல அறி வாளிகள் இந்த ஸ்தாபனத்தை ஆரம்பத்தில் எடுத்து நடத்திக் காட்டியதன் காரணமாக இது நல்ல முறையில் இப்பொழுது செயல்பட்டுவருகிறது என்றும் சொல்லலாம். இந்தக் கூட்டுறவு முறையானது கிராமங்களில் நீண்ட காலத்திற்கு முன்னதாக ஆரம்பிக்கப்பட்டு, கடந்த காலத்தில் பல பெரி யவர்கள் நல்ல முறையில் பாடுபட்டு வந்ததன் காரணமாகவும் இன்றை க்கு ஓரளவு நல்ல முறையில் இந்த மாகாணத்தில் நடத்தப்பட்டு வருகிறது. முக்கியமாக கிராமங்களில் விவசாயிகள் நல்ல முறையில் முதன் முதலாக பயனடைந்துகொண்டு வருகிறார்கள். பெரும் முதலாளிகள் அதிகப்படியாக வட்டி வாங்குவதன் காரணமாகவும் கிராமங்களிலுள்ள விவசாயிகள் இந்த கூட்டுறவு முறையை நல்ல அளவில் பயன்படுத்திக் கொண்டு வருகிறார்கள். முதலாளிகளுடைய இம்சை தாங்காமல் அவர்கள் கூட்டுறவு பாங்குகள் மூலமாக கடன் பெற்று வருகிறார்கள். அரசாங்கத் தினுடைய திட்டம் எப்படி இருந்தாலும் கூட அதை விஷம் என்று கருதக்கூடிய அளவில் சிலர் வேலை செய்து வருகிறார்கள். பல முதலாளிகளும், சில தனிப்பட்டவர்களும் தப்பான எண்ணம் கொண்ட சிலரும் இந்த ஸ்தாபனத்தில் புகுந்து கொண்டு தப்பாக கையாளுகிறார் கள். இதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். கடந்த காலத்தில் இது தனிப்பட்ட முறையில் நடந்து வந்தது. இந்தக் காலத்தில் கட்சியின் பெய ராலும், ஜாதியின் பெயராலும் நடந்து வருகிறது என்பதைக் காண்கிறோம்.

சில கிராமங்களில் விவசாயிகளுக்கு என்று கூட்டுறவு முறையில் நில அடமான பாங்குகள் இருக்கின்றன. இதைப்பற்றி நானும் கூட குற்றம் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. அந்த பாங்கில் மாமனூர், மச்சான், சகலை முதலியவர்கள் இருந்து கொண்டு அவர்களே மெஜாரிட்டியாக இருந்து கொண்டு அந்த பாங்குகளை நடத்தி வருகிறார்கள். அங்கு கடன் வேண்டும் என்று கேட்டால் அதைக் கொடுப்பதற்கு என்ன இடைஞ்சல்கள் கொடுக்க வேண்டுமோ அவ்வளவையும் கொடுத்து வருகிறார்கள். கடன் வேண்டும் என்று விவசாயிகள் மனுக் கொடுத்தால் அதை கவனிப்பதே கிடையாது. தன்னுடைய நிலத்தை ஜப்தி செய்யப்போகிறார்கள் என்று அவசரமாகப் பணம் கடனாக வேண்டும் என்று பரிதபித்துக்கேட்டால் கூட கடன் கொடுப்பது கிடையாது. இப்படி ஒரு வருஷம் அல்ல பல வருஷங் களானாலும் கூட கடன் பெறுவது என்பது கிடையாது. இதனால் விவசா யிகள் வாங்கிய கடனைத் திருப்பிக்கொடுக்க முடியாமல் கடன் கொடுத்த முதலாளிகளுக்கு நிலத்தைக் கொடுப்பதோடு இறையாகியும் விடுகிறார்கள். இப்படிப்பட்ட நிலைமையை நாம் சில கிராமங்களில் பார்க்கிறோம்.

சில இடங்களில் என்ன நடக்கிறது என்றால் கடன் கொடுக்க வேண்டும் என்று கேட்டால் அதற்கு அடமானமாக வைக்கக்கூடிய நிலத்தின் மதிப்பு குறைந்து விட்டது என்றும் கடன் கொடுக்க மறுத்து விடுகிறார்கள். பக்கத்திலுள்ள நிலம் நல்ல மதிப்புள்ள நிலமாக இருந்தாலும் கடன் கொடுக்க மனமில்லையானால் மத்தியில் இருக்கக்கூடிய இவருடைய நிலத் தின் மதிப்பு குறைவாக இருக்கிறது என்று சொல்லி கடன் கொடுக்க மறுத்துவிடுகிறார்கள். கடன் கொடுக்க இஷ்டப்பட்டு விட்டால், மதிப்பு எவ் வளவு குறைவாக இருந்தாலும் அடமானம் வைக்கக்கூடிய நிலத்தின் மண் நல்ல செழிப்புள்ள மண் என்று சொல்லி கடன் கொடுத்து விடுகிறார்கள். இப்படிப்பட்ட நிலை சில கிராமங்களில் இருந்துவருகிறது. வேண்டாதவர் களுடைய நிலத்தின் மண் திடீரென்று மதிப்பு குறைந்துவிடுகிறது. இந்தக் குறை நீங்க வேண்டும் என்றும் அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளு

17th March 1959] [Sri P. S. K. Lakshmipathi Raj]

கிறேன். இதனால் பல ஏழை விவசாயிகள் கண்ணீர் விடக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. இதை கனம் மந்திரி அவர்களுக்கு எடுத்துக்காட்ட விரும்பு கிறேன்.

இப்படிப்பட்ட நில பாங்குகள் இருப்பது போன்று நகரப்புரங்களிலும் வீட்டு அடமான பாங்குகளை அமைத்துக்கொடுக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். முக்கியமாக வீட்டுப் பிரச்னை முக்கிய பிரச்னை யாக இருக்கிறது. சிலர் வீட்டை வைத்துக்கொண்டு கடன் வாங்க முடியா மல் பரிதாபகரமான நிலையில் இருக்கிறார்கள். அவர்களுக்கு நன்மை செய்யக்கூடிய அளவில் வீட்டு அடமான பாங்குகளை அமைத்துக்கொடுக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய வழி வகை செய்ய வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சில கூட்டுறவு சங்கங்களில் பெரும் தொல்லைகள் நடைபெற்று வரு கின்றன. அங்கே நடைபெறுகிற கட்சி முறையாலும், ஒருவருக்கு ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு நடத்தும் காரணமாகவும் பல சொசைட்டிகளில் போராட்டம் நடந்து கொண்டிருக்கிறது என்பதைப் பார்க்கிறோம். சில இடங்களில் அது போராட்ட களமாகவே மாறியிருப்பதைக் காணலாம். இதைப்போலவே பழனியில் இருக்கக்கூடிய கூட்டுறவு சங்கத்தில் பல ஆயிரக்கணக்கான ரூபாய் கையாடல் செய்யப்பட்டிருக்கிறது. பல மோசடி களும் நடந்திருக்கின்றன. ஆனால் விசாரணை என்று சொல்லியும் எந்த விதமான தீர்ப்பும் இதுவரையிலும் கிடைக்கவில்லை. அது சம்பந்தமான பேபரும் இதுவரையிலும் வெளியே வரவில்லை. இதன் முடிவை பொது ஜனங்கள் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே கூடிய சீக்கி ரத்தில் அதை ஒரு முடிவுக்குக்கொண்டு வரவேண்டும் என்று இந்த சந்தர்ப்பத்தில் குறிப்பிட விரும்புகிறேன்.

சில இடங்களில் இந்த கூட்டுறவு சொசைட்டிகள் ஒரு சிலருடைய பரம்பரை சொத்தாக இருக்கிறது. சில இடங்களில் அது ஜாதி சொத்தாக இருக்கிறது, சில இடங்களில் அது கட்சி சொத்தாகவும் இருக்கிறது. இவை களை நல்ல முறையில் திருத்தி அமைப்பதற்கு அரசாங்கம் ஒரு வழிவகை காண வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பொதுவாக அங்கத்தி னர்களைச் சேர்த்து கொள்வதற்கு வாய்ப்பு இருந்தாலும் சில இடங்களில் அதை பயன்படுத்திக்கொள்ள முடியவில்லை. அதற்குக் காரணம் சில இடங்களில் விஷமத்தன்மையுடையவர்கள் இருப்பதால் பொது மக்களுக்கு அது பயன்படாமல் இருக்கிறது. சில இடங்களில் அது கட்சி முறையில் நடைபெற்று வருவதால் பொது மக்களுக்கு பயன் பட முடியாமல் இருக் கிறது. எங்கள் பகுதியில் இருக்கக்கூடிய சொசைட்டி கம்யூனிஸ்ட் கட்சி யைச் சேர்ந்த சொசைட்டியாக இருக்கிறது. அதை தன்னுடைய கட்சியின் நன்மைக்காக கையாண்டு வருகிறார்கள். அந்த சொசைட்டிக்கு மாஸ்கோ விலிருந்து நிதி வந்திருப்பதாக அவர்கள் கருதிக்கொண்டு அதை நடத்தி வருகிறார்கள். அப்படிப்பட்ட உரிமையும் அங்கே பேசப்பட்டு வருகிறது. அந்த சொசைட்டிகள் இந்த அரசாங்கத்தினுடைய பணத்திலிருந்து நடத் தப்படுவதாகவே சொல்லிகொள்ளவில்லை.

**Sri M. JAGANNATHAN**: Sir, On a point of order. கனம் அங்கத்தினர் பேசும்போது கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர்கள் அந்த சொசைட்டியை நடத்துகிறார்கள் என்றும், அந்த முறையில் அதன் பணத்தை கையாளுகிறார்கள் என்றும் சொல்லுகிறாரே அதை அவரால் நிரூபிக்க முடியுமா என்று கேட்கிறேன்.

**Mr. SPEAKER**: அப்படி அவர் சொல்கிறார். It is not unparliamentary. It is perfectly in order. It is for the hon. Member to prove he is wrong. But does he not say in his speech that the Congress Members take a prominent part in all these things? I allow it. The hon. Member may go on. But let him not mention names of individuals. பெயரைச் சொல்லாதீர்கள்.

[17th March 1959

**Sri P. S. K. LAKSHMIPATHI RAJ :** சொசைட்டிகள் யாருடைய சொத்தும் அல்ல, பொது மக்களுடைய சொத்து என்ற அடிப் படையில் அதை எடுத்துச் சொன்னேன். தங்களுடைய கட்சி பெயரை அங்கே உபயோகப்படுத்துகிறார்கள் என்றுதான் சொன்னேன். சில இடங்களில் கட்சி சொத்தாக இருக்கிறது, சில இடங்களில் ஜாதி சொத் தாக இருக்கிறது. அந்த முறையில்தான் சொன்னேனே தவிர வேறு ஒன்றும் இல்லை, வேறு கருத்தை எடுத்துக்கொள்ள வேண்டாம். சில நில அடமான பாங்குகளை நாலைந்து பணக்காரர்கள் சேர்ந்துகொண்டு நடத்திவருகிறார்கள். கடன் வேண்டுமென்று கேட்டால் அவர்களுடைய வீட்டில் பத்து அல்லது பதினைந்து நாட்களுக்கு ஊழியம் செய்தால்தான் கடன் கொடுக்கிறார்கள், இல்லாவிட்டால் கடன் கொடுப்பது இல்லை. அவர்களுடைய மனுக்களைக்கூட கவனிப்பது இல்லை. இதனால் ஏழை விவசாயிகள் ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். இப்படிப்பட்ட நிலைமையைப் போக்கவேண்டும்.

சில சொசைட்டிகள் சீக்கிரமாக ரிஜிஸ்தர் செய்யப்படுவது இல்லை. அவைகளையெல்லாம் சீக்கிரமாக ரிஜிஸ்தர் செய்வதற்கு முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். என்னுடைய தொகுதியில் ஒரு சொஸைட்டியை ரிஜிஸ்தர் செய்ய வேண்டும் என்று பலரிடம் கையெழுத்து வாங்கி அனுப்பினேன். இன்னும் அது ரிஜிஸ்தர் செய்யப்படாமலேயே இருக்கிறது. அதற்கு என்ன காரணம் என்று தெரிய யவே இல்லை. சில இடங்களில் எந்த நோக்கத்திற்காக சொசைட்டிகள் ஆரம்பிக்கவேண்டுமென்று சொல்லப்படுகிறதோ அந்த நோக்கம் தீர்ந்த பிறகுதான் ரிஜிஸ்தர் செய்யப்படுகிறது. அதனால் பயனடைய முடியாமல் போய்விடுகிறது. உதாரணமாக பழனியில் சுமார் பத்து லட்சம் ரூபாய்க்கு வேலை நடந்தது. அதற்கு ஒரு சொசைட்டியை ரிஜிஸ்தர் செய்து கொடுத் திருந்தால் பல்லாயிரக்கணக்கானவர்களுக்கு தொழில் கிடைத்திருக்கும். ரிஜிஸ்தர் செய்யாமல் இருந்ததால் அவர்களுக்கு வசதி இல்லாமல் போய் விட்டது.

சில இடங்களில் சொசைட்டிகளில் பல தொந்தரவுகள் இருக்கின்றன. நல்லவர்கள் சொஸைட்டிகளில் அங்கத்தினராக இருக்க முடியவில்லை. சிலர் இருந்து கொண்டு தப்பு தவறுகள் செய்து வருகிறார்கள். அவை களுக்கு நல்லவர்கள் இடம் கொடுக்காமல் இருப்பதால் நல்லவர்களை வெளியேற்றுவதற்கு மற்றவர்கள் நடவடிக்கை எடுத்துக்கொள்ள முற்படு கிறார்கள். செய்யக்கூடிய காரியங்கள் கெட்டவை என்று சொல்வ தால் நல்லவர்கள் அதில் அங்கம் வகிக்க முடியாமல் இருக்கிறது. இப்படிப்பட்ட பல தொல்லைகள் இருக்கின்றன.

இந்தக் கூட்டுறவு இயக்கம் வளரவேண்டுமென்று சொன்னால் எல்லாத் தரப்பினருக்கும் நல்ல எண்ணம் இருந்தால்தான் வளருமே தவிர அரசாங்கம் மட்டும் நல்ல நோக்கம் கொண்டிருந்தால் மட்டும் போதாது. எல்லாக் கட்சிகளும் நல்ல நோக்கத்துடன் அந்தக் கூட்டுறவு இயக்கத்தைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். அரசாங்கம் நல்ல நிலைமையில் இருந் தால் புகழுவார்கள். நல்லது செய்தால் சந்தோஷப்படுவார்கள். ஆனால் சிறிய தவறு ஏற்பட்டு விட்டாலும் அதைப் பெரிதாக எடுத்துக் காட்டு கிறார்கள். இந்தக் காங்கிரஸ் மந்திரிசபை ஏற்பட்டு எந்த அரசாங்கமும் செய்து காட்ட முடியாத அளவுக்கு ஒரு பெரும் மாறுதலைச் செய்து காட்டி இருக்கிறது. இந்த மாறுதலுக்காக விவசாயிகள் மத்தியில், தொழி லாளர்கள் மத்தியில் புரட்சிகரமான இந்தக் கூட்டுறவு முறையை அமுலுக் குக் கொண்டு வந்து நல்ல விதமாக செயலாற்றிக்கொண்டு வரும் இந்தச் சர்க்காரைப் பாராட்டுவதோடு இந்தக் கூட்டுறவுச் சங்கங்களை மேலும் அபிவிருத்தி செய்வதற்கான எல்லா முயற்சிகளையும் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள் ளுகிறேன்.

**Sri K. RAMACHANDRAN :** கனம் சபாநாயகர் அவர்களே, பொது வாக இன்றைய சமுதாயத்தினுடைய வளர்ச்சிக்கு இந்தக் கூட்டுறவு இயக்கந்தான் மிகவும் முக்கியமான இயக்கம். பலதுறைகளிலும் இது

17th March 1959] [Sri K. Ramachandran]

மக்களுடைய வாழ்க்கையை நல்ல முறையில் சீர்படுத்த முடியும். இதில் எந்தவித கருத்து வேறுபாடும் கிடையாது. இந்தக் கூட்டுறவு இயக்கம் சமுதாய வளர்ச்சிக்கு மிகவும் முக்கியமானது என்று நினைக்கிறபோது, இதுவரையில் இந்த இயக்கம் எப்படி நடந்து வந்திருக்கிறது என்பதைப் பார்க்கவேண்டும். இனிமேல் சமுதாய வளர்ச்சிக்கு அடிப்படையாக இந்த இயக்கம் அமையவேண்டுமானால் அது எவ்வாறு செயல்படவேண்டுமென் பதைப்பற்றி நாம் அதிகமாக சிந்திக்கவேண்டிய நிலையில் இருக்கிறோம்.

உதாரணமாகப் பார்க்கப்போனால் நம்முடைய சமுதாயத்தில் 100-க்கு 80 பேர் கிராம மக்கள்தான். இந்தக் கிராம மக்களுக்கு இந்த கூட்டுறவு இயக்கத்தின் பலன் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகக் கிடைக் கிறதோ அவ்வளவுக்கவ்வளவு சமுதாயம் முன்னேறமுடியும். விவசாயி களுக்கும், கிராம மக்களுக்கும் பலன் தரத்தக்க வகையில் இந்தக் கூட்டுறவு இயக்கமானது நல்ல விதமாக நடந்துவந்தால் நிச்சயமாக நல்ல பலன் கிடைக்கும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

முதல் முதலில் கடன் வசதிகள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக கிடைக்கிறதோ, எவ்வளவுக்கெவ்வளவு அவர்கள் கையில் போய்க் கிடைக் கிறதோ அவ்வளவுக்கவ்வளவு நல்ல திட்டமாக இந்தக் கூட்டுறவு இயக்கம் அமையமுடியும். இன்றைக்குக் கிராம வாசிகளை எடுத்துக்கொண்டால் அவர்களுக்குக் கடன் சுமை இருந்துகொண்டே இருக்கிறது. அவர் களுக்குக் கடன் சுமை அதிகரித்துக்கொண்டே வருகிற காரணத்தால் கடன் வசதிகளை மேலும் மேலும் பெருக்கிக்கொள்ள முடியவில்லை. அதனால் விவசாய உற்பத்தி பெருக சந்தர்ப்பம் இல்லாத நிலைமை ஏற்படுவதோடு கூட அவர்களுடைய வாழ்க்கை ஏழ்மை நிலையை அடைந்து கொண்டே போகிறது. அப்படிப் பார்க்கும்போது அவர்களுக்கு இந்தக் கடன் சுமையைக் குறைப்பதோடு மட்டுமல்லாமல் சுலபமாகக் கடன் வசதி கள் கிடைப்பதற்கும் நல்ல வசதியும் வாய்ப்பும் இந்தக் கூட்டுறவு இயக்கத் தின் மூலமாகச் செய்துதரவேண்டும். இப்பொழுது சர்க்கார் திட்டப்படி 84 சத விகிதம் கிராமங்களுக்கு இந்த வசதி செய்து கொடுக்கப்பட்டி ருக்கிறது என்று சொன்னார்கள். ஆனால் இன்றைக்கு இருக்கக்கூடிய கடன் வசதி நிலைமையைப் பார்த்தால் அடிப்படையில் இருக்கக்கூடிய தவறுகள் தெரியும். இன்றையதினம் விவசாயிகளுக்குச் சாதகமான வகையில் அந்தக் கடன் வசதி கொடுக்கப்படுகிறதா என்று பார்த்தால்— ஒன்று விவசாயிகளுக்குக் காலாகாலத்தில் அந்தக் கடன் கிடைப்பதில்லை, விவசாயம் ஆரம்பிக்கிற ஆடி, ஆவணி மாதத்தில் கடன் கேட்டால், மாசி பங்குனி மாதத்தில்தான் கடன் கிடைக்கிறது. அதனால் பலன் இல்லையென்பது ஒன்று. இரண்டாவது, ஓரளவு கடன் கிடைக்கிற வசதி ஏற்பட்டாலும்கூட சொசைடிகளை நடத்துகிற நடைமுறையில் தவறு இருப்பதால் விவசாயிகளுக்குப் பலன் கிடைக்க முடியாத நிலைமை இருக் கிறது. எனக்கு முன் பேசிய அன்பர் " ஏதோ கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்த சிலர் இந்தக் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்தி அவர்களுடைய கட்சிக்காக அந்தப் பணத்தை பயன்படுத்திக்கொள்ளுகிறார்கள் " என்று சொன்னார்கள். அப்படி இருந்தாலும் கூட அவர்கள் " லேட் இன் தி பீல்டு " என்று தான் சொல்ல வேண்டும். முக்கியமாகக் காங்கிரஸ் காரர்கள் கையில்தான் இந்தக் கூட்டுறவுச் சங்கங்கள் ஆரம்ப முதல் இருந்து வந்திருக்கின்றன. அவர்கள்தான் இந்த முறையில் அதைப் பயன்படுத்திக்கொண்டிருந்தார்கள்.

THE HON. SRI R. VENKATARAMAN : ஜஸ்டிஸ் பார்ட்டி இதை முதலில் நடத்தி வந்தது.

SRI K. RAMACHANDRAN : இதற்குப் பல சான்றுகள் கூறமுடியும். காங்கிரஸ்காரர்கள் கையில்தான் இந்த இயக்கம் இருந்துவந்திருக்கிறது. அந்தக் காலத்தில் ஒரு சொசைடி பாக்கி இல்லாமல் கன்னியாகுமரி முதல் காஷ்மீர் வரை எல்லாக் கூட்டுறவு இயக்கங்களும் காங்கிரஸ்காரர்கள் கையில்தான் இருந்துவந்தன. இந்த வகையில் காங்கிரஸ் கட்சிக்கு இருந்த மதிப்பைச் சொல்ல முடியாது. அவர்கள் செய்து வந்த ஊழல் கள் கொஞ்சநஞ்சமல்ல. கிராமாந்திரங்களில் இருந்த சொசைடிகளிலும்

[Sri K. Ramachandran] [17th March 1959

சரி நகரங்களில் இருந்த கூட்டுறவு இயக்கங்களிலும் சரி—காங்கிரஸ் காரர்கள் எவ்வளவு மோசமான முறையில் நடந்து வந்திருக்கிறார்கள் என்பது எல்லோரும் அறிந்ததே. இவர்கள் அங்கு பணத்தைப் பெரும் அளவில் கையாண்டு வந்திருக்கிறார்கள். கூட்டுறவு இயக்கத்தின் பலன் நல்ல முறையில் மக்களுக்குக் கிடைக்கவில்லை.

இந்தக் கூட்டுறவு இயக்கம் நல்ல முறையில் பலன் அளிக்க வேண்டு மென்றால் எந்தக் கட்சியாக இருந்தாலும் நியாயமான முறையில் கிராம மக்கள், ஏழைத் தொழி ாளர்கள் வாழ்க்கையைச் சீர்படுத்தும் வகையில் பாடுபட முன் வரவேண்டும். அப்படிப் பாடுபடுகிறவர்கள் இந்தக் கூட்டுறவு சொசைடிகளில் பெரும் பங்கு கொண்டு உழைத்தால்தான் இந்த சொசைடிகள் நல்ல முறையில் இயங்க வழி ஏற்படும். இப்பொழுது ஜனங்கள் விழித்துக்கொண்டு விட்டார்கள். யார் யார் உண்மையில் மக்களுக்காகச் சேவை செய்கிறார்கள் என்பதை அவர்கள் தெரிந்து கொண்டு விட்டார்கள். இனிமேல் கட்சி பெயர் சொல்லிக்கொண்டு இந்த இயக்கத்தில் இருக்கக்கூடாது. மக்கள் எல்லோரும் அந்த இயக்கத்தில் பங்கு கொள்ளவேண்டும்.

க்ரெடிட் சொசைடிகளை எடுத்துக்கொண்டால் ஒவ்வொரு சொசைடி களிலும் ஊழல் இருக்கிறது. அந்த சொசைடியின் பிரசிடெண்ட் என்ன செய்வார் என்றால் 10, 12 அப்ளிகேஷன்கள் கடன் வேண்டுமென்று வந்திருந்தால் அவர் 500, 1,000 என்று பாங்கில் இருந்து எடுத்து தன்னுடைய சொந்த உபயோகத்திற்கு வைத்துக்கொள்ளுவார். அந்தப் பணத்தை ஏழை விவசாயிகளுக்குக் கொடுத்தது மாதிரி காண்பித்து விடுவார். பின்னால் அந்தப் பணத்திற்காக பணமே பெற்றுக் கொள்ளாத ஏழை விவசாயிகளுடைய சாமான்கள் ஜப்தி செய்யப்படும். இந்த நிலைமை இன்றையதினம் இருந்துகொண்டிருக்கிறது. "அர்பன் சொசைடிகளில்" சாதாரண ஏழைகள் தாங்கள் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கும் பணத்தைத் தங்கள் சொந்தத்திற்கு உபயோகப்படுத்திக்கொண்டு அதைக் கணக்கில் காண்பிக்காமல் இருக்கிறார்கள். இந்த மாதிரி நிலைமை ஏற்படாமல் இருக்க அடிக்கடி அவர்களைக் கண்காணிக்க வேண்டும். ஆடிட் செய்து அந்தக் கணக்குகளைச் சரிபார்க்கச் செய்யவேண்டும். அப்பொழுது தான் நல்ல நிலைமை ஏற்படமுடியும்.

இந்த "மார்க்கட்டிங் சொசைட்டிகளிலும்—" இந்த மாதிரி ஊழல்கள் நிறைந்திருக்கின்றன. லட்சக்கணக்கில் நடக்கக்கூடிய வியாபாரத்தை நடத்தக்கூடிய திறன் அந்த சொசைட்டிகளுக்கு ஏற்பட்டிருக்கிறது. அதெல்லாம் சரியான படி நடக்கிறதா? பொதுப் பணத்தைத் தங்களுடைய பணம் என்று நினைக்காத நிர்வாகஸ்தர்கள் ஏற்பட்டால்தான் அது திறம்பட நடக்க முடியும். இன்றைக்கு அந்த ரீதியில் இருந்து கொண்டிருக்கிற இந்த சொசைட்டிகளின் விதிகளை இறுக்கிப் பிடிப்பதன் மூலமாக இதைச் சரிப்படுத்திவிடலாம் என்றுதான் நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இன்றைக்குக் காலைப் பத்திரிகையில் கூட 400 அம்மோனியம் சல்பேட் மூட்டை கடத்தப்பட்டுவிட்டதாகச் செய்தி வந்திருக் கிறது. 16,000 ரூபாய் நஷ்டம் என்றால் நிர்வாகம் எந்த முறையில் நடந்து வருகிறது என்பதை நாம் உணரமுடிகிறது.

" பார்மிங் " சொசைடிகளைப் பொறுத்தவரை இரண்டு மூன்று "பார்மிங்" சொசைடிகளை ஏற்படுத்தி இருக்கிறார்கள். இதையெல்லாம் பரிசீலனை செய்வதோடு ஒவ்வொரு ப்ளாக்குக்கும் ஒரு "பார்மிங் சொசைட்டியை" ஏற்படுத்தவேண்டும். அதைப் பரீட்சார்த்தமுறையில், நல்ல முறையில் அறிந்து பெரிய சட்டம் வருவதற்கு முன்னால் ஆராய்ச்சி செய்து பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

" எக்ஸ் சர்விஸ் மென் " ஐப் பொறுத்தவரை 3 லட்சம் பேர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்காக "லாண்ட் காலனிசேஷன் சொசைடிகள்" ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவைகள் எல்லாம் சரியானபடி நடக்கவில்லை என்று சொல்ல விரும்புகிறேன். அவர்களுக்காக மோட்டார் ட்ரான்ஸ் போர்ட் சொசைடிகளும் இருக்கின்றன. நல்ல விதத்தில் அந்த சொசைடி கள் வேலை செய்தால் இந்த எக்ஸ்சர்விஸ்மென்களுக்கு நல்ல பலன ஏற்படும். இந்த எக்ஸ்சர்விஸ்மென்களைப் பொறுத்தவரை நல்ல

17th March 1959] [Sri K. Ramachandran]

டெக்னிகல் ஸ்கில் உள்ளவர்கள், பலதுறைகளிலும் பயிற்சி பெற்றவர்கள் இருக்கிறார்கள். அவர்களை வைத்துக்கொண்டு சிறிய தொழில்களை நடத்த வாய்ப்பு இருக்கிறது. அந்த முறையில் சிறு தொழில்களை ஆரம்பித்து அவர்களுடைய வாழ்க்கையை வளப்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

கூட்டுறவு இயக்கம் வெற்றிபெற வேண்டுமானால் நல்ல நிர்வாகஸ்தர்கள் ஏற்படவேண்டும். நல்ல நிர்வாகஸ்தர்களைப் போட்டு அந்த இயக்கத்தை நல்ல முறையில் நடத்த வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri A. GOVINDASAMY** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்தக் கூட்டுறவு மானியத்தின்மீது நண்பர் திரு. எ. மாரிமுத்து அவர்கள் பிரேரித்திருக்கக்கூடிய வெட்டுப் பிரேரணையை ஆதரித்தும், கூட்டுறவு இலாக்காவில் சில குறைபாடுகளை எடுத்துச் சொல்லியும், கிராம மக்களுக்குத் தேவையான சில திட்டங்களை அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவந்தும்—அவற்றுக்கு உடனடியாக சர்க்கார் தகுந்த ஏற்பாடு செய்யவேண்டும் என்றும் சிலவார்த்தைகள் பேச விரும்புகிறேன். 12-30 p.m.

(Deputy Speaker in the Chair.)

இந்தத் துறைக்காக இவ்வருஷத்தில் 53 லட்சத்து 15 ஆயிரம் ரூபாய் கூடுதலாக ஒதுக்கியிருப்பதை நான் வரவேற்றுப் பாராட்டுகிறேன். இந்தத் தொகையானது கூட்டுறவு இயக்கத்தின் கீழ் கொண்டுவரப்படுகிற நெசவாளர்களுக்கு உதவி செய்வதற்காக என்று தெரிகிறது. இன்றைக்கு கூட்டுறவு இயக்கத்தின் மூலம் அதிகமான நெசவாளர்கள் பயன் அடைந்து வருகிறார்கள். இன்னும் பல பேர்கள் பயனடையாமல் இருக்கிற காரணத்தினால் அதிகமான தொகை ஒதுக்கியிருந்தால் இது இன்னும் பாராட்டுவதற்குரிய முறையில் அமைந்திருக்க முடியும். கூட்டுறவு இயக்கத்தில் வராமல் தங்கியிருக்கக்கூடிய ஒரு சில நெசவாளர்கள்—தங்களுக்கும் ரிபேட் அளிக்கும் வசதி செய்து தரப்படவேண்டும் என்று வற்புறுத்தி வருகிறார்கள். ஆனால் எப்போதும் போல கூட்டுறவு இயக்கத்தின் கீழ் வருகிறவர்களுக்கு மட்டுந்தான் இந்த ரிபேட் வசதி அளிக்கப்படும் என்று இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அப்படி இருந்தால் தான் இன்னும் அதிகப்படியான நெசவாளர்கள் தனித்து இருக்காமல் கூட்டுறவு இயக்கத்தின்கீழ் வந்து சேர்ந்துகொள்வார்கள். அப்படியின்றி தனிப்பட்டு இருக்கக்கூடியவர்களுக்கும் இந்த ரிபேட் வசதி கொடுப்பது என்று வந்துவிட்டால் கூட்டுறவு இயக்கம் நல்ல முறையில் வளராமல் போய்விடுவதற்குரிய நிலைமைதான் ஏற்படும் என்று இந்த நேரத்தில் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

கூட்டுறவு இலாகாவின் மூலம் வீடுகள் கட்டுகிறோம். வீடு இல்லாப் பிரச்னையைத் தீர்ப்பதற்காக ஏழை எளியவர்களுக்கு உதவி செய்யவேண்டும் என்கிற நோக்கத்தோடு அரசாங்கம் இத்திட்டத்தை வகுத்திருந்தாலும் இன்றையதினம் யாருக்கு வீடு கட்டித் தரப்படுகிறது என்று பார்க்கிறபோது வீடு இருக்கிறவர்களுக்கேதான் வீடுகள் கட்டித் தரப்படுகிறது. வீடு இல்லாதவர்களுக்கு வீடுகள் கொடுக்கப்படுவதில்லை என்கிற குற்றச்சாட்டை நான் அமைச்சர் அவர்கள் மீது சுமத்த விரும்புகிறேன். இதை அமைச்சர் அவர்களும் கவனித்துத் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

ஒவ்வொருவருடைய பெயரையும்—தலைவர் பெயர் நிலை நிறுத்தப்படுவது போல இப்படி பல காலனிகளை ஏற்படுத்தும்போது இன்றையதினம் பல பேர்களுடைய பெயரை வைப்பதற்குத்தான் உதவுகிறது. ஒரு சொஸைடி என்றால் அதன் தலைவருடைய உறவினர்களுக்கே ஒரு தெரு, இரண்டு தெரு வீடுகள் இன்றையதினம் அமைந்துவிடுகிறதே தவிர உண்மையில் வீடு இல்லாதவர்களுக்கு வீடு கிடைப்பது என்பது கஷ்டமாகத்தான் இருக்கிறது. ஆகவே பரவலாக—வீடு உள்ளவர்களுக்கு, வசதி உள்ளவர்களுக்கு இல்லாதபடி—வீடு இல்லாதவர்களுக்குப் பயன்படுமாறு இதைக் கட்டிக்கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

[Sri A. Govindasamy] [17th March 1959

எங்களுடைய மாவட்டத்தைச் சேர்ந்த ஸ்ரீ பழனியப்ப முதலியாரைப் பற்றி பெருமைபடுத்தபட்ட முறையில் கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டதை நானும் பெருமையோடு ஏற்றுக்கொள்கிறேன்.

கடலூரில் அவர் சொந்த வீட்டுக்கு எதிரிலேயே இருக்கிற வீடு கட்டும் சொஸைடி ஒன்றில் 20 ஆயிரம் ரூபாய் மோசடி செய்யப்பட்டிருப்பதையும் நான் அமைச்சருடைய கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். சர்க்காருக்கு யார் தப்பு செய்கிறார்கள் என்று எப்படி தெரியும், சர்க்கார் இதற்கு எப்படிப் பொறுப்பாளியாவார்கள் என்று கேட்கலாம். சர்க்கார் தான் பொறுப்பாளி, சர்க்கார் உத்தரவாதத்தை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பதற்காகத்தான் அதனதன் கணக்குகளை அடிக்கடி ஆடிட் செய்வதற்கு ஆடிட் இலாகாகாரர்களை உபயோகப்படுத்தவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். அதுவும் இநத நேரத்தில் கூட்டுறவு இயக்கத்தில் நீண்டகாலத் தொடர்பும், அனுபவமும் நிறைந்த திரு. சுப்பிரமணிய கவுண்டர் அவர்கள் ஆடிட் இலாகாவின் மூலமாக தணிக்ஈகயாளர்களைப் போடவேண்டாம் என்று சொன்னபோது எனக்கு மிக ஆச்சர்யமாக இருந்தது.

**Sri K. S. SUBRAMANIA GOUNDER :** நான் சொன்னது அதிக மான அதிகாரிகளைப் போடவேண்டாம், ஆடிட்டர்களை போடவேண்டும் என்பதுதான்.

***Sri A. GOVINDASAMY :** ஆடிட்டிங் டிபார்ட்மெண்டாரை போடுவதை கவுண்டர் ஆட்சேபித்ததை நான் குறிப்பிட்டேன். அங்கே இருக்கிற ஆடிட்டவர்களைவிட நாம் போடுகிறவர்களுக்குக் குறைந்த சம்பளம் இருந்தால்—அங்கே பொறுப்பாக உள்ள பணக்காரர், வசதி உள்ளவர்கள்—இவர்களை அமுக்கிக் கொண்டு தப்பித்துக்கொண்டுவிட முடியும். அதற்கு இடமில்லாமல் அதிகச் சம்பளமும் அதிகாரமும் உள்ள தணிக்கையாளர்களை சர்க்கார் தணிக்கை இலாகா மூலமாகப் போட்டு இந்தக் கணக்குகளை அடிக்கடி தணிக்கை செய்வதற்கு ஏற்பாடு செய்தால்தான் மோசடிகளைத் தவிர்க்க முடியும். இந்தப் பண மோசடி செய்வதில் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்கள் கம்யூனிஸ்டுகாரர்கள் செய்வதாகச் சொன்னார்கள். இங்குள்ளவர்கள் காங்கிரஸ்காரர்கள் செய்வதாகச் சொன்னார்கள். அப்போது மந்திரி அவர்கள் குறுக்கிட்டு ஆரம்பத்தில் ஜஸ்டிஸ் கட்சிக்காரர்களிடத்தில்தான் இருந்தது என்றார்கள். அன்றைக்கு ஜஸ்டிஸ் கட்சியில் இருந்தவர்களில் பெரும்பகுதியினர் இன்று காங்கிரஸில் வந்து சேர்ந்திருக்கிற காரணத்தினால் கொஞ்சம் எச்சரிக்கையாக அவர் இருக்க வேண்டுமென்று நான் சொல்லிக்கொள்ளவிரும்புகிறேன். அப்படி மோசடி செய்வது எந்தக் கட்சிக்காரர்களாக இருந்தாலும் தவறு. கூட்டுறவு இயக்கம் நம் ராஜ்யத்தில் நல்ல முறையில் வளர்க்கப்பட வேண்டுமானால் பணத்தை யாரும் மோசடி செய்யாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

அடுத்தபடியாக வளவனூரிலும் பெண்ணாடத்திலும் ஒரு கூட்டுறவு சர்க்கரை ஆலையை ஏற்படுத்துவதற்குச் சர்க்கார் முயற்சி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். வளவனூரில் ஒரு சர்க்கரை ஆலையை ஏற்படுத்த பாரி கம்பெனி முன்வந்தபோதும் மத்திய சர்க்கார் அனுமதி கொடுக்கவில்லை. தனியார் முன்வந்தபோதும் கொடுக்கவில்லை. கூட்டுறவு இயக்கத்தின் மூலமாவது ஆரம்பிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

விவசாயக் கூட்டுப் பண்ணைகள் இன்னும் அதிகப்படவேண்டும். அது போலவே விவசாய பாங்குகள் அதிகரிக்கவேண்டும். நீண்ட காலக் கடன்களையும் கூட குறைந்த வட்டிக்கு விவசாயிகளுக்குக் கொடுத்தால் தான் மிக்க பலன் ஏற்படும் என்பது என் வேண்டுகோள் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

பால் உற்பத்தி செய்வதற்கும் பால் பண்ணைகள் ஏற்பட்டாகவேண்டும். இரண்டு ஆண்டுக்கு முன்னாலேயே பம்பாயில் உள்ளதுபோன்ற உறாரே பால் பண்ணை போல் இங்கும் ஆரம்பிக்கப் போவதாகச் சொன்னார்கள்.

17th March 1959] [Sri A. Govindasamy]

அப்படி ஏற்படுத்தி, இந்நாட்டு மக்கள் எல்லோருக்கும் நல்ல பால் கிடைக்கும்படி செய்து, கால்நடைகளையும் அபிவிருத்தி செய்யவேண்டும். மேய்ச்சல் தரையாக உள்ள பூமிகளை அதற்காக ஒதுக்கிவிட வேண்டும்.

பணமோசடியைப் பற்றி எல்லோரும் சொன்னார்கள். நானும் ஒரு மோசடியைச் சொல்கிறேன். கள்ளக்குறிச்சியைப் பொறுத்த வரையில் நில அடமான பாங்கில் 20 ஆயிரம் ரூபாய் போயிருக்கிறது. அது எங்கே போயிற்று ? அரசாங்கத்தின் கடலூர் பண்டக சாலையில் மோசடியாகியிருக்கிறது. இதைச் செய்தவர்கள யார் என்றால் இரண்டு இடத்திலும் காங்கிரஸ்காரர்கள்தான். நான் பெயரைச் சொல்ல விரும்பவில்லை. இவை அரசாங்கத்தின் கவனத்திற்கும் வந்திருக்கிறது. அதுமட்டுமல்ல, கள்ளக்குறிச்சியில் செண்டிரல் பாங்க் டைரக்டர் எலெக்ஷன் வைத்தார்கள், தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் ஒன்றாகச் சேர்ந்து தலைவர் தேர்ந்தெடுக்க முடியாதபடி சச்சரவோடு முடிந்துவிட்டது. ஆனால் அப்புறம் ஒரு சிலர் மட்டும் சேர்ந்துகொண்டு—அந்த இடத்தையே சேராதவர்கள்—தலைவர் தேர்தல் நடந்ததுபோன்று எல்லாவித மினிட்சுகளையும் எழுதி மேலே அனுப்பிவிட்டார்கள். இப்படிப்பட்ட அசம்பாவிதங்களை எல்லாம் தடுக்க கூட்டுறவு இலாகா தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். மேலும் நில அடமான பாங்கு மூலம் பணம் கொடுப்பது காலதாமதமாகிறது. இந்த அவையில் அதிகாரிகளும் இருப்பதால் சொல்கிறேன். குறையாகச் சொல்லவில்லை. வேண்டுகோளாகச் சொல்கிறேன். இந்தக் கடன்களை எவ்வளவு சீக்கிரமாக காலதாமதமில்லாமல் கொடுக்கிறார்களோ அவ்வளவுக்கு நல்ல பயன் ஏற்படுகிறதென்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

கடைசியாக ஒன்று சொல்ல விரும்புகிறேன். பட்டாளத்திற்குச் சென்று வந்த சிப்பாய்கள் எங்கள் கடலூரில் கூட்டுறவு முறையில் ஒரு மோட்டார் யூனியனை அமைத்திருக்கிறார்கள். அதன் நிர்வாகிகள் பட்டாளத்தைச் சேர்ந்தவர்களாக இல்லை. எங்கேயோ இருந்தவர்களைக் கொண்டுவந்து அதன் நிர்வாகிகளாகப் போட்டிருக்கிறார்கள். இதன் காரணமாக அந்த சிப்பாய்களுக்கு போதுமான வசதியும் சௌகரியமும் அந்த யூனியனால் கிடைக்காமல் அவர்கள் தொல்லைக்கு ஆளாகியிருக்கிறார்கள். அவர்களுடைய கோரிக்கைகள் கவனிக்கப்படவில்லை. எந்தக் காரணத்திற்காக, எந்த நோக்கத்துடன், அந்த யூனியன் அமைக்கப்பட்டதோ அது ஏற்படும் வகையில் அரசாங்கம் தகுந்த நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

கூட்டுறவு இயக்கத்தில் கட்சி வேறுபாடு இல்லை என்று பல கட்சிக்காரர்களும் குறிப்பிட்டார்கள். அதில் கட்சி வேறுபாடு இல்லை என்பதை எடுத்துக்காட்டும் முறையில் அந்த இயக்கத்தின் கொடியில் பலதரப்பட்ட வர்ணங்கள் இருக்கின்றன. ஆனால் ஆளும் கட்சிக்கு மட்டுமே இந்த இயக்கத்தில் செல்வாக்கு ஏற்படும் முறையில் காரியங்கள் நடப்பதை கனம் அமைச்சரின் கவனத்திற்குக் கொண்டுவராமல் இருந்தேன் என்றால் நான் கடமையில் தவறியவனாவேன் என்பதால் அதை அவருடைய கவனத்திற்குக் கொண்டுவருகிறேன். சில வாரங்களுக்கு முன் இந்த ராஜ்யத்தில் கைத்தறி வாரவிழா கொண்டாடப்பட்டது. அந்த விழாவிலும் கைத்தறித் தொழிலின் அபிவிருத்தியிலும் எல்லாக் கட்சிகளுக்கும் அக்கறை உண்டு. ஆனால் அந்த விழா நடந்தபோது அக்கொண்டாட்டத்திற்கு சம்பந்தப்பட்ட கூட்டுறவு இயக்கத்தினர் ஆளும் கட்சித் தலைவர்களை மட்டும் அழைத்தார்களே தவிர எதிர்க்கட்சியினரை அழைக்கவில்லை. அது கூட்டுறவு இயக்கத்தினரின் பொறுப்பு என்று கனம் மந்திரி சொல்லக் கூடும். மத்திய அரசாங்கம்தான் இந்த விழாவைக் கொண்டாடச் சொல்கிறது. அதை அவ்வாறே சிறப்பாக கொண்டாட இந்த ராஜ்ய அரசாங்கம் நடவடிக்கை எடுக்கிறது. எனவே அது வேறு விஷயம் என்று சொல்லிக் கனம் மந்திரி அவர்கள் தப்பித்துக்கொள்ளக்கூடாது. இனி வரும் ஆண்டுகளிலாவது இம்மாதிரியெல்லாம் நேராமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று அவரைக் கேட்டுக்கொள்கிறேன்.

[17th March 1959

DEPUTY SPEAKER: The hon. Member's time is up. The Hon. Minister is not responsible for it and the Government also are not responsible for not inviting leaders of other parties. It is not relevant to the Demand. The hon. Member may resume his seat.

* SRI A. GOVINDASAMY: கைத்தறி வார விழாவைக் கொண்டாடுவதில் நமது அமைச்சர்களும் கலந்துகொள்கிருர்கள். அதை ஒரு கட்சியின் ஏகபோக உரிமையாகவோ ஒரு கட்சிப் பிரச்னையாகவோ ஆக்கக்கூடாது என்று சொன்னேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மானிய கோரிக்கையின் பேரில் விவாதம் நடந்தபோது ஒரு ஒத்துழைப்பானமுறையில் எல்லா கனம் அங்கத்தினர்களும் விவாதத்தில் பங்கெடுத்துக்கொண்டு நல்ல யோசனைகள் கூறியதற்காக அவர்கள் எல்லோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கூட்டுறவு இயக்கமானது மக்களுடைய இயக்கம். பல தரப்பட்ட மக்கள் ஒன்ருகச் சேர்ந்து தங்களுக்குத் தேவையான காரியங்களைச் செய்துகொள்வதற்காக அமைக்கப்பட்டுள்ள ஒரு அமைப்பு இது. மக்களிடம் என்னென்ன குறைகள் இருக்கின்றனவோ அந்தக் குறைகள் எல்லாம் இந்த அமைப்பிலும் பிரதிபலிக்கும் என்பதில் சந்தேகமில்லை. நிர்வாகத் துறையில் சட்டங்கள் இயற்றும் முறையில் விதி முதலியவைகளை சற்று நன்ருக, சுறுசுறுப்பாக, கவனித்தால் இந்தக் குறைபாடுகள் நீங்கும் என்ற முறையில்தான் சர்க்கார் இந்த இயக்கத்தில் குறுக்கிடுகிறது ; மற்றப்படி இந்த இயக்கத்தினர் நடத்தும் இயக்கத்தில் சர்க்கார் தினந்தோறும் தலையிட்டு ஒவ்வொன்றையும் கண்காணிப்பு செய்வது என்ற முறை ஏற்படவில்லை ; அதாவது ஒரு சர்க்கார் இலாகாவை நடத்துவது போல இதிலே நாம் நடக்கவேண்டுமென்ற நிலை ஏற்படவில்லை ; இந்த நிலை ஏற்பட்டால் இந்த இயக்கம் வலுவடையாது, வலுவடையவேண்டியதற்கு மாருக இயக்கமே நசித்துவிடும். இந்த ஸ்தாபனங்களுக்கு டைரக்டர்களை நாமினேஷன் செய்யும்போது சர்க்கார் இந்த இயக்கத்தில் தலையிடுகிறது. அவ்வாறு தலையிட்டு அவர்களை நாமினேஷன் செய்வதைக் கூட, எந்த ஸொஸைடிகளில் சண்டை சச்சரவுகள் இருக்கின்றனவோ, எந்த ஸொஸைடிகளில் தவறுகள் ஏற்பட்டுவிட்டன என்று புகார்கள் வந்திருக்கின்றனவோ, அந்த ஸொஸைடிகளில்தான் செய்கிறது ; மற்ற இடங்களில் நாமினேஷன் செய்வதில்லை. புதிதாக ஏற்படும் ஸொஸைடிகளில் சர்க்கார் நாமினேஷன் செய்யும் நிலைமை நிச்சயமாக இருக்கிறது. காரணம், அவைகளை ஆரம்பிக்கும்போது யார் யார் என்னென்ன தகுதியுள்ளவர்கள் என்பது புதிதாக அவைகளை ஆரம்பிக்கும் அங்கத்தினர்களுக்கு சரிவரத் தெரியாது. ஆகவே இவைகளை புதிதாக ஆரம்பிக்கப்படும் இடங்களிலும் சர்க்கார் நாமினேஷன் செய்யவேண்டியிருக்கிறது. இந்த மாநிலத்தில் புதியதாக ஆரம்பிக்கப்பட்ட ஸொஸைடிகள் நீங்கலாக எல்லா ஸொஸைடிகளையும் எடுத்துக்கொண்டு பார்த்தால், மிக்க குறைவான ஸொஸைடிகளிலேயே சர்க்கார் தலையிட்டு நாமினேஷன் செய்திருக்கிறது என்பது தெரியவரும். இது எதைக் காண்பிக்கிறது ? மாநிலத்தில் அதிகமான கூட்டுறவு ஸொஸைடிகளில் ஊழல்களும், குறைகளும் இல்லை என்பதைக் காட்டுகிறது. கூட்டுறவு இயக்கத்தில் எத்தனையோ குறைகளும் ஊழல்களும் இருப்பதாக கனம் அங்கத்தினர்கள் கூறினுர்கள். அப்படி அல்ல, குறைகளும், ஊழல்களும் குறைவு என்பதை இந்தப் புள்ளிவிவரம் காட்டுகிறது. குறைகளும் குற்றங்களும் இருக்கும் இடங்களில்தான் நாங்கள் தலையிட்டு நாமினேஷன் செய்கிருேம். நாங்கள் நாமினேஷன் செய்திருப்பது குறைவு என்பதை இந்தப் புள்ளிவிவரம் காட்டுவதால், ராஜ்யத்தில் கூட்டுறவு இயக்கம் சரியான முறையில் நடந்துவருகிறது என்று தெரியவருகிறது.

17th March 1959] [Sri R. Venkataraman]

கூட்டுறவு இயக்கத்தில் பங்குகொள்பவர்கள், நான் அபிஷியல்ஸும் சரி, உத்தியோகத் துறையினரும் சரி, ஒரு சிறந்த சேவை செய்கிறார்கள். அவர்கள் செய்யும் இந்தச் சேவை நாட்டுக்குச் செய்யப்படும் சேவை என்பதால் அதை நாம் இந்த சந்தர்ப்பத்தில் பாராட்டாமல் இருக்கமுடியாது.

கூட்டுறவு இயக்கம் இன்னும் நன்றாக வலுவடைய வேண்டும். நமது ராஜ்யத்தின் நோக்கமும் நமது நாட்டின் நோக்கமும் ஒரு சோஷலிஸ சமுதாயத்தை அமைக்க வேண்டும் என்பது ஆகும். அதற்கேற்ற அளவில் பொறுப்புகளும் பங்கும் பொதுமக்கள் எடுத்துக்கொண்டால்தான் உண்மையான ஸோஷலிஸம் ஏற்படும். சர்க்காரே எல்லாக் காரியங்களையும் செய்வதன் மூலம் உண்மையான சோஷலிஸத்தை உருவாக்க முடியாது. ஸ்டேட் காபிடலிஸம் போல எல்லாத் தொழில்களையும் சர்க்காரே நடத்துவது, ஸோஷலிஸம் என்பதற்குரிய டெபனிஷனுக்கு ஒத்ததாகாது. எந்த சமுதாயத்தில் மக்களுடைய தொடர்பும் மக்களுக்குள்ள நிர்வாகப் பொறுப்பும் அதிகமாக இருக்குமோ அந்த சமுதாயம் தான் உண்மையான ஸோஷலிஸ சமுதாயமாக இருக்க முடியும். ஆகவேதான் சோஷலிஸ சமுதாயத்தை அமைக்க வேண்டுமென்று சொல்லும்போது, நமக்குத் தேவையான காரியங்களை பெருமளவிற்கு கூட்டுறவு முறையில் செய்ய வேண்டுமென்றும், கூட்டுறவு இயக்கத்தின் மூலம் நாட்டிலுள்ள இன்றைய சமுதாய அமைப்பை மாற்றியமைத்துக்கொள்ள வேண்டுமென்றும் நினைக்கிறோம். இன்று நம் நாட்டில் விவசாயம்தான் முக்கியமான தொழில். இந்த ராஜ்யத்தில் விவசாயத்தை நம்பி வாழ்பவர்கள்தான் 70 சதவிகிதத்தினர். எனவே இந்த நாட்டில் உண்மையான சோஷலிஸம் ஏற்பட வேண்டுமானால், பெரும்பான்மையான மக்கள் ஈடுபட்டிருக்கும் இந்தத் தொழில் கூட்டுறவு முறையில் நடக்கவேண்டும் ; இந்தத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள் எல்லோரும் கூட்டுறவு முறையில் விவசாயம் செய்தால் தான் அந்த லட்சியம் நிறைவேறும். ஆகவே தான் இந்த நாட்டின் நிர்வாகப் பொறுப்பை வகிக்கும் கட்சியானது இந்நாட்டில் விவசாயத்தில் கூட்டுறவு முறையை அனுஷ்டிக்க வேண்டுமென்ற கொள்கையை வகுத்திருக்கிறது. நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டி அதற்கு மேற்பட்டு இருக்கும் நிலங்களில் நாம் கூட்டுறவு முறையில் விவசாயம் செய்ய வேண்டும் ; அதுமட்டுமன்றி, உச்ச வரம்பிற்குக் குறைவான நிலங்களை உடையவர்கள் ஒன்றாகச் சேர்ந்து கூட்டுறவு முறையில் விவசாயம் செய்ய வேண்டும். இதையெல்லாம் நமது நோக்கமாக வகுத்துக்கொண்டிருக்கிறோம். இந்த விஷயத்தில் ஒரு குழப்பம் பெரிய அளவிற்கு இருக்கிறது. இதில் பலவிதமான வார்த்தைகள் போடப்பட்டு பலவிதமான அபிப்பிராயங்கள் சொல்லப்படுகின்றன. ஆகவே இதைப்பற்றி சில நிமிஷங்கள் விரிவாகப் பேச வேண்டுமென்று நினைக்கிறேன்.

விவசாயத்தை கூட்டுறவு முறையில் நடத்த வேண்டுமென்று சொல்லும்போது, ஸெர்விஸ் ஸொஸைடி, ஜாயிண்ட் பார்மிங் ஸொஸைடி, டெனன்ட்ஸ் பார்மிங் ஸொஸைடி, கலெக்டிவ் பார்மிங் என்ற பெயர்கள் அடிபடுகின்றன. ஸெர்விஸ் ஸொஸைடி எனப்படுவது, இப்போது நமது ராஜ்யத்தில் வந்திருக்கும் மல்டி பர்பஸ் ஸொஸைடிதான். ஆகவே நாம் ஏதோ புதிதாக ஸெர்விஸ் ஸொஸைடிகள் என்ற ஸொஸைடிகளை அமைத்து நிலைமையை ஒரேயடியாக மாற்றிவிடப்போகிறோம் என்று யாரும் பயப்பட வேண்டியதில்லை. அந்த பயத்திற்கு கொஞ்சம்கூட இடமில்லை. விவசாயிகளுக்கு விதைகள் கொடுப்பது, உரம் கொடுப்பது, விவசாயக் கருவிகளை வாங்கி அவைகளை கடனுக்கோ உபயோகத்திற்கோ கொடுப்பது ஆகிய காரியங்கள் எல்லாவற்றையும் செய்யக்கூடிய ஒரு பல்நோக்கு ஸொஸைடிதான் ஸெர்விஸ் ஸொஸைடி எனப்படுவது.

இந்த ஸொஸைட்டியில் அங்கத்தினராக சேருகிறவர்கள் சொந்தமாக தங்கள் நிலத்தை வைத்துக் கொள்வார்கள். தாங்களே சொந்தமாக பயிர் செய்வார்கள். இதில், எந்தவிதமான கூட்டுறவு முறைப் பண்ணையும் இல்லை. அவர்கள் செய்கிற விவசாயத்தை கூட்டுறவு இயக்கத்தால் கிடைக்கிற சலுகையை வைத்துக்கொண்டு சிறந்த முறையில் நல்ல முன்னேற்றகரமான முறையில் செய்யமுடியும், இந்த சங்கத்தின் அடிப்படையில் துண்டு துண்டாக பல பாகங்களில் நிலம் இருக்குமானால்,

[Sri R. Venkataraman] [17th March 1959

ஒன்ருக, " கண்டிக்வஸ் " எரியாவாக இருக்குமாஞல் அந்தயிடத்தி லெல்லாம் நாம் இந்த சர்வீஸ் சொஸைடியைத்தான் வைக்க முடியும். துண்டு துண்டாக நிலங்கள் வைத்திருப்பவர்கள் ஒன்று சேர்ந்து சர்வீஸ் சொஸைட்டி மூலம் கிடைக்கும் நன்மையை எடுத்துக் கொண்டு அதன் மூலம் விவசாயத்தை சிறந்த முறையில் முன்னேற்றப் பாதையில் செய்வதற்கு இது வழிகோலும். அடுத்தபடியாக, ஜாயின்ட் பார்மிங் சொஸைட்டி என்ருல், அவரவர்களுக்குள்ள நிலங்களை ஒன்று சேர்த்து கூட்டுறவு சொஸைட்டி மூலம் விவசாயத்தை மாத்திரம் கூட்டுறவு முறையில் செய்வது. விவசாயம் செய்கிறபோது சொஸைட்டி எல்லாவித மான பொறுப்பையும் எடுத்துக் கொள்ளும். விதை போடுவது, உழுவது, பரம்படிப்பது, நீர்ப்பாசனம் செய்வது, அறுவடை செய்வது போன்ற எல்லாக் காரியங்களையும் அது செய்யும். ஆகும் செலவை கழித்த பிறகு எஞ்சிய மகசூலை அவரவர்கள் என்ன அளவிற்கு நிலம் வைத்துக் கொண்டிருக் கிருர்களோ அந்த நில அளவிற்குத் தகுந்தபடி அவரவர்களுக்கு விகிதாசாரம் பிரித்துக் கொடுக்கப்படும். இதுதான் ஜாயின்ட் பார்மிங் சொஸைட்டி. இதற்கு, சற்று மக்களிடம் அதிக ஒற்றுமை இருந்தால் தான் முடியும். இருக்கிறவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து சிறந்த முறையில் விவசாயம் செய்யவேண்டும், கிடைக்கக் கூடிய மகசூல் நிலம் வைத்திருக்கும் அளவின் அடிப்படையில் அந்தந்த விகிதாசாரப்படி கொடுக்கப் படும். அப்படிச் செய்வதற்கு, கூட்டாக சேர்ந்து சிறந்த முறையில் விவ சாயம் செய்தால் மகசூலை இரட்டிப்பாக்க முடியும் என்ற உணர்ச்சி ஏற்பட வேண்டும். இதற்கு அடுத்தபடியாக, டெனன்ட்ஸ் பார்மிங் சொஸைட்டி என்று இருக்கிறது. பெரிய அளவில் நிலம் வைத்திருக்கிற கோவில், மடங்கள் இவைகளெல்லாம் இன்று நிலத்தை குத்தகைக்கு ஏலம் விடு கிருர்கள். பணக்காரர்களாக இருப்பவர்கள் 200, 300, 500 எக்கர் என்று குத்தகைக்கு எடுக்கிருர்கள். மொத்தமாக, அந்தக் கோவிலிற்கு அல்லது தர்ம ஸ்தாபனத்திற்கு இவ்வளவு கொடுக்கிறேன் என்று சொல்லி விட்டு, எடுத்துக் கொண்ட நிலத்தை தனித்தனியாக வாரந்தார்களுக்கு பிரித்துக் கொடுத்து அவர்களிடத்தில் மகசூல் வாரமாகப் பெற்று கோவிலுக்கு கொடுக்க வேண்டியது போக பாக்கியை தாங்கள் எடுத்துக் கொள்ளும் முறைதான் இன்று நடக்கிறது. அப்படி, இன்டர்மீடியரி என்று சொல்லக் கூடியவர் ஒருவர் ஏற்படுகிருர். டெனன்ட்ஸ் பார்மிங் சொஸைட்டியில் இந்த இன்டர்மீடியரி இருக்கமாட்டார். தர்ம ஸ்தாபனம், கோவில்கள் நிலங்களில் நேரடியாக எந்தெந்த டெனன்ட்ஸ் இருக்கிருர்களோ அவர் களை எல்லாம் ஒன்று சேர்த்து ஒரு கூட்டுறவு சங்கம் அமைத்து அந்த கூட்டுறவு சங்கத்திற்கு இந்த நிலத்தை குத்தகைக்கு கொடுக்கப்படும். இன்டர்மீடியர்ஸுக்கு குத்தகை கொடுத்து வந்ததற்குப் பதிலாக கூட்டுறவு சொசைட்டிக்கு இந்தக் குத்தகை இருக்கும். அந்த சொசைட்டியைச் சேர்ந்தவர் சட்டப்படி 40 வாரம் என்ற முறையில், நிலத்திற்கு யார் உடமையாயிருக்கிருர்களோ அவர்களுக்கு குத்தகை கொடுத்து விடுவார்கள். உழைப்பாளிகளுக்கு கூலி கொடுத்து விட்டு அந்த மகசூலை அவர்களே அடையும் முறைதான் டெனன்ட்ஸ் பார்மிங் சொசைட்டி என்பது. பெரிய நிலச்சுவான்தார்கள் தங்கள் உச்ச வரம்புக்கு மிஞ்சிய நிலத்தை டெனென்ட்ஸ் பார்மிங் சொசைட்டியாக மாற்றிவிடலாம் என்று சொன்ஞல் அது நடக்காது. அந்தமாதிரி முறையை அனுஷ்டிப்பதற்கு யாருக்கும் எண்ணம் இல்லை என்றுதான் நான் நினைக்கிறேன். அடுத்த படியாக, கலெக்டிவ் பார்மிங் சொசைட்டியை எடுத்துக்கொண்டால் நிலம் பூராவும் சொஸைட்டிக்கு இருக்கும். ஜாயிண்ட் பார்மிங் சொஸைட்டி எப்படி தனி நபர்களுக்கு சொந்தமாயிருக்கிறதோ அதற்கு மாருக கலெக்டிவ் பார்மிங் சொஸைட்டியில் நிலம் சொஸைட்டிக்குச் சொந்தம். எல்லோரும் ஊழியம் செய்வார்கள். அதற்கு தக்கவாறு கூலி கிடைக்கும். பின் கிடைக்கிற மகசூலை தலா விகிதாசாரப்படி பிரித்துக்கொள்ளலாம் அல்லது போனஸ் பிரகாரம் எடுத்துக்கொள்ளலாம். யார் அதிகமாக உழைத்திருக்கிருர்களோ அவர்களுக்கு அதிகமாக போனஸும், யார் குறைவாக உழைத்திருக்கிருர்களோ அவர்களுக்கு குறைவான போனஸும் என்று பிரித்துக் கொள்வார்கள். இப்படி பலதரப்பட்ட முறையில் விவசாயத்தை கூட்டுறவு இயக்கம் மூலம் நாம் செய்யமுடியும். இதை

17th March 1959] [Sri R. Venkataraman]

எந்த முறையில் செய்வது என்பது, நிலம், அதில் மக்களின் அக்கறை, அவர்களுக்கு எந்தளவு ஒன்று சேர்ந்து வேலை செய்யவேண்டும் என்ற மனப்பான்மை ஏற்பட்டிருக்கிறது என்பதை எல்லாம் பொறுத்திருக்கும். ஆகவே இந்த அமைப்பை செய்யும்போது அந்தந்த ராஜ்ய சர்க்கார்கள் தான் எந்தத் துறையில் அமைப்பு செய்தால் நம் ராஜ்யத்திற்கு உகந்த முறையில் இந்தக் கூட்டுறவு விவசாய முறையைக் கொண்டு வரமுடியும் என்பதை ஒட்டி வகுத்துக்கொள்வோம். ஆகவே இன்று விவசாயத்தை நல்ல முறையில் கூட்டுறவு இயக்க மூலம் செய்ய வேண்டுமென்று முயற்சி செய்கிறபோது பல சொஸைட்டிகளை நாம் இப்பொழுது நடத்திக்கொண்டு வருகிறோம். தஞ்சை ஜில்லாவில் 4, 5, சொஸைட்டிகள், டெனன்ட்ஸ் பார்மிங் சொஸைட்டிகள் இருக்கின்றன. திருநெல்வேலி ஜில்லாவில் 2, 3 டெனன்ட்ஸ் பார்மிங் சொஸைட்டிகள் வைத்திருக்கிறோம். டெனன்ட்ஸ் பார்மிங் சொஸைட்டிகள் எல்லாம் ஓரளவு நல்ல முறையில்தான் நடக்கிறது என்று சொல்லவேண்டும். காரணம் என்னவென்றால், இதற்கு முன்பும் மற்றவர்களுக்காகத்தான் உழைத்துக்கொண்டிருந்தார் கள். அவர்கள் இப்பொழுது சொஸைட்டிக்காக வேலை செய்துகொண்டிருக் கிறார்கள். அந்த முறையில்தான் நாம் இன்று பரீட்சார்த்தமாக நடத்தி வருகிறோம். வருகிற வருஷத்தில்கூட 21 சொஸைட்டிகள் இது மாதிரி ஏற்படுத்தவேண்டுமென்று திட்டமிட்டிருக்கிறோம். ஆனால் மக்களிடத்தில் ஊக்கம் அதிகமாயிருக்குமானால் இதற்காக ஒதுக்கப்பட்ட தொகையை விட அதிகமாக செலவழிப்பதற்கும், இப்பொழுது இருப்பதை விஸ்தரிக்கவும், அதிகமாக பண்ணைகள் வைப்பதற்கும் இந்த ராஜ்ய சர்க்கார் தயாராக இருக்கிறது என்று நான் இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இதை, வெற்றிகரமாக நடத்தவேண்டுமென்பதுதான் சென்னை ராஜ்ய சர்க்காரின் முக்கியமான குறிக்கோள். இதை பரீட்சார்த்த மாகச் செய்து இது நடக்காது என்று ஏமாற்றுவதற்காகவோ அல்லது கெட்ட பெயர் சொல்லி இதை எதிர்ப்பதற்காகவோ யாராவது முயற்சி செய்தால் அதையெல்லாம் சமாளிக்க வேண்டுமென்று சென்னை ராஜ்ய அரசாங்கம் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறது. எங்களுக்கு கூட்டுறவு முறையில் விவசாயம் செய்வதில் பரிபூர்ண நம்பிக்கை இருக்கிறது. அதை நாங்கள் கட்டாயம் செய்து காட்டுவோம் என்ற உறுதியையும் நான் இங்கு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். கோவில் நிலங்கள் எல்லாம் 40–60 கொடுத்தார்களா? என்று கேட்டார்கள். கொடுக்கத்தான் செய்ய வேண்டும். அதற்கான முயற்சிகளையும் சர்க்கார் எடுத்துக்கொள்ளும் என்று நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, சில பிரச்னைகள் தனித்தனியாக சொல்லப்பட்டது. இன்று இருக்கக்கூடிய கூட்டுறவுச் சட்டம், பழைய காலச் சட்டம், இதை மாற்றியமைக்கவேண்டும். அப்படி மாற்றியமைக்காதவரையில் இதில் பெரிய விஸ்தரிப்பு ஏற்படாது என்று மாரிமுத்து அவர்கள் சொன்னார்கள். சர்க்காருடைய நோக்கமும் அதுவேதான். இந்த சட்டத்தை விஸ்தரிக்க வேண்டும், இதை சரியான முறையில் திருத்தி யமைக்கவேண்டுமென்பதற்காக இப்பொழுது நாம் ஒருசட்டத்தை " ட்ரூப்ட் " செய்து கொண்டிருக்கிறோம். அந்த சட்டத்தில் ஒரு முடிவு காணுவதற்குள் இப்பொழுது புதியதாக பல பிரச்னைகள் ஏற்பட்டி ருக்கின்றன. இதற்கு முன்னால் நாம் கூட்டுறவு சங்கம் என்று நினைத்தால் ஏதோ க்ரெடிட் சொஸைட்டிகள், மார்கெட்டிங் சொஸைட்டிகள் போன்ற விஷயங்களைத்தான் யோசித்துக்கொண்டிருந்தோம். ஆனால் இன்று அடிப்படையான பெரிய மாறுதலை செய்யக்கூடிய அளவு நாட்டிலிருக்கக் கூடிய விவசாயத்தை கூட்டுறவு முறையில் செய்யவேண்டுமென்று யோசனை செய்து வரும்போது எந்த முறையில் இந்தச் சட்டத்தை மாற்றி யமைக்கவேண்டும் அதற்கு உகந்தவாறு என்பதை மறுபடியும் புனர் பரிசீலனை செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. இன்னும் " நாஷனல் டெவலப்மெண்டு கவுன்சிலில் " கூட இது சம்பந்தமாக எந்த முறையில் கூட்டுறவு இயக்கத்தை நடத்தவேண்டும் என்று பரிசீலனைகள் 1-00 p.m.
நடந்துகொண்டிருப்பதனால் இதில் சற்று காலதாமதம் ஆகும். நல்ல முறையிலே இந்த சட்டம் அமையவேண்டும், மீண்டும் இந்தச் சட்டத்தை திருத்தவேண்டிய நிலைமை ஏற்படாமல் இருக்கவேண்டும் என்பதற்காகத்

[Sri R. Venkataraman] [17th March 1959

தான் இந்தக் காலதாமதம் ஆகிறதே தவிர, இந்த சட்டத்தை திருத்தவே வேண்டாம் என்ற காரணத்திற்காக அல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக நில அடமான பாங்குகளைப்பற்றி சில குறைபாடுகள் தெரிவிக்கப்பட்டன. நில அடமான பாங்குகள் கொடுக்கிற கடன் அதிக மான வட்டிக்குத்தான் கொடுக்கவேண்டியிருக்கிறது. இரண்டாவது ஐந் தாண்டுத் திட்டத்தின் கீழ் மத்திய சர்க்கார் இதற்கு ஓரளவு மான்யம் கொடுப்பதாகச் சொன்னார்கள். ஆனால் அதை அவர்கள் கொடுக்க இயலாமல் போய்விட்டதனால், இன்றைக்கு குறைவான வட்டிக்கு கடன் கொடுக்க முடியாமல் இருக்கிறது என்பதை ஸ்ரீ சுப்பிரமணிய கவுண்டர் அவர்களும், மற்றும் பலரும் எடுத்துச் சொன்னார்கள். இது உண்மை தான். நம் சர்க்கார் மத்திய சர்க்காரிடமிருந்து இதற்காக தனி மான்யம் பெற்று கடனுக்கு ஸப்ஸிடி கொடுக்கலாம் என்று நினைத்தோம். ஆனால் அந்தத் திட்டம் மாறிப்போய் விட்டதினால் அதைக் கொடுக்க முடியாமல் போய்விட்டது. இதற்காக போதுமான பணத்தை நாம் ஒதுக்கிக் கொடுப்போமானால், மற்ற துறையிலே நாம் கூட்டுறவு இயக்கத்தை வளர்ப்பது குறைந்து விடும் என்ற காரணத்திற்காக, எதற்கு முக்கியத் துவம் கொடுக்கவேண்டுமென்று ஆலோசனை செய்து இதற்குப் பணம் ஒதுக்காமல் விட்டு விட்டோம். அதே சமயத்தில் உத்தியோகஸ்தர்களுடைய செலவுகளை சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று சொல்லப்பட்டது. இந்த யோசனை சர்க்கார் பரிசீலனையில் இருந்து கொண்டிருக்கிறது. அதை ஓரளவு செய்வதற்கு முயற்சி செய்கிறேன் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நில அடமான பாங்குகள் கடன் கொடுக்கிற காலத்தில், ஜாயிண்டு பட்டாதார்களாக இருந்தால், கடன் கொடுப்பது கஷ்டமாக இருக்கிறது. கடனைக் கொடுத்து திரும்பி வராவிட்டால், மறுபடியும் சட்டசபையில் எத்தனை கடன் கொடுத்தார்கள், எவ்வளவு வசூலிக்கப்பட்டது, எவ்வளவு வசூலிக்கப்படவில்லை என்றெல்லாம் குற்றச்சாட்டுகள் சுமத்தப்படும். ஆகவே, இதில் நிர்வாகம் செய்கின்றவர்கள் மிகப் பொறுப்பாக இருக்க வேண்டும். கடன் கொடுக்கவேண்டியது அவசியம்தான். கடன் கொடுக்கா மல் பணத்தை பேய் மாதிரி காத்துக்கொண்டிருந்தால் அந்த சொஸை டியே ஏற்படுத்தாமல் இருந்து விடலாம். அதே சமயத்தில் பணத்தை ஏராளமாகக் கடன் கொடுத்துவிட்டு, வசூல் செய்ய முடியாமல் அது திரும்பி வராத நிலைமை ஏற்பட்டு சொஸைடியை மூடிவிடக்கூடிய நிலைமையும் வந்து விடக்கூடாது. அது தவிர்க்கப்படவேண்டும். பொறுப்பாக இருந்து பார்த்துச் செய்யவேண்டிய விஷயம் இது. அப்படிப் பார்த்து செய்யும் பொழுது யாருக்கு சட்டபூர்வமாக கடன் வாங்கக்கூடிய ஒரு ஜாமீன் இருக்கிறதோ, அதைப் பார்த்துத்தான் கொடுக்கவேண்டியிருக்கிறது. அதனால்தான் ஜாயிண்டு பட்டாதார்களாக இருக்கும்பொழுது இரண்டு பேர்களும் சேர்ந்து அப்ளிகேஷன் போட்டால் கடன் கொடுப்பது சு மமாக இருக்கும். ஜாயிண்டு பட்டாதார்களாக இருக்கக் கூடியவர்கள் தனித் தனியாக அப்ளை செய்தால், அதில் சிக்கல்தான் ஏற்படுகிறது. இப்பொழுது இருக்கிற சட்டத்தின்படி அதைத் தவிர்க்கமுடியாது என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும் இந்த நில அடமான பாங்குகள் சில இடங்களில் கடன் கொடுக்க முடியாத நிலைமையும் இருந்து வருகிறது. பழைய ஜமீன் பிரதேசங்களில் இன்னும் சர்வே ஆகாத இடங்களில் எந்த சொத்தின் மீது, எந்த ஜாமீனை வைத்துக்கொண்டு அவர்களுக்குக் கடன் கொடுப்பது என்ற நிலைமை ஏற்படுகிறது. அம்மாதிரி கஷ்டங்கள் இன்னும் தீரவில்லை. இப்பொழுது வெகு சீக்கிரம் சர்வே முடிந்து கொண்டிருக்கிறது. சர்வே முடிந்து விட்டால் இந்தப் பிரச்னைகூட வெகு சீக்கிரம் தீர்ந்து விடும். உதாரணமாக ராமநாதபுரம் ஜில்லாவில் ஒரு நில அடமான பாங்கு ஏற்படுத்தவேண்டுமென்று நினைத்தால்கூட, அங்கு இருப்பவர்களுக்கு இன்னும் சர்வேயெல்லாம் முடிவதற்கு முன்னால் கடன் கொடுக்க முடியாது. ஏனென்றால் பழைய ஜமீன் பிரதேசங்களில் சர்வே முடிந்து ரீசெட்டில்மெண்டு செய்யும் வரையில் யாருக்கும் கடன் கொடுக்கமுடியாது.

17th March 1959] [Sri R. Venkataraman]

யாருக்கு நிலம் சொந்தம் என்பதே தெரியவில்லை. ஆகவே, இந்த விதமான குறுக்கீடுகளெல்லாம் இன்றைக்கு நடைமுறையில் இருக்கின்றன. அவைகள் சீக்கிரம் அகற்றப்படும் என்று நான் நினைக்கிறேன்.

நில அடமான பாங்குக்கு கட்டிடம் வேண்டுமென்று ஸ்ரீ ராமலிங்கம் அவர்கள் சொன்னார்கள். அதற்காக 5 லட்ச ரூபாய் போட்டு பெரிய கட்டிடம் வாங்கினால், அது அவ்வளவு நல்லது அல்ல. பணத்தை கடன் கொடுப்பதற்கு உபயோகப்படுத்தவேண்டும். கட்டிடம் கட்டுவதற்கு அதிகமாக உபயோகப்படுத்தக்கூடாது என்ற காரணத்தினால் அதை நான் ஏற்றுக் கொள்ளவில்லை. சாதாரணமாக ஒரு நல்ல கட்டிடம் கட்டுவதற்கு அவர்கள் ஏற்பாடு செய்தால், சர்க்கார் எப்பொழுதும் துணை புரிவதற்கு தயாராக இருக்கிறது. அந்தத் துறையிலே அவர்கள் ஈடுபடுவார்கள் என்று நினைக்கிறேன். கடன் கொடுக்கும் விஷயத்தைப்பற்றி பேசும்போது, சொத்து இருப்பவர்களுக்குத்தான் கடன் கொடுக்க முடிகிறது. ஹரிஜனங்கள், லாண்டுலெஸ் லேபரர்ஸ், அதாவது நிலம் இல்லாத விவசாயிகள் ஆகியோர்களுக்கு கடன் கொடுக்க முடியவில்லை என்று பல அங்கத்தினர்கள் சொன்னார்கள். நான் ஆரம்பத்தில் சொன்னதுபோல இதில் கொஞ்சம் கஷ்டம்தான் இருக்கிறது. இதைத் தவிர்ப்பதற்கு சர்க்கார் ஒரு திட்டம் வகுத்துக்கொண்டிருக்கிறார்கள். அதாவது சொஸைடிகள் நிலம் இல்லாதவர்களுக்கு கடன் கொடுத்தால், அதில் ஏற்படுகின்ற நஷ்டத்தில் 10 சத விகிதம் சர்க்கார் ஏற்றுக்கொள்ளுகிறது என்று சர்க்கார் காரண்டி கொடுப்பதுபற்றி இப்பொழுது யோசனை செய்யப்பட்டு வருகிறது. ஆகவே அம்மாதிரி சர்க்கார் காரண்டி கொடுத்தால், அந்த அளவுக்கு கூட்டுறவு சங்கங்கள் நிலம் இல்லாதவர்களுக்கு உதவி செய்வதற்கு சாதகமாக இருக்கும்.

* SRI M. JAGANNATHAN : On a point of information, Sir. The Second Five-Year Plan has enunciated a scheme to advance loans on the basis of the production programme and anticipated crops. If that is implemented, this difficulty may be obviated. I want to know the attitude of the Government in respect of this scheme.

*THE HON. SRI R. VENKATARAMAN : ப்ரொடக்ஷன் என்ன செய்கிறார்களோ அதையொட்டி கடன் கொடுத்தால், அதிலே ஏற்படுகின்ற நஷ்டத்தை யார் கொடுப்பது என்று பாங்குகள் கேட்கிறார்கள். கொடுங்கள் என்று நாங்களும் சொல்லுகிறோம். அவர்களுக்கும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் தெரியும். ஆனால் ஜாமீன் இல்லாதவர்களுக்கு சொத்து இல்லாதவர்களுக்கு, ப்ரொடக்ஷனை நம்பி மாத்திரம் கடன் கொடுக்கவேண்டுமென்று சொல்லுகிறபொழுது, அப்படிக் கொடுப்பதிலே ஏற்படுகின்ற நஷ்டத்தை யார் தாங்குவது. தங்களால் முழுப் பொறுப்பையும் தாங்க முடியாது என்று பாங்குகள் எடுத்துச் சொல்லுகிறார்கள். அம்மாதிரி ஏற்படக்கூடிய நஷ்டத்தில் 10 சத விகிதம் சர்க்கார் ஈடு செய்தால் பாங்குகள் கொஞ்சம் லிபரலாக சொத்து இல்லாதவர்களுக்கு கடன் கொடுப்பதற்கு முன் வரலாம். அம்மாதிரி ஒரு திட்டத்தை இப்பொழுது யோசித்துக்கொண்டிருக்கிறோம். வருகிற ஆண்டில் இந்தத் திட்டம் நிறைவேற்றப்படும். அவ்வாறு நிறைவேற்றப்பட்டால் இதிலே இருக்கிற சங்கடங்கள் ஓரளவுக்குக் குறையும். எல்லாச் சங்கடங்களும் முழுவதும் தீர்ந்துவிடும் என்று சொல்ல முடியாது. ஓரளவுக்குக் குறையும் என்பதைத்தான் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக ''எக்ஸ்-ஸெர்வீஸ் மென்னைப்பற்றி'' பல குறைகள் சொன்னார்கள். இன்றைக்கு சென்னை ராஜ்யத்தில் இருக்கிற மாஜி ராணுவத்தினர்களுக்கு தனியாக எக்ஸ்-ஸெர்விஸ் மென் பண்டு ஒன்று இருக்கிறது. அந்த பண்டிலிருந்து அவர்களுக்கு உதவியெல்லாம் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஏழு டிரான்ஸ்போர்டு சங்கங்கள் அவர்களுக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவைகளில் 2 லாபத்தில் வேலை செய்யவில்லை. பாக்கி 5 சங்கங்கள் நன்றாக லாபத்தில் வேலை செய்கின்றன. அவர்களுக்காக " லாண்டு காலனிஸேஷன் சொஸைடிகளும் " ஏற்படுத்தியிருக்கிறோம்.

லாண்டு காலனேஸேஷன் சொஸைடி மூலம் அவர்களுக்கு இதுவரையில் 6,000 ஏகர் நிலம் "அஸைன்" செய்யப்பட்டிருக்கிறது. "போஸ்ட் வார்" கமிட்டியின் மெம்பர் என்ற முறையிலே நான் தெரிவித்துக்கொள்ளு கிறேன். இதில் இருந்த நிதி பூராவும் செலவாகிவிட்டது. மத்திய சர்க் காருக்கு "ப்ளாக் டே" கலெக்ஷனிலிருந்து வருகிற பணத்தில் நாம் பெரும் பகுதியை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று எழுதியிருக்கிறோம். அதை அவர்கள் ஒத்துக்கொண்டுவிட்டால், "ப்ளாக் டே" யில் கொஞ்சம் பணம் அதிகமாக வசூலித்து அவர்களுக்குச் செய்யவேண்டிய உதவியைச் செய்ய முன்வரமுடியும். மாஜி ராணுவத்தினர்களுக்கு இன்றைக்கு இருக் கக்கூடிய நிலைமை கஷ்டமாகத்தான் இருக்கிறது என்பதை ஒத்துக்கொள்ளு கிறேன். ஏனென்றால், அவர்களுக்காக இருந்த தொகை பூராவும் செல வழிந்துவிட்டது. அவர்களுக்கு கல்வி வசதி செய்து கொடுப்பதற்கும், வைத்திய வசதி செய்வதற்கும், இன்னும் அவர்கள் ஆஸ்பத்திரியில் தங்குவதற்கும் நாம் எல்லா பணத்தையும் இதுவரையில் செலவழித்துக் கொண்டுவந்து விட்டோம். இனி பணம் இல்லை. நான் இன்னொரு விஷ யத்தைக்கூட தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். 1946-ம் வருஷத்தில் யுத்தம் முடிந்துவிட்டது. பதினைந்து, 20 வருஷங்களுக்கும் மேல் அவர்களுக்கு சலுகைகளை நீடித்துக்கொண்டே போவது என்பது கஷ்டம் தான். அதற்கு வேண்டிய பணம் கிடைப்பதும் கஷ்டம். அவர்களுக்கு "ரிஹாபிலிடேஷன்" வேறு முறையிலும் செய்துதான் ஆகவேண்டும். இதையே அவர்கள் நம்பி இருப்பார்களேயானால், அது அவ்வளவு பொறுத்தமாக இருக்காது என்பதையும் நான் இந்த சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

வீடு கட்டும் திட்டத்தைப்பற்றி சில குறைகள் சொல்லப்பட்டன. சென்னை ராஜ்யத்தைப் பொறுத்த அளவில், வீடு கட்டும் திட்டத்திற்காக மத்திய சர்க்கார் நமக்குக் கொடுத்த உதவிக்கு மேலாகவே ராஜ்ய சர்க்கார் செல வழித்திருக்கிறது என்பதை புள்ளி விவரங்களுடன் காட்டுகிறேன். ஸ்டேட் அர்பன் ஹௌஸிங் ஸ்கீம்-க்காக நம்முடைய ராஜ்ய சர்க்கார் 17 லட்சம் ரூபாய் சென்ற வருஷத்தில் பட்ஜெட்டில் ஒதுக்கினோம். அந்தப் பணம் போதாமல் மேற்கொண்டு 3 லட்சம் ரூபாய் ஒதுக்கி, மொத்தம் 20 லட்சம் ரூபாயாகச் செய்தோம். அடுத்த வருஷத்திற்கு இந்தத் திட்டத்திற்காக 30 லட்ச ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். அதுபோல் நம்முடைய ராஜ்யத் தில் தனியாக கிராமாந்திரங்களில் வீடுகள் கட்டுவதற்காக சென்ற வருஷத் தில் 1958–59–ல் 3 லட்ச ரூபாய் ஒதுக்கினோம். அடுத்த வருஷத்திற்கு 3½ லட்ச ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம்.

அதே போன்று குறைந்த வருமானமுள்ளவர்களுக்கு வீடு கட்டுவதற் காக நாம் 19 லட்ச ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். இப்போது அதை 20 லட்சமாக மாற்றியிருக்கிறோம். இந்தத் திட்டங்களின் மூலமாக ஓரளவு தான் பிரச் னையை தீர்க்க முடியும். எல்லோருடைய வீட்டுப் பிரச்னையும் தீர்ந்துவிடும் என்று சொல்வதற்கில்லை. இதைத் தவிர லைப் இன்ஷூரன்ஸ் கார்ப்பொ ரேஷனிலிருந்து மத்திய தர வகுப்பினர்களுக்கு வீடு கட்டிக் கொடுப்பதற்காக இந்த வருஷம் 27 லட்சம் ரூபாய் பெறுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக் கிறது. அதாவது 1958–59-வது வருடத்திலேயே ஏற்பாடும் செய்துவிட்டோம். இதன் மூலம் மத்திய தர வகுப்பினர்களுக்கு ரூபாய் 15 ஆயிரம் வரை கடன் கொடுக்க முடியும். அதற்குத் தகுந்த முறையில் இது ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறது. இன்னும் கார்ப்பொரேஷனிலிருந்து கவர்ன்மெண்ட் உத் யோகஸ்தர்களுக்கு வீடு கட்டுவதற்கு, அதாவது வாடகைக்கு கொடுப்பதற்கு தகுந்த முறையில் அவர்களிடம் கடன் கோரியிருக்கிறோம். இது தவிர ராஜ்ய சர்க்காரே கோடம்பாக்கத்தில் சில இடங்களில் நிலங்களை வாங்கி நமது ராஜ்ய சிப்பந்திகளுக்கு ஹையர் பர்ச்சஸ் முறையில் வீடு கட்டிக் கொடுப்பதற்காக ஒரு திட்டம் உருவாகிக்கொண்டிருக்கிறது. ஆகவே இன் றைக்கு வீடு கட்டும் திட்டத்திற்காக ஓரளவு பணம் ஒதுக்கியிருக்கிறோம். அதோடு ஒதுக்கியிருக்கும் பணத்தைக்கொண்டு வீடு கட்டுவதற்கு போதிய அளவு இரும்பு சாமான்கள் கிடைக்காமல் கஷ்டப்படுகிறோம். 1958–59-ம் வருடத்தில் இரும்பு, எஃகு இவைகளை வாங்குவதில் மிக மோசமான நிலைமை ஏற்பட்டது. அந்த நிலைமை இந்த வருடம் அதாவது 1959–60-ல் வராது என்று எதிர்பார்க்கிறோம். அதன் மூலம் வீடுகள் அதிகமாக கட்டு வதற்கும் ஊக்கம் ஏற்படும் என்று நினைக்கிறேன்.

17th March 1959] [Sri R. Venkataraman]

மார்க்கட்டிங் ஸொஸைட்டிகளில் சில தவறுகள் ஏற்பட்டதாக எனக்குத் தெரியும். அதாவது சில பிரைமரி ஸொஸைட்டிகளில் மிளகாய் வற்றல், வெங்காயம் போன்றவைகளை வாங்காமல் பெரிய வியாபாரிகளிடமிருந்து ஏற்றுமதி செய்ததாக புகார்கள் வந்திருக்கின்றன. சர்க்கார் அதை விசாரணைக்கு அனுப்பியிருக்கிறது. விசாரணையும் நடந்துகொண்டே இருக்கிறது. எந்த இடத்தில் தவறுகள் நடக்கின்றன என்று சர்க்காருக்கு தகவல் கிடைக்கிறதோ, அவைகளையெல்லாம் விசாரணைக்குப் போட்டிருக்கிறோம். சில இடங்களில் பிராஸிக்யூஷன் செய்யப்பட்டிருக்கின்றது. சில இடங்களில் பிராஸிக்யூஷன் செய்யப்படாமல் "டிபார்ட்மென்டல்" ஆக்ஷன் எடுக்கப்பட்டிருக்கிறது. இந்தக் காரியத்தில் ஆங்காங்கு இருக்கக்கூடிய பப்ளிக் பிராஸிக்யூட்டர் எவ்விதம் அபிப்பிராயப்படுகிறாரோ அதே போன்று காரியங்கள் செய்யப்பட்டு வருகின்றன. அதல்லாமல் தவறுகள் நடந்திருக்கின்றன என்று அறிந்த உடன் சர்க்கார் ஏன் அவர்களை தூக்கில் போடவில்லை என்று கேட்டால், சட்டப்படி நடந்து கொண்டிருக்கிற, (ரூல் ஆப் லா) அரசாங்கத்தில் இம்மாதிரியான நடவடிக்கைகள் தான் எடுக்க முடியும். சட்டப்படி குற்றம் நிரூபிக்கப்பட்டால்தான் தண்டனை கொடுக்க முடியும். அவ்விதம் நிரூபிக்கப்படாதவர்கள் மீது நடவடிக்கை எடுக்க முடியாது. சில தவறுகள் நமக்கு உண்மையாகவே நடந்தவை என்று தெரிந்திருந்தாலும் கூட அதற்குப் போதுமான சாட்சியங்கள் இருந்தால்தான் சட்டபூர்வமாக கிரிமினல் நடவடிக்கை எடுக்க முடியும். சில கேஸ்களில் போதுமான அளவு சாட்சியங்கள் இல்லாததால் கிரிமினல் நடவடிக்கை எடுக்க முடியாமல் போய்விடுகிறது. சர்க்கார் வேண்டுமென்றே நடவடிக்கை எடுக்க மறுக்கிறார்கள் என்று சொன்னார்கள். அவ்விதம் ஒன்றும் கிடையாது. உண்மையில் எந்தவிதமான தவறும் கூட்டுறவு இயக்கத்தில் நடக்கக்கூடாது. அது மிகவும் சிறந்த முறையில் நடக்க வேண்டும் என்ற முறையில் தான் சர்க்கார் கண்காணிப்பாக இருந்து வருகிறது. இதில் எந்தவிதமான புகார்கள் வந்தாலும் கூட அதையெல்லாம் விசாரணை செய்யுமாறு அனுப்பப்படுகிறது. மொட்டை பெட்டிஷனாக இருந்தாலும் கூட அவைகளையும் கூட விசாரணைக்கு அனுப்பி வைக்கப்படுகிறது. விசாரணையிலிருந்து அறியக்கூடிய விவரங்களைக் கொண்டு அதன் மீது நடவடிக்கை எடுக்கப்படுகிறது.

Sri M. P. SUBRAMANIAM: ரிஸல்ட் தான் ஒன்றும் இல்லை).

இதில் முடிவு எடுப்பதற்கு குற்றம் அல்லது தவறு நிரூபிக்கப்பட வேண்டும். அந்தந்த இடங்களில் இருக்கும் பப்ளிக் பிராஸிக்யூட்டர் இதில் சாட்சியங்கள் ஒன்றும் இல்லை என்று சொல்லிவிட்டால் அவர்கள் மீது கிரிமினல் நடவடிக்கை ஒன்றும் எடுக்க முடியாது. அதையொட்டி சில இடங்களில் பிராஸிக்யூஷன் போட முடியாமல் போய்விடுகிறது. போதிய சாட்சியங்கள் இருக்கின்ற இடத்தில் எல்லாம் பிராஸிக்யூஷன் போடப்படுகிறது. உதாரணமாக தஞ்சாவூர் ஜில்லாவிலிருந்து ஒரு பெரிய புகார் வந்தது. அதைப் பற்றி ஒரு முறை விசாரணை செய்தோம். பப்ளிக் பிராஸிக்யூட்டர் அதைப் பற்றி கேஸ் கொடுப்பதற்கு சாட்சியங்கள் இல்லை என்று சொல்லிவிட்டார். பின்னும் நிர்வாகத்திலிருக்கின்றவர்கள் மேலும் ஆத்திரமாக இருந்ததின் காரணமாக கேஸ் போடப்பட்டது. கோர்ட்டில் அவர்களை விட்டு விட்டார்கள். இவ்விதமாக நிர்வாகத்தில் ஏற்படுகின்ற தவறுகளை சர்க்காருக்கு தெரிவிக்கப்படும் பொழுது சர்க்கார் அதில் கண்டிப்பாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். எந்தெந்த இடங்களில் தவறுகள் நடக்கின்றன என்று சர்க்கார் அறிந்த உடன் எந்தவிதமான பாரபட்சமும் இல்லாமல் நடவடிக்கை எடுக்கும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக ப்ரொக்யூர்மெண்ட் சம்பந்தமாக சில கருத்துகள் சொல்லப்பட்டன. இப்போது போதுமான பணவசதி இல்லை என்று கனம் சீனிவாச அய்யர் அவர்கள் சொன்னார்கள். இந்த நிலைமை மாறிவிட்டது. இப்போது இதற்காக 50 லட்சம் ரூபாய் அட்வான்ஸாகக் கொடுத்திருக்கிறோம். உடனடியாக இதன் மூலம் நெல், அரிசி வாங்குவதற்கு முடியும். இதைத் தவிர ஸ்டேட் பாங்கிலிருந்தும் 10 கோடி ரூபாய் ஸாங்ஷன் செய்திருக்கிறார்கள். அந்த உதவியைப் பெற்றும் வேண்டிய அளவுக்கு நெல், அரிசி இவைகளை வாங்கிக் கொள்ள முடியும். மேலும் தான்யங்கள் கொடுத்தால் பணம் கிடைக்காதோ என்று எண்ணுவதற்கு இடமில்லை என்பதை நான் இதன் மூலம் திட்டவட்டமாக தெரிவித்துக் கொள்கிறேன்.

[Sri M. P. Subramaniam] [17th March 1959

இறுதியாக இந்த மான்யக் கோரிக்கையின்மீது நடந்த விவாதத்தில் பங்கெடுத்துக்கொண்டவர்கள் அத்தனை பேருக்கும் நன்றி செலுத்திக் கொள்கிறேன். இந்த இயக்கம் மேலும் வெற்றி பெறுவதற்கு எல்லோரும் ஒத்துழைக்க வேண்டும். எந்தக் கட்சி பாகுபாடும் இல்லாமல் தான் இந்த இயக்கம் நடத்தப்படுகிறது. இதில் இருக்கின்ற முறையை எடுத்துப்பார்த்தால், கம்பெனிகளில் சில பேர்கள் அதிகமான பங்குகள் வைத்திருக்கிறார்கள். அதன் மூலமாக அவர்களுக்கு அதிகமான வோட்டுரிமை உண்டு. இதில் எவ்வளவு பங்கு எடுத்தாலும் ஒரே ஒரு வோட்டுக்குத்தான் உரிமை உண்டு. அதுவும் அந்த அங்கத்தினரே நேரில் வந்தால் தான் வோட்டுரிமையுண்டு. ஆகவே தவறுகள் எங்கேயாவது ஏற்படுகின்றன என்று சொன்னால் நிச்சயமாக ஜெனரல் பாடி கூட்டத்தை போட்டு அதில் தவறுகளை கண்டிக்கவேண்டும். அவ்விதம் அதில் இருக்கின்ற அங்கத்தினர்கள் எல்லாம் விறுவிறுப்பாக இருந்தால்தான் இந்த இயக்கம் வெற்றி பெற முடியும். ஆகவே அங்கத்தினர்கள் அனைவரும் இந்த இயக்கத்தில் கவனம் செலுத்த வேண்டும். அங்கத்தினர்களை நம்பித்தான் இந்த இயக்கம் வெற்றி பெற முடியும். இதில் தவறுகள் ஏற்படுகின்ற நேரத்தில் தங்களுக்கு வேண்டியவர்களாக இருந்தாலும் சரி, வேண்டாதவர்களாக இருந்தாலும் சரி, தவறுகள் செய்வதாக இருந்தால் யாரையும் விடமுடியாது என்கிற நிலைமை இருக்க வேண்டும். சில தவறுகள் சர்க்காருக்குத் தெரியாமற் போகலாம். அங்கத்தினர்கள்தான் இதில் முக்கிய பொறுப்பு எடுத்துக் கொள்ள வேண்டும். அதோடு அங்கத்தினர்களைக் கூட்டுறவு இயக்கத்தில் அதிகமாக சேர்ப்பதற்கு நாம் வேலை செய்ய வேண்டும். " அங்கத்தினர்கள் வாரம் " என்று வருடாவருடம் கொண்டாடுகிறோம். அங்கத்தினர்களைச் சேர்க்கவில்லை என்றால் அதற்கு அப்பீல் போடலாம் என்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்த முறையில் ஒவ்வொருவரும் அங்கத்தினராக சேருவதற்கு உரிமையிருக்கிறது என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும். இன்னும் அதிகப்படியான அளவில் நல்ல முறையில் செயல்படுவதற்கு ஏதாவது சட்டங்கள் தேவை என்றால் அதையும் செய்வதற்கு அரசாங்கம் தயாராக இருக்கிறது. ஆகவே இதில் ஈடுபட்டிருக்கின்றவர்கள் இந்த இயக்கத்தில் தவறுகள் ஏற்படாத வண்ணம் சற்று விறுவிறுப்போடு இருப்பார்களானால் இந்த இயக்கம் வெற்றியடையும் என்பதைத் தெரிவித்துக் கொண்டு, இந்த மான்யத்தை எல்லோரும் ஆதரிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். இதில் (கட் மோஷன்) வெட்டுப்பிரேரணை ஒன்றும் தேவையில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். கனம் அங்கத்தினர் அவர்கள் வெட்டுப்பிரேரணையை வாபஸ் பெறும்படி கேட்டுக் கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: The question is—

'That the allotment of Rs. 1,86,49,100 under Demand XXI—Co-operation—be reduced by Rs. 100.'

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER: The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 1,86,49,100 under Demand XXI—Co-operation.'

The Demand was put and carried and the Grant was made.

1-20 p.m. DEPUTY SPEAKER: The House will now adjourn and meet again at 8-30 a.m. to-morrow.

The House then adjourned.